# ஆசிரியர்

**த**மிழ் நாட்டு எழுத்தாளர்களின் கதைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ருசியுள்ளது; தமிழ் நாட்டிலே முதல் முதலாகக் கிராமச் சூழ்நிலையையும் அங்கே வாழும் மக்களின் இதயக் குமுறல், சில்லறைப் பூசல், அன்பு நிறைந்த உள்ளம் இவற்றையும் வெகு அழகாக எழுதித் தமக்கெனத் தனியான ஓர் இலக்கிய வழியைச் சிருஷ்டித்துக் கொண்டவர் சங்கரராம். அவருடைய 'மண்ணாசை' என்ற நாவலில் தமிழ் நாட்டு மண்ணையே நம்பி வாழும் விவசாயிகளின் வாழ்க்கையைத் தெளிவாகச் சித்திரித்து, இலக்கிய ரசிகர்களின் பாராட்டைப் பெற்றவர். அதைப் போலவே காட்டில் உலவும் மிருகங்களை வைத்துக்கொண்டு ஜீவன் ததும்பும் பல வேட்டைக் கதைகளை இவர் உணர்ச்சியுடன் எழுதியிருக்கிறார். நடுத்தரக் குடும்பத்தினரின் வாழ்க்கையை நன்றாக அலசி ஆராய்ந்து இவர் எழுதிய 'பார்வதி', 'காரியதரிசி', 'நீலா' முதலிய நாவல்கள் இவரைத் தமிழ் நாட்டின் முக்கியமான நாவலாசிரியர்களில் ஒருவராக்கிவிட்டன.

தமிழில் மட்டும் அல்லாமல் அற்புதமான தம் சிறுகதைகளையும் நாவல்களையும் தாமே ஆங்கிலத்திலும் திறம்பட எழுதி வெளியிட்டிருக்கிறார். இவர் 'நீலா' விரைவில் எங்கள் பிரசுரமாக வெளிவரும்.

# அருள் பண்ணை

சங்கரராம்







கலைமகள் காரியாலயம்

சென்னை-4

# அருள் பண்ணை

## பதிப்புரை

ஸ்ரீ சங்கரராம் அவர்கள் ஆங்கிலம் தமிழ் இரண்டிலும் வல்லவர். கிராமச் சூழ்நிலை களைப் பாங்காக அமைத்துக் கிராம வாழ்க்கை சம்பந்தமான கதைகளையும் நாவல்களையும் எழுதி, படிப்பவர்களுக்குக் கிராமச் சூழ்நிலையில் பாத்திரங் களோடு பாத்திரமாக நட மாடும் உணர்ச்சியை உண் டாக்கும் திறமை இவர் பேனு வுக்கு உண்டு. ஆங்கிலத்தில் எழுதுவதிலும் வல்லவர்.

அருள் பண்ணை என்ற இது, கிராமப் பண்ணைக்காரர் இரு வருக்குள் ஏற்பட்ட போட்டி யையும் அதனால் ஏற்பட்ட விளைவுகளையும் பற்றிய ரஸ மான சிறிய நாவல்.

—பதிப்பாளர்.




# அருள் பண்ணை

## அத்தியாயம் 1

**கா**லை சுமார் எட்டு மணி இருக்கும். வீராசாமி பிள்ளை, திண்ணையில், கால் மேல் காலைப் போட்டுக்கொண்டு, சாய்மனை மீது சாய்ந்தவாறு உட்கார்ந்திருந்தார். அவர் யோசனையில் ஆழ்ந்திருக்கும்போதெல்லாம் அவருடைய வலது பாதம் ஆடுவது வழக்கம். இப்பொழுது அது ஓயாமல் துடிப்பது, அவருடைய சிந்தனையின் தீவிரத்தை எடுத்துக் காட்டியது. சிறிது நேரத்துக்குப் பிறகு, ஏதோ முடிவுக்கு வந்தவர்போல் அவர் எழுந்து, எதிர் வரிசையில் ஐந்தாறு வீடுகளுக்கு அப்பால் இருந்த கண்ணுயிரம் பிள்ளை வீட்டைப் பார்த்தார். அங்கே இன்னும் கும்பல் இருக்கத்தான் இருந்தது. 'கூறுகெட்டவன்!' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டு திண்ணைக்கு முன், நிழலுக்காகப் போட்டிருந்த பந்தலில் குறுக்கும் நெடுக்குமாக அவர் நடக்க ஆரம்பித்தார்.

நரைத்தும் நரைக்காமலும் இருந்த தலையில் ஒரு குடுமி. குடுமிக்கு முன் ஒரு கன்றுக் குடுமி! அதை அடிக்கடி தமது வலது கையால் தடவிக் கொடுக்காமல் அவரால் இருக்கவே முடியவில்லை. வயது ஐம்பதுக்குள்ளாகவே இருக்கும்; திடமான சரீரம்; உயரமானவர்களோடு சேர்க்கப்பட வேண்டியவரே.

கூண்டில் அடைக்கப்பட்ட புலியைப்போல், அவர் உலா விக்கொண்டிருந்தபொழுது, கண்ணுயிரம் பிள்ளையின் பண்ணையாள் பாளையமும், அவன் பின் அவன் மகன் ஆண்டியும் வருவதைக் கவனித்தார். ஆண்டியின் தலையில் ஒரு பெரிய வாழை இலைக் கட்டோடு, புடலங்காய்களும் ஒரு வாழைப்பழத் தாறும் இருந்தன. பாளையமும் தலையில் ஒரு பரங்கிக் காயையும் கையில் கயிற்றில் கோத்துக் கட்டப்பட்டிருந்த பல உரித்த தேங்காய்களையும் சுமந்து வந்தான். வீராசாமி பிள்ளைக்கு ஒன்றும் புரியவில்லை.

"என்னடா, பாளையம், யாருக்குக் கல்யாணம்!" என்று அவர் கிண்டலாகக் கேட்டார். "கல்யாணத்துக்குமேலேங்க! யசமான்! இன்னி ராவுலே பெரிய விருந்தாச்சுங்களே! சின்ன அய்யா, உருளைக் கிளங்கு இன்னும் என்னு என்னமோ சீமைக் காய்கறிகளை வேறே வாங்கிக்கிட்டு வராராம். எல்லாம் ஒன்பது மணி வண்டிலே வந்து இறங்கிட மாட்டாங்க?"

"பலே ஆள் ஆயிட்டயே, பாளையம்! சங்கதியைச் சொல்லுடா!"

"அதைத்தானே சொல்ல வாயெடுத்தேனுங்க. எங்க சின்னய்யா, ஏதோ பரிச்சையிலே தேறினுர் அல்ல. அதுக்கப்புறம் ஜர்ஜன் ஆகப் படிக்கப் போருராம்."

"ஜர்ஜனு?"

"ஜர்ஜனுங்க. தலையை வாங்கி, தலையை வச்சிடுவாங்களாமே."

"ஓ, ஸர்ஜனு?—அது அவ்வளவு சுலபமாய் நடக்கிற காரியமா? வைத்திய கலாசாலையிலே முதல்லே சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்புறம் நாலு வருஷம் படிக்கவேண்டும். ஆனுனப்பட்ட தாண்டவராயப் பிள்ளை மகனுக்கே இடம் இல்லையின்னு சொல்லிவிட்டார்களே?"

"நீங்க, என்னுங்க, யசமான்! படிப்பிலே சின்ன அய்யாவை மிஞ்சினவன் ஒருத்தன் இருக்கானு? அவரும் அவரோடு படிச்சவங்க, எழுபது எண்பது பேரும் போனுங்களாம்.

அஞ்சாறு பேரைத்தான் எடுத்துக்கிட்டாங்களாம். இப்போ சின்ன அய்யாவும் அந்த அஞ்சாறு பிள்ளைகளுந்தான் வருதுங்க."

"என்னமோ எனக்கு நம்பிக்கை இல்லை. நீ ஏதோ ஒன்றுக்கு ஒன்றைச் சொல்கிறாய்!"

"என்னாத்துக்குங்க? சின்ன அய்யா இந்த வழியேதானே போகணும்? அவரே சொல்லுவார். கேட்டுக்கோங்க" என்று பாளையம் சிறிது அருவருப்போடு போய்விட்டான்.

வீராசாமி பிள்ளைக்குத் தம்மை அறியாமல் பொறுமை உண்டாகத்தான் உண்டாயிற்று. கண்ணாயிரம் பிள்ளையின் ஒரே மகன் மாதவன், படிப்பில், ஒரு வகுப்பில் கூடத் தவறாமல், அபிவிருத்தி யடைந்து, கடைசியில் நகரத்துக்குச் சென்று, கல்லூரிப் பரீட்சையிலும் தேறியது, கிராமத்துக்கே தெரிந்த விஷயம். அவன் ஸர்ஜனும் ஆகக்கூடும் என்பதை அவருக்கு நம்ப இஷ்டமில்லை. ஆனால், அவருடைய மகன் பாலனோ, வயது பன்னிரண்டு ஆகியும் நான்காவது வகுப்பைத் தாண்டவில்லை. தீனியிலும் விளையாட்டிலுமே அவனுடைய ஊக்கம் ஓங்கி வளர்ந்தது. பாலன் தாயைக்கொண்டுவிட்டான் என்பது அவருடைய அபிப்பிராயம். பாலனுக்கு நேர் விரோதமாக அவருடைய புதல்வி மீனாட்சி, எல்லா விஷயங்களிலும் தன்னை ஒத்திருப்பதாக அவருக்கு ஒருவிதப் பெருமையும் உண்டு. இப்பொழுது, பாலன் ஒரு முறுக்கைக் கடித்துக்கொண்டு ஓடி வருவதைப் பார்த்து, "அடே, ஒரே இடத்தில் உட்கார்ந்துகொண்டுதிங்கக்கூடாதா?" என்று அவர் நொந்துகொண்டதற்கு, "இல்லை அப்பா!" என்று சொல்லிக்கொண்டு, பாலன் தன் தமக்கை மீனாட்சியைத்தேடிக் கொண்டு உள்ளே ஓடினான். முற்றத்தில் மீனாட்சி, அம்மியில் மருதாணி இலையை அரைத்துக்கொண் டிருந்தாள். "அக்கா, அக்கா! மாது அத்தான், இன்னும் யாராரோ, ஒன்பது மணி வண்டியிலே வருகிறார்களாம்" என்றான்.

"உனக்கு யார் சொன்னது?" என்றாள் மீனாட்சி அரைப்பதை நிறுத்தி.

"ஆண்டி சொன்ஞன், அக்கா. இரட்டை மாட்டு வண்டி ரயிலடிக்குப் போயிருக்கிறதாம். இன்னிக்கு மாது அத்தான் வீட்டிலே பெரிய விருந்தாம். லோகு அத்தை நம் எல்லாரையும் வரச் சொன்ஞள்."

"லோகு அத்தையே சொன்ஞளா?—அப்போ அத்தான் நிச்சயமாய் வருகிருர்!" என்று மீஞட்சி குதித்து எழுந்தாள்.

"நான் இன்னிக்கி ப்ரைவேட்டுக்குப் போகவேண்டாமே?"

"அய்யோ, அப்புறம் அப்பா கோபித்துக்கொள்வார். போய்த் தலையைக் காட்டிவிட்டு, அம்மா சீக்கிரம் வரச் சொன்ஞள்னு வந்துவிடு" என்று பாலுவை அனுப்பிவிட்டு, மீஞட்சி, மருதாணியை அப்படியே அரைபட்டதும் படாததுமாகக் கிண்ணத்தில் எடுத்து வைத்தாள். பிறகு, சோப்பை எடுத்துக் கொண்டு, கிணற்றங்கரைக்குச் சென்று, ஒரு கால் மணி நேர மாவது முகத்தைக் கழுவியிருப்பாள். அதன்மேல், தன் பெட்டியைத் திறந்து, உடுத்துக்கொள்ள வேண்டிய ஆடையைப் பொறுக்க, தனக்கு ஏராளமாயிருந்த துணிமணிகளைக் கீழும் மேலுமாக மற்ருெரு கால்மணி நேரம் புரட்டினுள். பிறகு, 'டிரஸ்' செய்துகொண்டு, கண்ணுடியின் முன் தன் அலங்கா ரத்தை அவள் பூர்த்தி செய்துகொண் டிருந்தபொழுது குளத் துக்குப் போயிருந்த அவளுடைய தாயார் பார்வதியம்மாள் திரும்பி வந்தாள். தன் புதல்வி அழகு செய்துகொள்வதைப் பார்த்ததும், "என்னம்மா இன்றைக்கு?" என்று அவள் ஆனந் தத்தோடு கேட்டாள்.

"ஒன்பது மணி வண்டியிலே, மாது அத்தான் வருகிருர். அம்மா!"

இதைக் கேட்டதும், பார்வதி அம்மாளின் முகம் முற்றும் பூரித்தது. ஆஞல் மறு கணத்திலேயே, ஒரு விதமான சோகம் அவள் முகத்தில் படர்ந்தது. பேசாமல் தன் வேலையைக் கவனிக்க உள்ளே சென்ருள்.

மீஞட்சிக்குப் பதிஞறு பிராயம் இருக்கும். பெண்மைக் குரிய நற்குணங்களெல்லாம் அவளிடத்தில் குடிகொண் டிருந்த

தால், அவை அவள் முகத்துக்கு ஓர் அலாதியான கவர்ச்சியை அளித்தன. அதோடு, அழகாய்ச் சுளித்த முகவெட்டும், யௌவனத்தின் எழிலும் சேரவே, அனைவரின் அன்பையும் நன்மதிப்பையும் பெறக் கூடிய ஒரு வசீகரமும் அவள் தோற்றத்தில் ஏற்பட்டிருந்தன. மாது அத்தானின் வரவை ஆவலோடு எதிர் பார்த்தவாறு, அவள் வாசற்புறம் அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தாள். அரை மணி ஆகியும் அத்தானைக் காணோம். பிறகு, பாலு, எதையோ கேட்டு உளறினானே என்று அவள் யோசித்துக்கொண்டிருக்கும் பொழுது, மாட்டுவண்டி வரும் ஓசை கேட்டது. விரைந்து தெரு வாசலுக்குச் சென்றாள். வண்டியில் இளைஞர்கள் உரக்கப் பேசுவது கேட்டது. அதில் அத்தானின் குரலும் இருந்தது. வண்டி, அவர்கள் வீட்டண்டை வந்ததும், மாது அத்தானே வண்டியின் பின் புறத்திலிருந்து இறங்கி வந்துவிட்டார்!

"நமஸ்காரம், மாமா—சௌக்கியமா, மீனா? நான் வைத்தியக் கலாசாலையில் சேர்ந்துவிட்டேன், மாமா! நம் ஊரைப் பார்க்க என் சிநேகிதர்களில் சிலர் வந்திருக்கிறார்கள்..."

"நீ வைத்தியக் கலாசாலையில் சேர்ந்தது எனக்கு எப்பொழுதோ தெரியுமே!" என்றார், வீராசாமி பிள்ளை அசட்டுச் சிரிப்புடன்.

"எப்படித் தெரிந்தது?"

"உங்கள் பாளையந்தான் சொன்னான்.

"ஓ! எல்லாரையும்விடப் பாளையத்துக்குத்தான் அதிக சந்தோஷம்—நமஸ்காரம், மாமி. ஏன் இளைத்துப் போயிருக்கிறீர்கள்?" என்று இப்பொழுது உட்புறமிருந்து வந்த பார்வதி அம்மாளை, மாதவன் கேட்டானே தவிர அவனுடைய திருஷ்டியெல்லாம் மீனாட்சியின்மீதுதான் இருந்தது. "கையெல்லாம் என்ன சிவப்பு, மீனா?—ஓ! மருதாணியா!"

"ஆமாம், அத்தான்" என்று மீனாட்சி சிரித்துத் தலையைச் சிறிது தாழ்த்தினாள்.

"சரி, சிநேகிதர்களை வீட்டில் விட்டு விட்டு அப்புறம் வரு கிறேன்" என்று மாதவன் வண்டியின் முன் நடந்தான். வீரா சாமி பிள்ளை தம் குடும்பத்துடன் உள்ளே சென்றார். "என்ன, பார்வதி, நம்ம கிராமத்துக்கு இனிக் குறைவில்லை. நாட்டு வைத்தியத்துக்குத் தகப்பன், இங்கிலீஷ் வைத்தியத்துக்கு மகன்!" என்றார் பிள்ளை கிண்டலாக. கழுத்துச் சுளுக்கிக்கொள் வதுபோல், பார்வதி தலையைக் குலுக்கினாள். "இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு துவேஷம் கூடாது. தங்கமான பிள்ளை! அவன் எப்படிச் சம்பாதித்துக் கொட்டப் போகிறான் பாருங் கள்!"

"சம்பாதிப்பானே இல்லையோ, இப்பொழுது பணத்தை வாரிக் கொட்டிக் கொடுக்கத்தான் இருக்கிறான். விருந்தாம்! சிநேகிதர்களாம்! பண்ணை இன்னும் இரண்டு வருஷம் தாங் கும்.—என்ன, மதுரை, ஆட்களை விட்டு விட்டாயா?" என்று, இப்பொழுது உள்ளே நுழைந்த தன் பண்ணையாளைப் பிள்ளை கேட்டார்.

"எங்கிருந்து விடறதுங்க, யசமான்? சேரியிலே ஒரு ஆள் இல்லை. எல்லாரும் மூணு நாளைக்குப் பெரிய பண்ணைக்காரர் தோட்டத்தைக் கொத்தறாங்களாம். தினம் ஒரு ரூபாய் கூலி! ஒரு வேளைச் சாப்பாடாம்!"

"பாரேன், பாரேன்! இப்படிக் கூலி கொடுத்துக் கட்டுமா? உருப்படுகிற குடும்பமா அது! இவன் நாசமாய்ப் போகிறதும் இல்லாமல் எல்லாரையுமல்ல கெடுக்கிறான்! எதற்காகத் துவே ஷம் என்று அடித்துக்கொள்கிறாயே. இப்படிச் செய்கிறவனைக் கோவிலிலா வைத்துக் கும்பிடுவோம்!—இப்பொழுது, என் னடா செய்கிறது. மதுரை? மூன்று நாள் தாங்காதே? செடி கெட்டுப்போகுமே?"

"நாளைக்குக் கொத்தியாகணு மிங்க, யசமான். வாங்க, சொக்கம்பாளையம், ராமாபுரம் சுத்தி வரலாம். ஒரு இருபது ஆளாவது இல்லாட்டி என்ன வேலை நடக்குமுங்க?"

"இப்பொழுது, நாங்கள் ஊர் ஊராய்த் திரியவேண்டும். இல்லாவிட்டால், அவனைப்போலக் கடனை வாங்கி, ஒன்றுக்கு இரண்டாகக் கூலி கொடுக்க வேண்டும். இவன் நாசமாய்ப் போக! ஊரைப் பாழாக்கிவிட்டானே, பாவி!—அவனுக்கு நீ பரிந்துகொண்டு வருகிறாய்! சரி, என் அங்கவஸ்திரத்தைக் கொண்டுவா" என்று வீராசாமி பிள்ளை எரிந்து விழுந்தார். பார்வதி அம்மாள் உள்ளே சென்று, மேல் வேட்டியைக் கொண்டுவந்து கொடுத்ததும், அதைத் தோள்மீது போட்டுக் கொண்டு, மதுரையுடன் அவர் வெளியேறினார். தாயும் மகளும் பேசாமல் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

## 2

கண்ணாயிரம் பிள்ளையின் வீட்டுக்கும் வீராசாமி பிள்ளையின் வீட்டுக்கும் இடையில்தான் 'கண்ணாடிப் பாட்டி'யின் வீடு இருந்தது. கண்ணாடிப்பாட்டியின் பெயர் வேதவல்லியம்மாள் என்று சில வயோதிகர்களுக்கு மாத்திரமே தெரியும். சிறு பிராயத்திலிருந்தே கண்ணாடி போடும்படி நேரிட்டதால், ஊருக்கெல்லாம் அவள் கண்ணாடிப்பாட்டியாக விளங்கினாள். மூன்று பெண்களும் இரண்டு பிள்ளைகளும் இருந்துங்கூட, கண்ணாடிப் பாட்டி அந்திம காலத்தில், தனிமையாகக் காலத்தைத் தள்ள வேண்டி இருந்தது. அதற்குக் காரணம் ஓரளவுக்கு அவளே என்று சொல்லலாம். ஏனெனில், கிழவிக்குப் பார்வை மிகக் குறைந்துபோன போதிலும் தன் வாழ்நாளை யெல்லாம் கடத்திய அகத்திலேயே தன் உயிரை விடவேண்டுமென்ற ஒரு தீர்மானம் அவளிடம் இருந்தது. அதற்கேற்றவாறு, அவளுடைய பிள்ளைகளும் மருமகன்மார்களும் நல்ல உத்தியோகப் பதவிகளில் அமர்ந்திருந்ததால், அவர்கள் ஊர் ஊராகச் சுற்றவேண்டியிருந்தது. ஆனால் பாட்டிக்குச் சிறிது தேக அசௌக்கியம் ஏற்பட்டாலும் அவளுடைய மக்கள் ஓடிவராமல் இருக்கவில்லை. அதோடு, அநேகமாக உறவினர்களாக இருந்த கிராமவாசிகள், அவளிடத்தில் வெகு அன்போடு நடந்துகொண்டார்.

கள். முன்கை நீண்டால் முழங்கை நீளாமல் போகுமா? கிராமத்தில் கண்ணுடிப் பாட்டியின் தயாள குணத்திற்குக் கண்ணுயிரம் பிள்ளை ஒருவரைத்தான் ஒப்பிடலாம். எவ்விதத்திலாவது, அவளுடைய சகாயத்தைப் பெருதவர்கள் கிராமத்தில் ஒருவரும் இல்லை. அப்படியிருக்க, நாள் தவருமல், யாராவது ஒருவர் வீட்டிலிருந்து, விசேஷமாகச் சமைக்கப்பட்ட பதார்த்தங்களோ தின்பண்டங்களோ பாட்டிக்கு வந்துகொண்டே இருக்குமென்பதில் என்ன ஆச்சரியம்?

வந்ததும் வராததுமாய், கண்ணுடிப் பாட்டிக்காக வாங்கி வந்த காபித் தூளையும் சாத்துக்குடிப் பழங்களையும் எடுத்துக் கொண்டு மாதவன் பாட்டியின் வீட்டுக்கு வந்தான். சில நிமிஷங்களுக்குள், முன்னதாகப் பேசிக்கொண்டதுபோல், மீனுட்சியும் தன் தாயார் செய்த கார சோமாசிகளுடன் வந்து சேர்ந்தாள்.

மாதவனேடு பேசிக்கொண் டிருந்த பாட்டி "யார் அது?" என்று விசாரித்தாள்.

"நான்தான், பாட்டி! மீனு"

"மீனுவா? வா, அம்மா. ஐயோ, எதையோ தூக்கிக் கொண்டு வந்திருக்கிருயே!"

"கொண்டு வரட்டுமே, பாட்டி? அவளுக்கு அதைவிட என்ன வேலை?" என்று மாதவன் வாய் பேசியதே தவிர, அவனுடைய கண்கள் மீனுவின் கண்களோடு உறவாடின.

"என்ன அம்மா, அது?" என்ருள் பாட்டி.

"கார சோமாசி!"

"ஓ அப்படியானுல் நான் ஒன்றை எடுத்துக்கொள்கிறேன்" என்று அவன் மீனுட்சியின் கையிலிருந்த பாத்திரத்தைப் பிடுங்கி ஒன்றை எடுத்துக்கொண்டான்.

"என்ன, அத்தான் இது? பாட்டிக்குக் கொண்டு வந்ததையா எடுத்துக்கிறது?"

"ஒன்று இல்லை, எல்லாத்தையும் தின்னட்டுமே அம்மா? குழந்தைதானே?" என்ருள் பாட்டி.

"ருசி பார்க்கிறேன், பாட்டி......ஊம், பாத்திரத்தைக் கொண்டுபோய் உள்ளே வையுங்கள்!" என்றான் மாதவன். பாட்டி மெள்ள அதை எடுத்துக்கொண்டு உள்ளே போனாள்.

"ஊம், இதை நீயும் வாயில் போட்டுக்கொள்" என்று அவன் ஒரு துண்டை மீனாவின் வாயில் போட முயன்றான்.

"ஊ...ஹூம்" என்று அவள் தலையை அசைத்து, முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

"போகிறது, இதாவது வேண்டுமா?" என்று அவன் தன் சட்டைப் பையிலிருந்து, ஒரு தந்தச் சீப்பு, கண்ணுக்கு மை இட்டுக்கொள்ளும் சிமிழ், மற்றும் அலங்காரத்துக்குத் தேவையான சில சாமான்களை அவள் முன் வைத்தான். மீனாட்சி, ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்த்தாள். "அப்பா கண்களில் பட்டால், குதிப்பாரே!" என்றாள். "எனக்கு அதற்குமேல் குதிக்கத் தெரியும். சரி..." என்று அவள் காதோரமாய்த் தன் முகத்தை வைத்து, ஏதோ ரகசியமாகப் பேசிக் கடைசியில், "குர்...ர்...ர்" என்றான்.

"போ, அத்தான்! காதை அடைக்கிறது! எனக்குக் கஷ்டமாய் இருக்காதாக்கும்!"

"எட்டு வருஷத்துக்கு முந்தி, என்னைக் கடித்தாயே, அப்போ எனக்குச் சுகமாய் இருந்திருக்கு மாக்கும்!" என்று தன் முழங்கையிலிருந்த தழும்பைக் காட்டினான். மீனாட்சி அதைத் தடவிப் பார்த்தாள்.

"அப்போ எனக்கு என்ன தெரியும் அத்தான்?"

"இப்போ மாத்திரம் என்ன தெரிந்துவிட்டது?"

இப்பொழுது, கண்ணுடிப் பாட்டி, வழியிலிருந்த ஒரு கிண்ணத்தைப் பார்க்காமல் உதைத்துத் தள்ளினாள்.

"பார்வை ரொம்பக் குறைந்துவிட்டதுபோல் இருக்குதே. பாட்டி?" என்றான் மாதவன்.

"ஆமாண்டா, கண்ணு! ஒரு முழ தூரத்துக்கு அப்பால் ஒன்றும் தெரிகிறதில்லை."

"நாலு வருஷம் போகட்டும். நானே உங்களுக்கு வைத்தியம் செய்கிறேன்.

"நீ சொல்வதே போதுமடா, அப்பா! நான் இன்னும் அவ்வளவு காலம் பிழைத்திருக்க வேணுமா!" என்று பாட்டி சிரித்தாள்.

"நாலு வருஷமா படிக்கவேணும் அத்தான்?" என்றாள் மீனாட்சி சிறிது ஆச்சரியத்தோடு.

"காற்றாய் ஓடிவிடும் மீனு! நாலு வருஷத்துக்குள் பத்துத் தடவையாவது வராமல் இருக்கப் போகிறேனா?"

"அதற்குள் கல்யாணம்பாட்டிலே நடக்கட்டுமே" என்றாள் பாட்டி. மாதவன் சிரித்தான்.

"வெகு சுலபமாகச் சொல்லிவிட்டீர்களே? இப்பொழுதெல்லாம் வீராசாமி மாமா எங்கள்மீது கட்சி கட்டிக்கொண்டு இருக்கிறாரே பாட்டி. தீராப் பகை யாகிவிடும்போல் இருக்கிறதே! நாலு வருஷங்களிலாவது புத்தி மாறுதாவென்று நினைக்கிறேன்."

"அவன் கிடக்கிறான்" என்று கண்ணாடிப் பாட்டி அலட்சியமாய்ச் சொன்னாள். பிறகு, "நான் வழிக்குக் கொண்டு வருகிறேன். லோகுவும் பார்வதியும் என்றைக்கோ போட்டுக் கொண்ட திட்டமாயிற்றே அது" என்றாள்.

"எங்களை மாத்திரம் வம்புக்கு இழுக்க வேண்டாம் பாட்டி" என்று பயந்தவன்போல், மாதவன் பாசாங்கு செய்தான்.

"ஆமாம், பாட்டி, இல்லாவிட்டால், அப்பா எங்க வீடு இடிந்து விழுவதுபோல் கத்தி, எல்லோர் உயிரையும் எடுத்து விடுவார். ஏன் அத்தான், அங்கே பெண்கள்கூட டாக்டர்களாவதற்குப் படிக்கிறார்களாமே?"

"ஆமாம்."

"நீ அவர்களோடு பேசுவாயா?"

மாதவனுக்கும் கண்ணாடிப் பாட்டிக்கும் சேர்ந்தாற்போல் சிரிப்பு வந்தது.

"ஏண்டி கண்ணு, நீயும் அத்தான்கூடவே இரேன்!"

"போ, பாட்டி!" என்று மீனாட்சி சலுகையோடு பாட்டியின்மீது சாய்ந்துகொண்டாள். பாட்டியும் அவளை அன்போடு அணைத்துக்கொண்டாள்.

"உனக்கென்ன? நீ பாட்டிக்குச் செல்லப் பேத்தி" என்றான் மாதவன்.

"நீ செல்லப் பேரன் இல்லையாடா, ராஜா. நீங்கள் இரண்டு பேரும் பயப்பட வேண்டாம். நான் கல்யாணத்தை நடத்தி வைக்கிறேன். என்னை அறியாமல் வீராசாமி செய்துவிடுவானா? அவனுக்கு அவ்வளவு தைரியமா?"

"நீங்கள் இருக்கிறபோது எங்களுக்கு என்ன பயம் பாட்டி. மீனாவை ராத்திரி விருந்துக்கு வரச் சொல்லுங்கள். நான் சொன்னால் கேட்கமாட்டேன் என்கிறாள்."

"ஆமாண்டா, விருந்துக்கு இப்படியா அழைக்கிறது?"

"இல்லை பாட்டி, மேளதாளத்தோடு நானே அவர்கள் வீட்டுக்குப் போய் அழைக்கப் போகிறேன்."

"அப்போ, போகத்தான் வேணும் அம்மா."

"இன்னொரு விஷயம், பாட்டி. நானும் என் சிநேகிதர்களும் வெகு சகஜம். அவர்கள் வீட்டுச் சங்கதி எல்லாம் எனக்குத் தெரியும். அவர்கள் மணந்துகொள்ளப் போகும் பெண்களையும் பார்த்திருக்கிறேன். மீனாவையும் அவர்கள் பார்க்க வேண்டாமா?" நான் அவளைப்பற்றி எவ்வளவோ சொல்லியிருக்கிறேன்..."

"ஓஹோ! அதுக்காகவா?—நான் வரவே மாட்டேன்!"

"இதென்ன பைத்தியம், பாட்டி! அப்பாவின் பெண் தானே?"

"அதெல்லாம் சரிப்படாது. நீ என்ன வேணும்னாலும் சொல்."

"அப்படிச் சொன்னால் முடியுமா தங்கம்?" என்றாள் பாட்டி குறுக்கிட்டு. "நாளைக்கு அவனோடு, எவ்வளவு பட்ட

ணங்களுக்குப் போக வேண்டுமோ? எவ்வளவு பேரோடு பழக வேண்டுமோ? எங்கள் ருக்மிணியைப் பார்."

"இது நாட்டுப் புறந்தானே, பாட்டி?"

"ஊம், நாட்டுப் புறம்! நீ எந்தப் புறமோ?"

"நீ போகத்தான் வேணும், மீனு!" என்றாள் பாட்டி.

"நீயும் அத்தானோடு சேர்ந்துகொண்டு பேசுகிறாயே, பாட்டி. அப்பா சங்கதி உனக்குத் தெரியாது. அவருடைய உத்தரவில்லாமல் நான் எப்படிப் போவேன்?" என்று மீனாட்சி தன் உள்ளத்தை வெளியிட்டாள்.

"அதற்கு நான் இருக்கிறேன், அம்மா. போக வேண்டாமென்றால் விட்டுவிடுவேனா?" என்று பாட்டி தைரியம் ஊட்டினாள்.

இப்பொழுது, "மாது, மாது!" என்று மாதவனின் தோழன் முத்துச்சாமி கூவுவது காதில் விழவே, "என்னைத் தேடுகிறார்கள்! நான் போக வேண்டும். இதோ பார், மீனு, நீ கட்டாயம் வர வேண்டும்! என்ன?" என்று கெஞ்சுவதுபோல், மீனாட்சியின் முகவாய்க்கட்டையை அவன் பிடித்துக்கொண்டான்.

'சரி' என்பதுபோல் அவளும் தலையை அசைத்தாள். அதன்மேல், மாதவன் அவ்விடத்தை விட்டு ஓடினான். சிறிது நேரத்துக்குப் பிறகு மீனாட்சியும் தன் வீட்டுக்குத் திரும்பினாள்.

மணி பன்னிரண்டு ஆகியும், வீராசாமி பிள்ளை சாப்பாட்டுக்கு வரவில்லை. பார்வதி அம்மாள் வீட்டுக்கும் வாசலுக்கும் நூறு தடவையாவது நடந்திருப்பாள். பத்து மணிக்கு, எந்த வேலை எப்படி இருந்தாலும், தம் சாப்பாட்டை முடித்துக்கொள்பவர், இன்று இன்னும் வராததைக் குறித்து அவளுக்குக் கவலையாக இருந்தது. பிறகு சுமார் ஒரு மணிக்கு, வியர்த்து, இரைக்க இரைக்க, தமக்கு வலது கைபோல் இருந்த பண்ணையாள் மதுரையுடன் வீராசாமி பிள்ளை வந்து சேர்ந்தார். திண்ணையில் உட்கார்ந்து, வியர்வையைத் துடைத்தவாறு, "மதுரைக்குச் சாப்பாடு இருக்குமா?" என்று அவர் கேட்டார்.

"சாப்பாட்டுக்கென்ன? இன்னும் இரண்டு பேருக்குக் கூட இருக்கும். சரி, எழுந்து கைகால் அலம்பிக்கொள்ளுங்கள்" என்றாள் பார்வதி அம்மாள்.

"பசி வேறே இருக்குதா? ஊரை நாசமாக்குகிற அந்தப் பாவி இருக்கிறபோது, எங்கெங்கே அலைந்து வரோம் தெரியுமா? மணி மங்கலம் எங்கே, ராமாபுரம் எங்கே...!"

"எதுக்காக?"

"அந்தப் பாவி கண்ணுயிரம், ஊருலே இருக்கிற ஆளுகளை எல்லாம் வளைச்சுப் போட்டு விட்டானே; ஆளுக்கு ! நாளைக்கு ஒரு ரூபாயாம். விலாப் புடைக்க மத்தியானச் சாப்பாடு வேறே யாம். ஒவ்வொருத்தன் ஒரு படி அரிசி தின்பானே ! இப்படிக் கூலி கொடுத்து, சம்சாரிக்குக் கட்டுபடியாகுமா! மிளகாய்த் தோட்டத்தைக் கொத்தருளும்? மீதிப்பேர் தங்கள் தோட்டத் தைக் கொத்த வேண்டாமா?"

"இரண்டு மூணு நாளுலே கொத்தி, எரு வைக்காட்டி, செடிங்க என்னுத்தைக் காய்க்கும்? ஊர், ஊராய்ச் சுத்தி, முப் பது ஆளுகளைப் பிடிக்கிறதுக்குள்ளே தாவு தீர்ந்து போச்சு அம்மா!" என்று மதுரை ஒத்துப்பாடினன்.

"இல்லே, நானுந்தான் கேட்கிறேன். விவசாயம் எதுக்கா கச் செய்யறது? இரண்டு காசு சம்பாதிக்கிறதுக்கா, இல்லே, முதலே எல்லாம் போக்கடிச்சுக்கிறதுக்கா? இவன் ஆண்டி யாய்ப் போகட்டும், வேலன் சாவடியிலே இருக்கிறவர்கள் எல்லார் கையிலேயும், ஓட்டைக் கொடுத்திடறேன் என் கிருனே! இவன் ரெண்டு ரூபாய் கொடுத்தால், முக்கால் ரூபாய்க்கு எனக்கு எவன் வேலே செய்வான்? நயவஞ்சகக் காரன், நயவஞ்சகக்காரன்! இவன் எண்ணந்தான் என்ன வென்று எனக்குத் தெரியவில்லேயே? இனி சும்மா இருக்கிறதில் உபயோகமில்லே. மதுரை...!"

"சரி, நீங்கள் முதலிலே சாப்பிடுங்கள். அப்புறம் எல்லாம் பேசிக்கொள்ளலாம்!" என்று பார்வதி அம்மாள் அவரை உள்ளே அழைத்துக்கொண்டு போனுள்.

முன்னதாகச் சாப்பாட்டை முடித்துக்கொண் டிருந்த மீனாட்சி, தாயாரையும் தகப்பனாரையும் உட்கார வைத்துப் பரிமாறினாள். சாப்பாடு நடந்துகொண் டிருக்கும்பொழுது, யாரோ வாசற் கதவை இடிக்கும் சத்தம் கேட்டு, மீனாட்சி விரைந்து சென்று கதவைத் திறந்தாள். கண்ணாயிரம் பிள்ளை யும் அவர் மனைவி லோகநாயகி அம்மாளும் உள்ளே நுழைந் தனர்.

## 3

மீனாட்சி, தனக்கு உண்டான திகைப்பைக் காட்டிக் கொள்ளாமல் சமாளித்துக்கொண்டு, கண்ணாயிரம் பிள்ளையை யும் அவர் மனைவியையும் அன்புடன் வரவேற்று, கூடத்திலிருந்த ஊஞ்சல் பலகையில் அமர வைத்தாள்.

"அப்பாவுக்கு அதிக வேலைபோல் இருக்குது இன்றைக்கு. இப்பொழுதுதான் வந்தார். தயிர் போடப் போகிறேன். ஐந்து நிமிஷத்தில் வந்துவிடுவார்கள்" என்றாள் பின்னர்.

"ஒரு அவசரமும் இல்லை, அம்மா. மெள்ள வரட்டும்" என்று கண்ணாயிரம் பிள்ளை சொல்லிக்கொண் டிருக்கும் பொழுதே, மீனாட்சி உள்ளே சென்றாள்.

"உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். மிளகாய்த் தோட்டத்துப் பேச்சையே எடுக்காதீர்கள். கோபத்தைக் காட்டாதீர்கள். உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு. வீடு தேடி வந்தவர்களை அவமதிக்கக்கூடாது – என்ன ?" என்று உள்ளே பார்வதியம்மாள் தாழ்ந்த குரலில் வெகு உருக்கத்தோடு கணவனைக் கெஞ்சிக்கொண் டிருந்தாள்.

"சரி, சரி," என்று வீராசாமி பிள்ளையும் தலையை அசைத் தார். பசி தீரவே, அவருடைய ஆத்திரமும் சற்று அடங்கிற்று. பிறகு, இருவரும் கைகளை அலம்பிக்கொண்டு வர, லோக நாயகி அம்மாள் சரேலென்று எழுந்து, மலர்ந்த முகத்துடன் பார்வதி அம்மாளை அணுகினாள். வீராசாமி பிள்ளையும், "வாங்க" என்றவாறு கண்ணாயிரம் பிள்ளையின் சமீபத்தில்

ஊஞ்சலில் உட்கார்ந்தார். "ஏது, இந்த வேளையிலே இரண்டு பேருமாய்ப் புறப்பட்டு வந்தீர்களே ?"

"தம்பி மாதவன், வைத்தியக் கலாசாலையில் சேர்ந்திருக்கிறானே இல்லையோ; தன்னோடு படிக்கிற பிள்ளைகள் சிலரை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறான், சிறு பிள்ளைதானே. இந்த மாதிரி விஷயங்களிலே ஈடுபடுகிறதைப்பற்றிச் சந்தோஷப்பட வேண்டியதுதானே ? என்ன சொல்கிறீர்கள் ?—ஊம், நம்ப வீட்டாரும் அருணகிரி வீட்டாரும் கட்டாயம் விருந்துக்கு வர வேணுமின்னு எங்களுக்கும் ஆசை. அவனுக்கும் ஆசை; ஆகையினாலே, ராத்திரி நீங்கள் எல்லாரும் சாப்பாட்டுக்கு வரவேணும். அவனும் கொஞ்ச நேரத்துக்குப் பிறகு இங்கே வருவதாகச் சொன்னான். என்ன மீனாட்சி, உனக்குந்தான் இந்தப் பேச்சு" என்று கண் கொட்டாமல் கவனித்துக்கொண்டிருந்த மீனாட்சியைப் பார்த்துக் கண்ணாயிரம் பிள்ளை சொன்னார். மீனாட்சி, ஓர் அசட்டுச் சிரிப்புடன் தன் தகப்பனாரைப் பார்த்தாள். அவர், "சரிதான், ஆனால் எனக்கும் என் சம்சாரத்துக்கும் ஒருபொழுதுங்களே—" என்று இழுத்தார். "அப்புறம், நாங்கள் வராத போனால் மீனாட்சியும் வரக் கூச்சப்படும் !"

இப்பொழுது கண்ணாயிரம் பிள்ளையின் மனைவி லோகநாயகியம்மாள் முந்திக்கொண்டாள்.

"மீனா, வேற்று மனிதர்கள் வீட்டுக்கா போகிறாள் ? நன்றாய்ச் சொன்னீர்கள் ! மீனாவை எங்கள் வீட்டுக் குழந்தையாக அல்லவா நாங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறோம் ? ஒரு பொழுதாயிருந்தால் என்ன, எல்லாம் சிறிது பலகார பக்ஷணங்களைச் சாப்பிடலாம் !" என்று அந்த அம்மாள் ஒரு போடு போட்டாள்.

வீராசாமி பிள்ளைக்குக் கண்ணாயிரம் பிள்ளை ஒரு விபரீதப் பைத்தியமாகத் தோன்றியதானாலும், அவருக்கு லோகநாயகி அம்மாளைக் கண்டால், எக்காரணத்தினாலோ, சிறிது அச்சந்தான்.

" குழந்தைகள் மாத்திரம் போய்விட்டு வரட்டுமே?" என்ருர் வீராசாமி பிள்ளை, தம் மனைவியைப் பார்த்து.

"குழந்தைகளும் வரவேண்டும், நீங்களும் வரவேண்டும். சாப்பிடாவிட்டால், வரக்கூடாதா என்ன?" என்ருள் லோக நாயகி அம்மாள். வீராசாமி பிள்ளையின் முகத்தில் அசடு வழிந் தது. பிறகு அவர் கண்ணுயிரம் பிள்ளையோடு வேறு விஷயங் களைப்பற்றிப் பேசஆரம்பிக்கவே லோகநாயகி அம்மாள் பார்வதி யம்மாளுடன் உள்ளே சென்று, இரவுச் சமையலுக்குத் தேவை யான ஈயம் பூசிய பாத்திரங்களைச் சேகரித்துக்கொண்டாள்.

அன்றிரவு, வீராசாமி பிள்ளை விருந்துக்குப் போக மறுத்து விட்டார். மீனுட்சியும் பாலனும் மாத்திரம் சென்ருர்கள்.

"உங்களோடு போகாமல் எனக்கும் ஒரு பொழுதாக்கி விட்டீர்களே! நாலு பேரோடு வேடிக்கையாய் விதவிதமான பதார்த்தங்களைச் சாப்பிட்டு வராமல் - வெங்காய சாம்பாராம், உருளைக்கிழங்குப் பொறியலாம், அவியலாம், பாதாம்கீராம் - பாதாம்கீரென்ருல் உங்களுக்கு ரொம்ப இஷ்டமாச்சுதே!" என்ருள் பார்வதியம்மாள் சிரித்துக்கொண்டு. பிள்ளையின் முகத்திலும் புன்முறுவல் தோன்றியது "உனக்கு ஆசையா யிருந்தால், போய்ச் சாப்பிட்டுவிட்டு வா!" என்ருர்.

"என்னைத்தான் போகாமல் செய்துவிட்டீர்களே! இருந் தாலும், நீங்கள் இவ்வளவு பகை வைத்துக்கொள்ளக் கூடாது. விடிந்தால், அவர்கள் முகத்தில் நாம் விழிக்கவேண்டும், நம் முகத்தில் அவர்கள் விழிக்கவேண்டும்."

" உனக்கென்ன தெரியும்? அவனாலே கஷ்டங்கள் ஒன்ரு இரண்டா? அவன் சம்சாரம் பிரமாதமாகப் பேச வந்துவிடு கிருளே! அவனை ஊதாரிச் செலவு செய்யாதேன்னு தடுக்கக் கூடாது? அவளுக்கு அவனுக்கு மேலே வீண் ஜம்பம். முந்தா நாள் ஒரு பிச்சைக்காரிக்கு ஒரு புதுப் புடைவையை எடுத்து, அப்படியே கொடுத்துவிட்டாளாம்!"

"இதோ, அந்த அம்மாவைப்பத்திப் பேச நமக்கு யோக் கியதை இல்லை. செல்வத்திலே பிறந்து வளர்ந்தவள். அவளு

டைய பெருந்தன்மை என்ன, இரக்க சுபாவமென்ன! நல்லது பொல்லாது இன்றால் ஓடிவந்து முந்தி நிற்பாளே! அவளுடைய மகனும் அவளையேதான் கொண்டிருக்கிறான். அதனாலேதான் அவளுக்கு அதிருஷ்டம்."

"ஆமாம், அதிருஷ்டந்தான்! புலிப்பாளையத்து நாயகரண்டை வாங்கின கடன், அப்படியே நிற்கிறது. தேள் விஷம் போல வட்டி மட்டும் ஏறிக்கொண்டு போகிறது. அவன் அதை அடியோடு மறந்திட்டான். நாளைக்குக் கழுத்து மேலே கத்தி வைக்கிறபோதல்ல தெரியும்!"

"மகன் சம்பாதிக்கமாட்டான்! ஊதி எறிந்து விடுகிறான்!"

"ஆமாம், ஊத வேண்டியதுதான். ஊதாரிக்கு அது ரொம்ப சுளுவு! இப்பவே அவன் அப்பனாலே முக்கால் திட்டம் ஆகிவிட்டான். இப்போ, எதற்காக இவ்வளவு வீண் செலவும் டம்பமும்?"

"உங்களுக்கு எதுதான் வீண் செலவு இல்லை? சாப்பிடுவதுகூடத் தண்டச் செலவுதான்! போகுது, உங்கள் ஒரு பொழுதை முடித்துக்கொள்ளுங்கள். நானும் ரெண்டு பருக்கையை வாயில் போட்டுக்கொண்டு, அவர்கள் வீட்டுக்குப் போகிறேன்."

"உனக்குப் பலகாரம் திங்கணுமின்னு இருக்குது!"

"ஆமாம், போங்களேன். உங்களுக்கும் பாதாம்கீர் கொண்டு வரேன்!" என்றாள் பார்வதி அம்மாள்.

"ஏய், பைத்தியம், கேட்டுத் தொலைக்காதே!"

"அவர்களாய்க் கொடுத்தால்?"

வீராசாமி பிள்ளை சிரித்தார்.

"சிரித்தால் என்ன அருத்தம்?—ஐயோ, கடவுளே! சரி, எழுந்திருங்க. சமீபமானாலும் இருட்டில் குழந்தைகள் தனியாய் வருவது எனக்கு இஷ்டமில்லை" என்று அவள் கணவனுக்குச் சாப்பாட்டைப் போட்டு, தானும் உண்டு, கண்ணாயிரம் பிள்ளை வீட்டுக்குச் சென்றாள்.

அங்கே ஒரே குதூகலமாக இருந்தது. பிள்ளைகள், பெரிய திண்ணையில் உட்கார்ந்துகொண்டு, தங்களில் ஒருவனைப் பாடும் படி வற்புறுத்திக்கொண் டிருந்தனர். அவன் பாடாமல் கோமா ளித்தனம் செய்துகொண் டிருந்தான். சிரிப்பும் கரகோஷமும் ஓங்கி நின்றன. இவற்றையெல்லாம், சாந்தமாய் ஆனந்தத் தோடு மற்றத் திண்ணையின் கோடியிலிருந்து கவனித்துக்கொண் டிருந்த கண்ணுயிரம் பிள்ளை, பார்வதியம்மாளைக் கண்டதும், எழுந்து, "வாங்க, வாங்க. அவன் வரவில்லையா ?—லோகூ! வந்திருக்காங்க, பார்" என்று தம் மனைவிக்கு அறிவிப்புச் செய் தார். லோகநாயகி அம்மாளும் விரைந்து வந்து, பார்வதியம் மாளின் கரங்களை அன்புடன் பிடித்து, உள்ளே அழைத்துச் சென்றாள்.

"இவனுக்கு என்ன தெரியும்? எங்கள் பாலுவும் அவர் களோடு கும்மாளம் அடித்துக்கொண் டிருக்கிறானே?" என் றாள் பார்வதியம்மாள். பெருமையோடு.

"நாளைக்கு அவனும் அப்படி ஆகவேண்டியவன்தானே! சரி, ஒரு பக்ஷணம் விடாமல் நீங்கள் ஒவ்வொன்றையும் சாப்பிட வேண்டும்!"

"இதுதான் ஒருபொழுதா!" என்று பார்வதியம்மாள் சிரித்தாள்.

"ஒருபொழுதென்றால், சாதந்தான் சாப்பிடக்கூடாது; மீதியெல்லாம் சாப்பிடலாம். எனக்கு அப்படித்தான் அம்மா! வழக்கம்!" என்று லோகநாயகி அம்மாள் தின்பண்டங்களை வழங்க ஆரம்பித்தாள்.

"மீனுகூட இறக்கை கட்டிக்கொண்டு பறக்கிறாளே! வீட்டில், இங்கேயிருக்கிற பாத்திரத்தை அங்கே வை என்றால், உடம்பை எட்டுக் கோணல் செய்துகொள்வாள்."

"அது பிறந்தகம், இது..." அவள் மேலே சொல்வதற் குள், "அந்தப் பாக்கியம் அவளுக்குக் கிடைக்காது, அம்மா!" என்று பார்வதி முடித்தாள்.

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்?"

" உங்களுக்குத் தெரியாததா ? மீனாவின் தகப்பனாரின் போக்கே அலாதி ஆயிற்றே ?"

" ஆமாம், கடவுள் கிருபை இருந்தால் யாருடைய போக்கு என்ன செய்ய முடியும் ? எனக்கு என்னமோ மீனா எங்கள் வீட்டுப் பெண்தான் என்று முழு நம்பிக்கையும் இருக்கிறது. அதைப்பற்றி இப்பொழுது என்ன கவலை ? இந்தப் பிள்ளைகள் எல்லாம் ஒரு கட்டுப்பாடாய், நாலு வருஷத்துக்குக் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லையாம். அவர்கள் டாக்டர்கள் ஆகிவிட வேண்டுமாம். அதுவும் எங்கள் மாதவன் ஒரு தீர்மானத்துக்கு வந்தால் அதை முடித்தேதான் தீருவான் !"

தன் பெயரைக் கேட்டதும், "என்ன அம்மா ?" என்று மாதவன் அவர்களிடம் வந்தான்.

" ஒன்றுமில்லை அப்பா, எங்களுக்குள் ஏதோ பேச்சு !"

" இதோ, மீனா, உள்ளே நறுக்கி வைத்த ஆப்பிள் துண்டங்களைக் கொண்டு வந்து வையேன். மறந்தே போயிட்டுது !" என்றான் மாதவன்.

" அவர்களுக்கு முன்னாலேயா !—ஊம், நான் மாட்டேன் " என்று தலையைப் பலமாக அசைக்கவே, அவளது நீண்ட பின்னலின் நுனி மாதவனின் முகத்தில் பட்டது. " நீ கொண்டுவராத போனால் போகுது, என் கன்னத்தில் அடிக்காதே !" என்று குறும்புத்தனமாகச் சொல்லிவிட்டு அவன் போனான். தாய்மார்கள் ஒருவரை ஒருவர் மௌனமாகப் பார்த்துக்கொண்டனர்.

இரவும் பகலும், பாலையம் தன்னோடு இருக்காவிட்டால், கண்ணாயிரம் பிள்ளைக்கு ஒரு வேலையும் ஓடாது. ஒன்றும் செய்யாவிட்டால் அவனோடு ஏதாவது பேசிக்கொண்டாவது இருக்க வேண்டும்.

" என்ன பாலையம், ஆண்டி இன்னும் வரவில்லையே ? நீ சொல்ல மறந்துவிட்டாயா என்ன?"

" சொன்னேனுங்க யசமான். பஜனை மடத்துக்குப் போயிட்டானோ என்னமோ ?"

"சின்னப் பயல், தின்கிற வயது. சாப்பிட்டுவிட்டு வீட்டுக்கும் கொண்டு போவான்னு நினைத்தேன்" என்றார் பிள்ளை.

"வராமல் இருக்க மாட்டானுங்க. அம்மா இப்பவே புறப்பட்டு விட்டாங்களே. நான் வீட்டு வரையிலும் வரட்டுங்களா?" என்று, தன் மக்களுடன் கிளம்பிக்கொண் டிருந்த பார்வதி அம்மாளைப் பார்த்துப் பாளையம் கேட்டான்.

"வேண்டாம் அப்பா! நாலடி போகிறதுக்குத் துணை எதற்கு?" என்று சொல்லிவிட்டு, அந்த அம்மாள் தன் குழந்தைகளுடன் வீட்டுக்குச் சென்றாள்.

அவர்கள் போனதும், "ஐயா வந்திருந்தால் எவ்வளவு நல்லாயிருக்கும்! எவ்வளவு கூட்டி வச்சாலும், தனியாவே போறாரே?" என்றான் பாளையம்.

"அவனுக்கு என்னைக் கண்டால் பிடிக்கவில்லை. என்ன செய்கிறது? ஆனால், நான் அவனை ஒரு வார்த்தை தூஷணையாகச் சொன்னதில்லை. சொல்லவும் மாட்டேன்!" என்றார் கண்ணாயிரம் பிள்ளை.

"அந்த மதுரையாலே அவர் பாதி கெட்டாருங்க!" என்றான் பாளையம்.

"ஊம், மதுரை என்ன செய்வான்? அவரவர்கள் பிறந்த வேளை. எல்லாத்துக்கும் காரணம்: கடவுள் மேலே நம்பிக்கை போயிட்டுது. தினை விதைத்தவன் தினை அறுப்பான்; வினை விதைத்தால் வினையைத்தானே அறுக்கணும்? ஜனங்களுக்கு அது தெரிய மாட்டேங்குதே?—உன் மகன் வராப்போலே இருக்குதேடா, அவன்தானே?" என்று அவர் கூர்ந்து கவனித்தார்.

"ஆமாங்க—ஏண்டா இவ்வளவு நேரம்?" என்று பாளையம் தன் மகனை விசாரித்தான்.

"ஏரிக்கரையோடே வந்தேன். பூச்சி, பொட்டு இருக்குதான்னு சின்ன ஐயா கொடுத்த டார்ச்சு விளக்கைப் போட்டுக்கிட்டே வந்தேன். நாம் அஞ்சு காணி சம்பா நட்டிருக்கமே, அந்த நிலத்துக் கோடியிலே ஒரு ஆள் போலே தெம்பட்டுது. அதன் மேலே நின்று, அந்தப் பக்கம் விளக்கைப் போட்டுப்

பார்த்தேன். யாரும் தெம்படவில்லே. ஆனு, எனக்கு ஒரு ஆளேப் பார்த்தாப்போலத்தான் இருந்தது. அது, ஏரி உடைச்சிக்கிட்டுதே, அதுக்கு நேரே இருக்குது இல்லேயா?—அங்கே ஒரு பேய் நடமாடுதின்னு பெருமாள் சொல்லியிருந்தான்."

"போடா பைத்தியக்காரா! பேயாவது பிசாசாவது? நாம் தான் முனியாண்டிக்கு மாதம் தவருமல் பொங்கல் இடருேமே!" என்ருன் பாளேயம் குறுக்கிட்டு.

"நீ என்ன அப்பா! விளேஞ்ச நிலமா, நெல்லே எவனுவது உதுக்கருன் எங்கிறதுக்கு? இளம் பயிறு. கதிர்கூட வாங்கலே. மாடாயிருக்குமோன்னு, அசையாமல் நின்று பார்த்தேன். நெஞ்சு என்னமோ, திக்குத் திக்குனு அடிச்சிக்குது. ஆனுல் ஒரு சத்தமும் இல்லே. சரி, மெள்ள இடத்தைவிட்டு நகந்துடலாமின்னு, வந்துக்கிட்டே யிருந்தேன். மதவுக்கும் வந்திட்டேன். அப்பவும் ஒண்ணும் தெம்படல்லே. கரையைவிட்டுக் கீழே இறங்கி, வாய்க்கால் வரப்போடு வந்தேன். நம்ம எல்லேயைத் தாண்டிக்கூட வாய்க்காலிலே தண்ணி வந்துக்கிட்டே இருந்தது—!"

"ஓ!" என்ருன் பாளேயம்.

"இன்னிக்கும் நாளேக்குங்கூட நமக்குப் பாயவேண்டிய முறையாச்சுதேன்னு, திரும்பிப் போய்ப் பார்த்தால், வாய்க்காலுக்குப் போட்ட அணேயும் எடுத்திருக்குது! நம்ப நிலத்துக்குப் பாய, வெட்டி விட்டிருந்த மடையையும் மண்ணேப் போட்டு அடைச்சிருக்குது!"

"சரிதான், சின்னப் பண்ணேக்காரரு செஞ்ச வேலே இது" என்ருன் பாளேயம்.

"அவரில்லே, அப்பா, அந்தப் பாவி மதுரை மாமனுக்கும்!"

"போடா பைத்தியக்காரா, அவன் அவருடைய கையாளுதானே? சரி, அப்புறம் என்ன நடந்திச்சு?"

"நீ சொல்லவிட்டால் அல்ல?" என்று சினந்துகொண்டு, ஆண்டி மேலே சொன்னுன். "நான் விளக்கைப் போட்டுக்கிட்டு, அவங்க நிலத்தைச் சுத்தி வந்தால், ஒரு மூலேயிலே பதுங்கினுப்

போல மதுரை மாமன் உட்கார்ந்திருக்குது! நம்ப மடையை மூடிட்டு, அவங்களதை ஏன் திறந்தேன்னு கேட்டால், தனக்கு ஒண்ணும் தெரியாதின்னு, வாயடி கையடி அடிச்சுது. இந்தப் பொய் பித்தலாட்டமெல்லாம் எங்கிட்டே வச்சிக்காதேன் னிட்டு மம்மட்டியை எடுக்கப் போனேன். எடுக்கக் கூடா தின்னு தடுத்தது. அப்புறம் நான் ஒண்ணு சொல்ல, அது ஒண்ணு சொல்ல, மம்மட்டியைத் திருப்பிக்கிட்டு என் முதுகிலே அடிச்சிது" என்று ஆண்டி தன் தோள்பட்டையைத் தகப்ப னுக்குக் காட்டினுன். பாளையம் உருக்கத்தோடு தடவிப் பார்த்தான். "கொலைகாரப் பயல்! பலமாய் அடிச்சிட்டானுங்க யசமான்!" என்று அவன் சொன்னபோது ஆண்டிக்குக் கண் கலங்கிவிட்டது.

மறு கேள்வி, "நீ சும்மாவா இருந்தே?" என்று கேட்ட தற்கு. "சேத்துலே தூக்கிப்போட்டு, கழுத்தை அமுக்கி,ரெண்டு உட்டேன் அப்பா!" என்று ஆண்டி சொன்னுன். "பலே! பலே!" என்று மாதவனின் சிநேகிதன் ஒருவன் கைதட்டினுன். மற்ருெருவன் அவன் உற்சாகத்தை அடக்கினுன். "அந்த மம்மட்டியைக் கொண்டே நம்ம வயலுக்குத் தண்ணியைத் திருப்பிட்டேன் யசமான்!" என்று ஆண்டி பெருமையோடு சொல்லிக்கொண்டான்.

"ரொம்ப வலிக்குதாடா? ஒத்தடம் போட்டுக்கிறியா?" என்று கண்ணுயிரம் பிள்ளை பரிவோடு கேட்டார். "அதெல்லாம் ஒண்ணும் தேவையில்லை யசமான்!" என்று அவன் தகப்பனு டன் சாப்பிடச் சென்ருன்.

இப்பொழுது வீராசாமி பிள்ளை வீட்டிலும் உரக்கப் பேசும் சப்தம் கேட்டது. அவருடைய குரலே ஓங்கி நின்றது. சில நிமி ஷங்களுக்குள் அவரே தன் கையாள் மதுரையுடன் கண்ணு யிரம் பிள்ளையிடம் வந்தார்.

## 4

பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தில், கோபாவேசத் தோடு பதறிக்கொண் டிருந்த வீராசாமி பிள்ளையின் தோற்றம்

நன்றாகப் புலப்பட்டது. அவருக்குப் பின் வந்த மதுரையின் முகமும் வீங்கிக் கிடந்தது. வாயில் ஏதோ ஊறுவதுபோல் அவன் உமிழ்ந்துகொண்டே வந்தான்.

“முன்னாலே போடா! உங்கள் ஆண்டி செய்த வேலையைப் பார்த்தீர்களா?” என்று வீராசாமி பிள்ளை மதுரையைக் கண்ணாயிரம் பிள்ளையின் முன் நிற்கவைத்தார். “கொஞ்சநாள் போனால், அவன் கொலைகூடச் செய்யத் துணிந்திடுவான். நீங்கள் வயதில் பெரியவர்கள். கிராமமுனிசீபு, நாலும் தெரிந்தவர்கள். இந்த நியாயத்தைத் தீர்க்காத போனால், நமக்குள்ளே தீராப் பகை ஏற்பட்டுவிடும்; ஆமாம்!” என்று உறுமினார்.

“இவன் ஏன் ஆண்டியை முதலில் மண்வெட்டியால் அடித்தான்?” என்றான் மாதவன் குறுக்கிட்டு.

“நீ சும்மாயிரு,” என்றார் கண்ணாயிரம். “உட்காரு, வீராசாமி, தலைபோகிறது ஒன்றுமில்லை. அவர்கள் சொல்வதே தவிர நாம் பார்த்தோமா? ஆனால் மதுரை தண்ணீர் பாய்ச்சினது பிசகுதான்—”

“அவன் பாய்ச்சவில்லையாம். தண்ணீர் வீணாக வாரியில் கொட்டிக்கொண் டிருந்ததால் அதை எங்கள் நிலத்தில் திருப்பினானாம்.

“என்னாங்க இது! கேவுருலே தேன் ஒழுகுதின்னால் கேட்பாருக்கு மதி இல்லையான்னு சொல்லுவாங்களே, அதுபோல அல்ல இருக்குது? ஏரியிலே இன்னும் பத்துநாள் தண்ணிகூட இருக்காதே யசமான்! ரொம்பி வ்ளிஞ்சா ஓடுது?”

“அடேய், அதிகப் பிரசங்கித்தனமாய்ப் பேசாதே. உனக்குத் தெரியாதது உலகத்திலே ஒன்றும் கிடையாது. இல்லே?”

ஆமாம், இரவுலே மதுரைக்கு அங்கே என்ன வேலே? உனக்கும் தெரியாமே. தான் நட்ட பயிர் நன்றாய் விளையணுமிங்கிற ஆத்துரத்துலே, அவன் செஞ்சிருக்கலாம், வீராசாமி!”

“உங்களுக்கு உங்கள் பண்ணையாள் சொல்வதுதான் சத்தியம். மீதிப் பேர் சொல்வதெல்லாம் பொய், இல்லையா? கடைசி முறையாய் உங்களுக்குச் சொல்லிவிடுகிறேன். இவங்

களை நீங்கள் அடக்கி வைக்காவிட்டால், பெரிய வம்புலே முடியும்!" என்றார் வீராசாமி பிள்ளை.

"ஐயோ, கடவுளே! குதிரை தூக்கிப் போட்டதும் இல்லாமல் குழியையும் பறிச்சுதாம்!" என்றான் பாளையம்.

"அடே, நாக்கை அடக்கிப் பேசு! தொலைத்துவிடுவேன்!" என்று வீராசாமி பிள்ளை கர்ஜித்தார்.

"நான் உங்களைச் சொல்லவில்லை யசமான். மருதைக்குச் சொல்றேன். ஏய் மருதை! வீணாய்க் கெட்டுப்போகாதேடா! ஐயா உதவி இருக்குதின்னு என்னவேணுமின்னாலும் செஞ்சிடறதா? ஆண்டியை அடிச்சது அவன் மாமன் காதுலே விழுந்தால், உன்னைத் துண்டு போட்டு விடுவானே! நீங்க பத்து வீட்டுக் காரங்க, நாங்க தொண்ணூறு வீட்டுக்காரங்க, மறந்திடாதே!"

"அவன் சொல்வதைக் கேட்டீங்களா?—நீங்கள் தொண்ணூறு வீட்டுக்காரராய் இருந்தால் என்ன, தொளாயிர வீட்டுக் காரராய் இருந்தால் என்ன? என்னை என்னடா செய்திடுவாய்? இராஜாங்கம் நடக்குது, தொலைத்து விடுவேன், ஜாக்கிரதை!"

"ராஜாங்கம் எங்களுக்கும் நடக்குதுங்க. அக்கிரமக் காரங்களுக்கு இவ்வளவு துணிச்சல் இருந்தால் சத்தியமாய் நடக்கிறவங்களுக்கு இன்னும் பத்துப் பங்கு இருக்கும்!"

"பாளையம்!" என்று கண்ணாயிரம் பிள்ளை அதட்டவே, அவன் வாயை மூடிக்கொண்டான்.

"உன் துணிச்சலைப் பார்க்கிறேன்" என்று உறுமிக் கொண்டே, வீராசாமி பிள்ளை மதுரையுடன் போய்விட்டார்.

"பாளையம், எந்த நிலைமையிலும், பொறுமையை இழக்கக் கூடாதின்னு உனக்கு நான் எவ்வளவு தடவை சொல்லியிருக்கிறேன்? அறிஞ்சவங்களுக்கும் அறியாதவங்களுக்கும் என்ன வித்தியாசம் சொல்?"

முகத்தில் சோகம் தாண்டவமாட, பாளையம் மௌனமாய் நின்றான்.

மாதவனின் சிநேகிதர்களில் சிறிது கோமாளித்தனமாய் இருந்தவன், மாதவனைப் பார்த்து, கண்சிமிட்டி, "அவரை மாமனாராகப் படைக்கிறவன் பாடு திண்டாட்டந்தான்!" என்றான்.

"சேற்றிலே முளைத்தாலும், தாமரை தாமரைதானே" என்றான் மற்றொருவன். மற்றவர்களோடு சேர்ந்து மாதவனும் சிரித்தான்.

"மாதவா, நாளைக்கு அந்த ஏரியைப் பார்க்கணுமடா" என்றான் ஒருவன்.

"காலையில் காப்பி பலகாரத்தை முடித்துக்கொண்டு, நிலங்களை எல்லாம் சுத்திப் பார்த்துவிட்டு வாங்களேன். நீயும் கூடப் போயேண்டா" என்றார் கண்ணாயிரம் பிள்ளை, பாளையத்தினிடம்.

"அப்படியே, யசமான். அம்மா, வீட்டுக்கு அனுப்ப ஏதோ எடுத்து வச்சிருக்காங்க. ஆண்டிகிட்டேக் கொடுத்து அனுப்பிச்சிடறேன்."

"நீயும் போகிறாயா! அவனை நடு வழியிலே தகராறு பண்ணப் போறாங்கடா" என்றார் பிள்ளை.

"என் கிட்டே யாரும் வரமாட்டாங்க, யசமான். அவன் அசைப்புலே அடிச்சிட்டான்" என்று ஆண்டி நாலு பாத்திரங்கள் நிறைய வைத்திருந்த சாப்பாடு முதலிய தின்பண்டங்களை எடுத்துக்கொண்டு போனான்.

மறுநாள் காலையில் இளைஞர்கள் ஸ்நானம் செய்து, காபி பருகுவதற்குள், கண்ணாயிரம் பிள்ளை பூஜை முதலியவற்றை முடித்துக்கொண்டு, திண்ணையில் உட்கார்ந்தவாறு வந்தவர்களுக்கு மருந்தை வழங்கிக்கொண் டிருந்தார். அவரிடமிருந்ததெல்லாம் ஐந்தாறு கூழாங்கல் போன்ற உருண்டை வஸ்துக்களும், இரண்டு மூன்று சூரணங்களுந்தான்.

"எல்லாத்துக்கும் ஒரு கல்லைத் தேச்சுக் கொடுக்கிறாரே, அது சர்வ சஞ்சீவியா?" என்றான் ஒரு மாணவன் ரகசியமாய்.

"ஒரு செங்கல், ஒரு கூழாங்கல், ஒரு காவிக்கட்டி" என்று மற்ெருருவன் கணக்குப் போட்டான்.

"அடே, அந்தக் கல்லு செய்யற வேலே வேறே எந்த மருந்தும் செய்யாது. தெரியுமா உனக்கு? இன்னிக் காலத்துதா அது? எங்கள் பாட்டனுர் காலத்திலே இருந்து இருக்குதாம்! சரி, பாளையம் வந்துவிட்டான். வாங்க போகலாம்" என்று சிநேகிதர்களை அழைத்துக்கொண்டு மாதவன் கிளம்பினுன்.

முதலில் அவர்களைப் பாளையம் மாந்தோப்புக்கு அழைத்துக்கொண்டு போனுன். மரங்களில் இங்கொன்று அங்கொன்ருக விட்டுப்போன காய்களைப் பிள்ளைகள் கல்லால் அடித்துத் தின்றனர். பிறகு ஏரிகரைக்குச் சென்றனர்.

"இது ஒரு ஏரியா? எங்கள் ஊர்க் கோவில்குளம் இதை விடப் பெரிதாய் இருக்குமே!" என்ருன் ஒருவன்.

"இதுக்கு ஆயக்கட்டு நூறு ஏக்ராதானுங்களே, யசமான்" என்ருன் பாளையம். "கொஞ்சம் மழை பேஞ்சாலும் இது ரொம்பிடுமே. பாளாப்போன மானம் ரெண்டு வருசமாய் ஏமாத்துது. மதகை ஒட்டினுப்போல நாப்பது ஏக்ரா நம்பளுதுங்க. அடுத்தாப்போல இருப்பது சின்னப் பண்ணையாருது..."

"வீராசாமி பிள்ளைவாள்தானே?" என்று ஒருவன் கேட்டான்.

"ஆமாங்க; அதுக்கப்பாலே முப்பது ஏக்ரா ஒரு இருபது பேருக்குச் சொந்தமுங்க. முதல் பாசனம் நம்முதுதானுங்க. ஒரு காலத்துலே எண்பது வண்டி, நூறு வண்டி விளேஞ்ச நிலமுங்க! இப்போ பத்து வண்டி கிடைக்கிறதே கஷ்டமாயிருக்குது."

"ஏன்?"

"தண்ணி இருந்தால் அல்ல. நாலஞ்சு காணிக்கு மேலே பயிரிட முடியவில்லையே?"

"ஏரியிலே தண்ணியே இல்லேயே, பாளையம். பயிரெல்லாம் அறுப்புக்கு வருமா?" என்று மாதவன் கவலேயோடு கேட்டான்.

"கடவுள் கண்ணைத் திறந்து பார்த்து, ஒரு மழை பேஞ்சால், ஏதோ கொஞ்சம் கிடைக்கும். அதுக்காகத்தானே

மருதை ராத்திரி அந்த வேலை செஞ்சான். இளம் பயிர் வாடக் கூடாதுங்க. குளந்தைங்க போலத்தானே? குறுத்து ஒணந்து போனுல், என்ன சுகம் ? அவன் வெட்டிவிட்ட இடத்தைக் காட்டுகிறேன், வாங்க" என்று பாளையம் அவர்களை அழைத்துக்கொண்டு போனுன். நிலம் முழுவதையும் சுற்றிக் காட்டிய் பிறகு, "பொன் போட்டால் பொன் விளையக்கூடிய நிலங்க இது!" என்ருன் பாளையம்.

"இவ்வளவுலேயும் நெல் விளைந்தால் என்ன கிடைக்கும்?" என்று கேட்டான் ஒருவன்.

"அதான் சொன்னேனுங்களே, யசமான்! நூறு வண்டி கூடக் கிடைக்கும். எண்பது வண்டி அளந்து, என் கண்ணுலேயே பார்த்திருக்கிறேன். இப்போ,விக்கிற விலைக்கு, எங்கய்யா மாதிரி நியாயமாய் வித்தால்கூடப் பத்தாயிரம் கிடைக்குமே! வீராசாமி பிள்ளை வித்தால் இன்னெரு பத்தாயிரம் வரும்."

"அவருடையது எல்லாம் கறுப்பு மார்க்கட்டுத்தான்" என்ருன் மாதவன்.

"அது மட்டுமாங்க? அவருக்குப் பேரே தினவட்டிக்காரர் ஆச்சுதே! வட்டிக்கு வட்டி வாங்கிக் குவிச்சிட்டாருங்க!" என்ருன் பாளையம்.

"அவன் பெண்ணை நீ கட்டிக்கப் பார்க்கிருயே!" என்ருன் மாதவனுக்கு மிகவும் அந்தரங்கமான சிநேகிதன், முத்துசாமி.

"நீ என்னடா, அவன் பெண்ணைத்தானே கட்டிக்கிறேன், அவனை இல்லையே ?" என்ருன் மாதவன்.

"அந்தக் குழந்தை என்னமோ, லச்சுமிதானுங்க. ஆண்டவன் கிருபை எப்படி இருக்குதோ?—மேச்சக் காட்டையும் காட்டனுங்களா, யசமான் ?"

"ஆமாம் பாளையம்; அதுதானே முக்கியமானது. நான் சொன்னதையெல்லாம் மறந்துவிட்டாயா ?" என்ருன் மாதவன்.

"நான் ஏன் மறக்கறேனுங்க? ரெண்டு கல்லு நடக்கணுமே! அவங்களுக்குக் கஷ்டமாயிருக்குமோ, என்னவோன்னு சொன்னேனுங்க."

"இரண்டு கல் இல்லை, நாலானாலும் நான் நடக்கத் தயார். உங்கள் சங்கதி என்ன?" என்று முத்துசாமி மற்றவர்களைப் பார்த்துக் கேட்டான்.

"அப்பா! இவன்தாண்டா நடப்பான்! நாங்கள் எட்டுக் கல்லுகூட நடக்கத் தயார்" என்றான் ஒருவன்.

அதன்மேல், எல்லோரும் கரம்பாய்க் கிடந்த புஞ்சை நிலங்களில் ஒற்றையடிப் பாதைமீது நடந்து சென்றனர். வர வர வெயில் தீவிரமாகவே சிலர், முகத்தின் வியர்வையை அடிக்கடி துடைத்துக்கொண்டனர். "என்ன, முத்து, வெயில் உறைக்கிறதா?" என்று மாதவன் பரிகாசமாய்க் கேட்டான்.

"சும்மாயிரு, அப்பனே, நீ இரைக்கிறது, உனக்குத் தெரியவில்லை!"

"சரி. எங்கள் மேச்சல்காடு இங்கிருந்துதான் ஆரம்பிக்கிறது. அதோ வண்டிகள் போகிறதே, அந்த ரஸ்தா வரையிலும் நீளம். இப்படி அகலம், அதோ அந்த ஒற்றைப் பனை மரத்திலிருந்து, இந்தப் பக்கம் ஆலமரம் இருக்கிறதே அது வரையிலும்; அரைமைல் நீளம், மூணு பர்லாங்கு அகலம். அவ்வளவுதானே, பாளையம்?" என்றான் மாதவன்.

"ஏறக்குறைய அவ்வளவுதானுங்க. நூத்தி எட்டு ஏக்ராவும் சொச்சமும்; பாத்துக்குங்களேன்" என்றான் அவன். தென்புறத்தில் ஒதுக்கமாக, ஒரு பனந்தோப்பு இருந்தது. நடுநடுவே சில வேலமரங்கள் வளர்ந்திருந்தன. மேல்புறத்தில் ரஸ்தா ஓரமாக, நட்டு வைத்தாற்போல் பல பூவரச மரங்கள் காணப்பட்டன. மற்றப்படி வெட்ட வெளியாகத்தான் இருந்தது. ஆனால் புல் மாத்திரம் ஏராளமாக முளைத்திருந்தது. பல மாடுகள் மேய்ந்துகொண்டிருந்தன.

"இதுலே ஒன்றும் விளையாதா?" என்று ஒருவன் கேட்டான்.

"அந்த மூலையிலே எப்பொழுதாவது கம்பு, சோளம் போடுவார்கள். மழை பெய்தால்தானே விளையறத்துக்கு" என்றான் மாதவன்.

"அடே, பனைமரத்துலே அவ்வளவு காய்கள் இருக்கிறதே. நுங்கு வெட்டச் சொல்லேண்டா!" என்றான் முத்துசாமி.

"பாளையம் வெட்டிக்கொண்டு வருவான். நாமெல்லாம் ரஸ்தா ஓரமாய்ப் போய்விடலாம். வீட்டுக்குத் திரும்புகிறதுக்கும் சௌக்கியம். பாவம்! களைத்துப்போயிருக்கிறீர்கள். இனைப்பாற நல்ல நிழலும் இருக்கிறது," என்றான் மாதவன்.

"ஓடையிலேகூடத் தண்ணி ஓடுது, யசமான்."

"இங்கே ஓடை வேறே இருக்கிறதா? குஷிதான். நீ காட்டு ராஜாதான். போ!" என்றான் ஒருவன்.

"அடே, இந்தக் காடு மட்டும் இவ்வளவு மேடாய் இல்லாத போனால், இதை எப்படி ஆக்கிடுவோம் தெரியுமா?"

"இப்போ, மிஞ்சிப்போனது என்னுங்க? அது அதுக்குக் காலம் வந்தால் எல்லாம் நடக்குது. நல்லது, நீங்க போங்க. நான் நாலஞ்சு பனங் குலைங்களை வெட்டிக்கிட்டு வாரேன்" என்று அவன் மாடு மேய்க்கும் பையனிடம் சென்றான்.

மாதவனும் அவனுடைய சிநேகிதர்களும் ரஸ்தாவை நோக்கிச் சென்றனர். போகப் போக நிலத்தின் மேடு அதிகரித்துக்கொண்டே இருந்தது. ஓடையண்டை வந்ததும், ரஸ்தா, குறைந்தது நாலடியாவது தாழ்வாக இருப்பதாகத் தோன்றியது. ஒருவன் ஓடையில் விரைவாக இறங்கினான். எல்லோரும் கைகால்களை அலம்பிக்கொண்டார்கள், "தண்ணீர் தித்திக்குதுடா!" என்றான் முத்துசாமி, வாய் கொப்புளித்து.

"மழை ஜலந்தானே! அதோ தெரிகிறதே மலைத்தொடர்; அது இங்கிருந்து நேராய் லயன் பிடித்தால், இருபது மைலுக்கு மேல் இராது. அங்கே மழை, துளி பெய்தாலும் இந்த ஓடையிலே உருண்டு வந்திடும்."

"இந்த நீரெல்லாம் எங்கே போகிறது?"

"உப்புக் கால்வாயிலே போய்த் தண்டத்துக்கு விழுது! இப்போ ஒண்ணுமில்லை. அக்டோபர், நவம்பர், டிஸம்பர் மாதங்களிலே, மூணு அடிக்கு ஜலம் இதுலே ஓடிக்கொண்டே இருக்கும்."

"மழை பெய்தால்தானே ?"

இப்பொழுது அங்கே வந்த பாளையம், "கொஞ்சம் பேஞ்சாலும் தண்ணீர் ஓடுமிங்க. அந்த மலைங்களுலே பெரிய சுனை இருக்குதாம். அதிலேயிருந்து வருதாம். எவ்வளவு காஞ்சாலும் அப்பிசி கார்த்திகையிலே தண்ணி ஓடாதிருக்காதுங்க. பட்டத்துலே மழை பேஞ்சுட்டால், நாலு மாதம் ஓட்டம் இருக்குமே" என்றான்.

"சரி, காயைச் சீவு, எப்படித் திங்கணுமோ இவர்களுக்குச் சொல்லித் தரேன். பட்டணத்துப் பிள்ளைகள் ஆச்சே!" என்றபடி மாதவன், சீவி வைத்த ஒரு காயை எடுத்து, அதில் புதைந்து கிடந்த மூன்று இளம் நுங்குகளை, கட்டை விரலால் கிளப்பி உறிஞ்சினான்.

"ரைட், ரைட்!" என்று சொல்லிக்கொண்டு மற்றவர்களும் அவ்வாறே தங்களுக்கு வேண்டிய மட்டும் தின்றார்கள். பிறகு ரஸ்தா வழியாக, வீட்டுக்குத் திரும்பினார்கள்.

கிராமத்தில் புகுந்து, வீராசாமி பிள்ளை வீட்டண்டை வரும் பொழுது, "உங்களுக்கு ஏன் அந்தக் கவலை? நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று அவர் வெகு உற்சாகத்தோடு சொல்லுவது, பாளையத்தின் காதில் விழுந்தது. திண்ணையிலிருந்த மற்றவர் யார் என்று பாளையம் குனிந்து பார்த்தான். புலிப்பாளையத்து நாயக்கர் உட்கார்ந்திருந்தார். அவரிடத்தில் கண்ணாயிரம் பிள்ளை கடன் வாங்கியிருப்பது பாளையத்துக்குத் தெரியும். உண்மையில், தன் பண்ணைக்காரரின், குடும்ப விஷயங்கள் அனைத்தும் பாளையத்துக்குத் தெரியும். அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. முகத்தில் கவலை படர்ந்தது. பண்ணைக்காரரை விசாரிக்க வேண்டுமென்ற ஆத்திரத்தோடு, முன் சென்று, கண்ணாயிரம் பிள்ளையைத் தனியாக அழைத்தான் பாளையம்.

## 5

புழக்கடைக் கோடியில் இருந்த மாமரத்தண்டை வந்ததும், "புதுப்பாளையத்து நாயக்கர் நம்ப வீட்டுக்கு

வந்தாரா?" என்று பாளையம் கண்ணுயிரம் பிள்ளையைக் கேட்டான்.

"வந்தார்; என்ன சங்கதி?"

"அவர் சின்னப் பண்ணைக்காரர் வீட்டுத் திண்ணையிலே உட்கார்ந்திருக்காரு. அவருக்குப் பிள்ளை ஏதோ தூபம் போட்டுக்கிட்டு இருக்காரு. நம்பளைப்பத்தித்தான் பேச்சு நடந்தது. நான் அதை நல்லாய்க் கண்டுக்கிட்டேன். புதுப்பாளையத்தார் மனத்தைக் கலைக்கப் பாக்கருருங்க."

"கலைக்கட்டுமே. ஆண்டவன் ஆணை இல்லாமல் எதுவும் நடக்காது. ஏன், வர வர உனக்கு நம்பிக்கை குன்றிப் போவுது? அவருக்கு முடையாய் இருக்குதாம். வட்டி, முதல் இரண்டையும் ஒரு மாதத்துக்குள்ளே கொடுக்கணுமின்னுர். நான் அறுப்பு முடியும் வரையிலும் பொறுத்துக்கச் சொன்னேன். சரி என்று ஒப்புக்கொண்டார். அவர் பல ஜோலிக்காரர். வீராசாமி கிட்டே ஏதாவது அலுவல் இருக்கும்."

"இல்லையிங்க. நம்ப சங்கதியைப்பத்தித்தான் அவங்க பேசருங்க. புதுப்பாளையத்தாரண்டை இருந்து கடனை மாத்திடப் பாருங்க" என்று பாளையம் கெஞ்சுவதுபோல் சொன்னான்.

"அவ்வளவு சுளுவாய் நடக்கிற விஷயமா, பாளையம்? சரி, பார்க்கலாம். நீ ஒன்றும் பயப்படாதே. ஆண்டவன் கை விடமாட்டார். நேரமாச்சுது உனக்கும்; அம்மாவைச் சாப்பாடு போடச் சொல்" என்று சொல்லி, அவர் உள்ளே போய்விட்டார்.

பாளையத்துக்குச் சமாதானம் ஏற்படவில்லை. வைக்கோல் போரில் சிறிது வைக்கோலை உருவி, கறவை மாட்டுக்குப் போட்டுவிட்டு, போரடியிலேயே படுத்துவிட்டான். லோகநாயகி அம்மாள் அவனைக் கூப்பிடப் பல தடவை உரக்கக் கூவ வேண்டி இருந்தது.

பிற்பகலில், வழக்கம்போல் கண்ணுயிரம்பிள்ளை விவேக சிந்தாமணி என்ற புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்தார். மாதவன், தன் சிநேகிதர்களுடன், மாடி அறையில் கேரம் விளையாடிக்கொண்டிருந்தான். பாளையத்துக்குப் பேச யாரும்

கிடைக்காததால், வீராசாமி பிள்ளையின் வாயைக் கிண்டலா மென்று அங்கே சென்றான். ஆனால், இரவு நடந்த சம்பவங் களால் எரிந்து விழுவாரோ என்ற பயமும் இருந்தது. எதற்கும், அவர் வீட்டுக்கு முன் அவன் எறும்புபோல் மெள்ள ஊர்ந்தான். வீராசாமிபிள்ளை அவனைக் கவனிக்காமல் போகவில்லை.

"என்னடா, பெரிய மனிதரா!"

"அப்படிச் சொல்லக் கூடாது யசமான். ராவுலே கோவத் துலே எதுனாச்சும் சொல்லியிருந்தால், மனசுலே வச்சுக்காதீங்க. பெத்த மனசு ஆச்சுங்களே...குளந்தை குட்டிங்களைப் பெத்த வங்க, உங்களுக்குத் தெரியாததா ?"

"மெய்தாண்டா, அதான் உன் மகன் செஞ்சது உனக்கு உறைக்கவில்லை. அவனை அடிச்சதுக்கு மட்டும், சீறிக்கொண்டு வந்துவிட்டே."

வீராசாமி பிள்ளையின் மன நிலைமையை அறிந்த பாளையம், "அதை அடியோடு மறந்திடுங்க, யசமான்" என்று கேட்டுக் கொண்டான்.

"என்ன இருந்தாலும், நீ பெரிய பண்ணையைச் சேர்ந்தவ னில்லையா—ஊம்! நாங்கள் சின்னப் பண்ணைதானேடா!"

"சின்னதாவது, பெரியதாவது! வயதைக்கொண்டு, அந்தக் காலத்துலே அப்படிப் பேர் வச்சாங்க. எல்லாம் ஒரே பண்ணை தானுங்க."

"சரியான பேச்சு. ஊருக்கு ஒரு பண்ணைக்காரர்தான் இருக்கவேண்டும். அப்படிச் செய்துடலாமின்னுதான் பார்க்கி றேன்" என்று சொல்லி வீராசாமி பிள்ளை இடி இடி என்று சிரித்தார். பாளையத்துக்கு அடி வயிற்றில் பகீர் என்றது.

"என்ன யசமான், எனக்கு ஒண்ணும் விளங்கலியே?" என்றான்.

"இப்போ விளங்காதுடா! பண்ணைக்காரர் என்கிற பட்டம் அவருக்கே இருக்கட்டும். எனக்கு வேண்டாமின்னு சொல் கிறேன்.

"அது என்னமோ, எனக்கும் ஒண்ணும் தெரியில்லே, யசமான். அது போவுது. நான் புதுப்பாளையத்தாரைக் கண்டுக்கினுமின்னு இருந்தேன். அதுக்குள்ளே அவர் போயிட்டாரு."

"எதுக்காகடா?"

"என் மகளுக்குக் கல்யாணம் செய்யப் போறேனுங்க. அதுக்கு உதவி செய்யறேன்னிட்டு அவராச் சொன்னாருங்க..."

"இப்போ என்னத்தைக் கொடுக்கப் போறார். அவருக்கே முடையாய் இருக்குதாம்."

"என்னாதுங்க! அவருக்கு என்ன குறைவுங்க? ஜவுளிக் கடை இருக்குது. மளிகைக் கடை இருக்குது, ரொட்டிக் கிடங்கு...!"

"அட, இப்போ பெறட்டத் தேவையாய் இருக்கலாம். ஆனால், உனக்குக் கொடுக்க அஞ்சு பத்து இல்லாத போகுமா? உற்சாகமாய் இருந்தால் நாற்பது, ஐம்பது கொடுப்பார்" என்று வீராசாமி பிள்ளை சொல்லும்போது, அவருக்கு உள்ளூற ஒரு சந்தோஷம் ஏற்பட்டிருப்பதைப் பாளையம் உணர்ந்துகொண்டான்.

பிறகு, மெள்ளத் தள்ளாடிக்கொண்டு வரும் பொன்னுசாமி பண்டிதனைப் பார்த்து, "என்னாங்க, பொன்னுசாமி பண்டிதர் இவ்வளவு நொந்து போயிட்டாரே!" என்றான் பாளையம்.

"ஓ, அவன் வருகிறானா? வட்டியும் தரவில்லே. முதலும் தரவில்லே. இன்னும் என் உயிரை வாங்குகிறான். சரி, நீ போ" என்று 'படார்' என்று கதவைச் சாத்திக்கொண்டு, வீராசாமி பிள்ளை வீட்டுக்குச் சென்றுவிட்டார்.

ஆனால், பொன்னுசாமி பண்டிதன் வீராசாமி பிள்ளை வீட்டுப் பக்கங்கூடப் பாராமல் மேலே சென்றான். "யார் பாளையமா? அப்பா, தருமராஜன், உங்க பண்ணைக்காரர் வீட்டுக்குத் தானப்பா போறேன். வீட்டுலே இருக்கார் இல்லே?"

"இருக்காருங்க. ரொம்ப இளைச்சுட்டீங்களே!"

"என்ன செய்யறது, அப்பா? தள்ளாத வயது, சீக்கு, திங்கச் சோறும் இல்லே. அந்தப் பாவி என் வயித்துலே அடிச்சுட்டானே! என்ன கதிக்குப் போவானோ!" என்று வீராசாமிபிள்ளை

யின் வீட்டுப் பக்கம் கையைக் காட்டிக் கிழவன் பற்களைக் கடித்தான்.

"உங்க அய்யாவுக்குச் தெரிஞ்ச வைத்தியம் எனக்கும் தெரியும் அப்பா, அவங்க அப்பா எங்க ரெண்டு பேத்துக்கும் தானே கத்துக் கொடுத்தார்!"

"எனக்குத் தெரியுமிங்க."

"காலத்தின் கொடுமை ஒரு மகனும் போனான். அந்தக் காலத்திலேயே மீத்து வைக்கத் தெரியவில்லை. போதும் போதாததுக்கு இந்தப் பாவி—" என்று சொல்லும்போது, கிழவனுக்குத் தொண்டையை அடைத்துக்கொண்டு இருமல் வந்துவிட்டது.

"வீணாய் மனதைப் புண் படுத்திக்காதிங்க, நின்னு வாங்க" என்றான் பாளையம்.

பொன்னுசாமி பண்டிதனின் பரிதாப நிலைமையைக் கண்டு கண்ணாயிரம் பிள்ளைக்கு மனம் இளகிவிட்டது.

"நீ இவ்வளவு கேவலமாய் இருக்கிறது எனக்குத் தெரியாதே அப்பா, ஏதாவது சாப்பிடறாயா?"

"சாப்பிடறேனுங்க" என்று சொல்லும்போதே கிழவனுக்கு அழுகை வந்துவிட்டது.

அதன்மேல் வேலைக்காரியைக் கூப்பிட்டுக் கிழவனுக்கு வீட்டிலிருந்த உணவை அவர் வழங்கச் செய்தார். கிழவனுக்குச் சிறிது தெம்பு வந்தது.

"எவ்வளவு நாளாய் உனக்கு உடம்பு இப்படி இருக்கிறது? உன் கையிலே இருக்கிற மருந்தைச் சாப்பிடக் கூடாதோ?"

"அய்யோ சாமி! என் கையிலே மருந்து இருந்தால் அல்ல! பெட்டியையே பாவி கொண்ணுந்துட்டானே!"

"விவரமாய்ச் சொல்லு, பொன்னுசாமி."

"சொல்றேனுங்க. அந்தப் பாவி வீராசாமி பிள்ளை யண்டை அஞ்சும் பத்துமாய் முப்பது ரூபாய், கடன் வாங்கினேனுங்க.

கணக்கு மேலே கணக்குப் போட்டு முப்பது ரூபாய் வட்டி ஆயிட்டுது இன்னுருங்க. வைத்தியம் பண்ணிக்கிறவங்க அந்தக் காலத்திலே கால், அரை, கொடுப்பாங்க. இப்போ சாப் பாட்டுக்கே இல்லாட்டி, பண்டிதக்காரனுக்கு என்னத்தைக் கொடுக்கிறது? எப்படியோ வயித்தைக் கழுவிக்கிட்டு வந் தேன். ஒரு நாள் இந்த ஆள் என்ன செஞ்சாரு, இதையும் அதையும் சொல்லி, என் மருந்துப் பெட்டியை எடுத்துக்கிட்டுப் போயிட்டாரு. அப்புறம் ரூபாயைக் கொடுத்தாத்தான் அதைத் திருப்பித் தருவேன்னிட்டாரு. நான் என்ன செய்வேனுங்க!'' என்று கிழவன் மறுபடியும் அழத் தொடங்கிவிட்டான். கண் ணுயிரம்பிள்ளை மூக்கின்மேல் விரலை வைத்தார். மாடியிலிருந்து வந்த பிள்ளைகளும் ஆச்சரியப்பட்டார்கள்.

"இவரைப் போன்றவர்கள்தான் சமூகத்துக்கு முதல் சத் துரு'' என்ருன் முத்துசாமி.

"இவ்வளவு இழிவான மனிதன் என்று நான் நினைக்க வில்லை'' என்ருன் மாதவன் வெறுப்புடன்.

"என் கையில் பணமிருந்தால் கொடுத்துவிடுவேன். இப் பொழுது ஒன்றுமில்லையே. சரி, சமயம் வந்தபோது உன் மருந் துப் பெட்டியை மீட்டுக்கொள்ளலாம். அது வரையில் நீ என்னிடம் மருந்து சாப்பிடு. சாப்பாட்டுக்கும் புழுங்கரிசி தரச் சொல்கிறேன்; எவ்வளவு தூக்க முடியும் உன்னுலே?—இல் லாத போனல், நீ அந்தப் பக்கம் போகிறபோது கொடுத்து விடேன்'' என்ருர் கண்ணுயிரம்பிள்ளை பாளையத்தைப் பார்த்து.

இப்பொழுது, மேல் வீதியிலிருந்து வீராசாமி பிள்ளையின் வீட்டுக்குப் போகும் மதுரையைக் கவனித்த பாளையம், "இந் நேரம் ஒண்டிக் கேட்டுக்கிட்டு இருந்தான்போல் இருக்கு துங்க'' என்று தாழ்ந்த குரலில் சொன்னுன்.

"கேட்கட்டுமே. என்னப்பா பயம்!'' என்ருன் மாதவன்.

"நாம் என்ன செய்யலாம்? நமக்கு யார்மேலேயும் பகை இல்லை. சிறு பிள்ளைகள் ஆத்திரத்தில் எதையாவது சொன்னுல் அதைக் கணக்கில் வைக்கக் கூடாது. ஒரு நல்லது பொல்லா

தென்றால் அவன் வராவிட்டாலும் நான் விட்டுக் கொடுக்க மாட்டேன் '' என்றார் கண்ணாயிரம்.

பொன்னுசாமி பண்டிதனுக்கு அரிசியைக் கொடுத்து அனுப்பிவிட்டு, பாளையம் தன் வீட்டுக்குப் போய் வரலா மென்று கிளம்பினான். ஆனால் வழியில் வீராசாமி பிள்ளை பிடித்துக்கொண்டார். மதுரையின் அந்தத் திருட்டு விழியிலிருந்து, அவன் ஒன்றுக்கு இரண்டாகக் கோள் சொல்லிவிட்டான் என்பதையும் பாளையம் தெரிந்துகொண்டான்.

"என்னடா, உங்கள் பண்ணைக்காரருக்கு அழிகிற காலம் நெருங்கிவிட்டதா? அவர் மகன் நேற்றுப் பயல், வெகு இழிவாகப் பேசினானாமே! அவன் போதாதென்று, வந்த ஓடுகாலிப் பசங்களும் என்னைத் திட்டுவதா? அடே, பொறுமைக்கும் ஒரு அளவு உண்டு. ஜாக்கிரதை! அடியோடு ஒழித்துவிடுவேன்! உன் யஜமான் பொன்னுசாமிப் பண்டிதர் மருந்துப் பெட்டியை மீட்டுத் தரேன்னாராமே. அவர் வாங்கின கடனுக்கு வட்டி கொடுக்க வகை இல்லை..."

"யசமான்!" என்று பாளையம் வீராசாமி பிள்ளையின் பேச்சைத் தடுத்தபோது, எவ்வளவு அடக்கியும் அவனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. பிள்ளையும் ஒரு கணம் தயங்கினார்.

"எங்க எசமானைப்போலே லச்சத்துலே, ஒருத்தரைக் காண முடியாது. யாரை என்ன வேணுமானாலும் சொல்லிக்கிங்க; ஆனால்—அளியற காலம் வந்தவங்கதான் அவரைத் திட்டுவாங்க!" என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டுப் போய்விட்டான்.

வீராசாமி பிள்ளை திகைத்துப் போனார்.

"மதுரை, இந்தப் பயல்களுக்குச் சூடு காட்ட வேண்டியதுதான்! பொறுக்கிப் பயல்! இவனுக்கு இவ்வளவு திமிரா!"

"இவன் மகன் இதுக்கு மேலேயிங்க! அவனை என்னிக்கோ ஒரு நாள் இடுப்பை ஒடிச்சுப் போட்டுடப் போறேன்."

"சரி, அந்த வியாபாரிகள் எப்போ வருவார்கள்?"

"ஒரு வாரத்துக்குள்ளே வந்திடுவாங்க. நான் போட்ட பிளானுதான் சரியிங்க. இவங்க வாயிலேயும் மண்ணைப் போட்டுடலாம். நமக்கும் லாபம் கிடைக்கும்."

"அப்புறம் எல்லாம் நம்முதுதானே, வளைத்துப் போட வேண்டியதுதானே."

"அப்போ அல்ல, அந்தக் கழுதை, பாளையத்தின் மூஞ்சியைப் பாக்கணும்!" என்றான் மதுரை.

"என்னாங்க இது? எனக்கு ஒண்ணும் பிடிக்கல்லே. முந்திப் பிந்தி யோசிக்க வேண்டாமா?" என்று அழாத குறையாய் அவருடைய மனைவி பார்வதி அம்மாள் உட்புறமிருந்து வந்து சொன்னாள்.

"எனக்கு எல்லா யோசனையும் தெரியும். உன் வேலையைப் பார். இவனுக்கு மூளை கலங்கிப் போய்ச் சொத்தையெல்லாம் சூறைபோடுகிறான். நானும் அப்படிச் செய்யாத போனால், நான் இழிவானவன். சமூகத்துக்குச் சத்துருவாம்! இவனை ஊரைவிட்டுத் துரத்தாத போனால் ஏனென்று கேள்! இவன் இங்கே இருந்தாலே தீராத தலைவலி—ஆமாம், சொல்லிவிட்டேன். அந்த வீட்டுப் பக்கம் யாரும் போகக்கூடாது! அவங்களும் வரக்கூடாது. வந்தால் காலை ஒடித்துவிடுவேன்!" என்று அவர் பல்லைக் கடித்தார்.

"உங்களுக்குத்தான் இப்பொழுது மூளை கலங்கிப் போய் விட்டது! அப்பா, மதுரை, உனக்குப் புண்ணியமுண்டடா! குடியைக் கெடுக்காதே!"

"இதோ, அவனை ஒன்றும் சொல்லாதே!" என்று அவர் எரிந்து விழுந்தார். அந்த அம்மாள் அழுதுகொண்டு உள்ளே சென்றாள்.

## 6

ஏதோ சாக்கை வைத்துக்கொண்டு மீனாட்சி, கண்ணாடிப் பாட்டியின் வீட்டுக்குப் புறப்பட்டாள். அவள் வரவைக் கவனித்து, மாதவனும் அங்கே வந்து சேர்ந்தான். மீனாட்சிக்குக்

கண் கலங்கி யிருப்பதைக் கண்டு, "என்ன சங்கதி?" என்று அவன் உருக்கத்தோடு விசாரித்தான்.

"நீ ஏன் அத்தான், அப்பாவின் பேச்சை எடுக்கிறாய்? உன்னையும் உன் சிநேகிதர்களையும் அப்பா திட்டிக்கொண் டிருக்கிறார். எனக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்கிறது! உனக்குத் தெரியவில்லை."

"நன்றாய்த் திட்டட்டும். எங்களுக்குக் கோபம் இல்லை. அவர் திட்டு எங்களுக்கு ஆசீர்வாதம். பாட்டி, அந்தப் பொன்னுசாமி பண்டிதனின் விவகாரம் உங்களுக்குத் தெரியுமல்லவா?" என்று மாதவன் கேட்டான்.

"தெரியாமல் என்ன? வெளியே சொல்லிக்கொண்டால் வெட்கக் கேடு" என்றாள் பாட்டி.

"அதைப்பற்றி எல்லோருந்தான் பேசுவார்கள். தடை போட்டு முடியுமா, பாட்டி?" என்றான் மாதவன்.

"எனக்கு என்னமோ செத்துப் போய்விட்டால் தேவலை போல் இருக்கிறது" என்றாள் மீனாட்சி, கண்ணீர் சொரிந்து கொண்டு.

"இதற்கெல்லாம் செத்துப் போய்விட்டால், வாழ்க்கையில் இன்னும் எவ்வளவோ கஷ்டசுகங்களை அநுபவிக்க வேண்டுமே அம்மா! நீ ஒன்றையும் காதில் போட்டுக்கொள்ளாதே" என்று புத்திமதி சொன்னாள் பாட்டி.

"அதைத்தான் நானும் சொல்கிறேன். நீ எதுக்கும் பயப்படாதே, மீனு! கடைசியில் எல்லாம் சரியாய் முடியும் பார். கண்களைத் துடைத்துக்கொள்...ஊம்" என்று மாதவன் சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது, பாலன் இரைக்க இரைக்க ஓடி வந்தான்.

"உன்னை எங்கே எல்லாம் தேடுகிறது அக்கா? அம்மா கையோடு அழைத்துக்கொண்டு வரச் சொன்னாள்" என்றான்.

அதன்மேல், "நான் போகிறேன், அத்தான்" என்று மீனாட்சி புறப்பட்டாள்.

"உனக்கு ஒரு கவலையும் வேண்டாம், மீனு. நான் இருக்கிறேன்" என்று அவளுக்குத் தைரியம் ஊட்டுவதுபோல், மாதவன் அவளைத் தட்டி அனுப்பினான்.

வீராசாமி பிள்ளை மதுரையுடன் பல விஷயங்களைப்பற்றி யோசித்தார். பிறவிக் கருமியாக இருந்தபோதிலும், மதுரையின் விஷயத்தில் மாத்திரம் அவர் தாராளமாக நடந்துகொண்டார். ஏனெனில், அவன் தன் குலத்தாரின் நன்மையைக் கருதாமலும், அவர்களுக்கு விரோதமாகவும் கூலிக்கு மாரடித்துக்கொண்டிருந்தான். சேரியில், அவனைச் சேர்ந்தவர்கள் சிலரே. அவர்களிலும் பலருக்கு அவன்மீது வெறுப்பு அதிகரித்துக்கொண்டே வந்தது. ஒரு வாரத்துக்குப் பிறகு பயிர் வேலை ஒன்றும் இருக்காதாகையால், அச்சமயத்தில் கூலி குறைவாகக் கொடுத்துத் தம் காரியங்களைச் சாதித்துக்கொள்ள வேண்டுமென்று வீராசாமி பிள்ளை திட்டம் போட்டார். அதற்கு அநுகூலமாக மதுரையும் முயற்சிகளைச் செய்தான்.

"அரை நாள் வேலை கொடுத்தால், நமக்கு அதிக வேலை நடக்கும், இல்லையா? ஒன்றுவிட்டு ஒருநாள், இருபது ஆள்களை விடு. நாலைந்து நாட்களில் நரிமேடு சீர்ப்பட்டுப் போகும். அரை நாளுக்கு அரை ரூபாய் கொடு. இனிமேல் இதுகூட அவங்களுக்குக் கிடைக்காதே" என்றார், வீராசாமி பிள்ளை.

"மெய்தானுங்க. ஆனல், அவங்களுக்கு ஒரு கிராக்கி வந்திருக்குதுங்க. ராமாபுரத்துக்கும்அய்யன் சாவடிக்கும் ரோட்டுப் போடறாங்களாம். ஒரு மாதம் வேலைக்குக் குறையாதின்னு எங்க ஊர் ஆளுங்க பேசிக்கறாங்க."

"ஆமாம், ரோட்டு வேலையென்றால் சும்மாதானா? பிழிந்து எடுத்திட மாட்டாங்களா?"

"கஷ்டப்பட்டாலும் நாளைக்கு ஒண்ணேகால் ரூபாய் வருமல்லவா? வயிறாரத் தின்னலாமே! ஆனல் வாரத்துக்கு ஒரு வாட்டிதான் கூலி கொடுப்பாங்களாம். ஒரு வாரம் மொரட்டு வேலைக்கு நல்ல தீனி இல்லாதே முடியுமான்னு யோசித்துக்கிட்டு இருக்காங்க. தினம் கூலி கொடுத்தால், உங்களுக்கு ஒரு

மாதம் ரெண்டு மாதத்துக்கு ஒரு ஆள் கிடைக்கமாட்டான்!" என்றான் மதுரை.

"இதென்னடா வம்பு? இந்த வருஷம் நரிமேட்டுலே வள்ளிக்கிழங்கு நடலாமென்று அல்ல பார்க்கிறேன்? சொற்ப மழையிருந்தாலும் பயிராயிடுமே? எல்லாம் அன்றாடங் காய்ச்சிகள் தானே! ஒரு வாரத்துக்கு எப்படித் தாக்குப் பிடிப்பார்கள்?" என்றார் பிள்ளை.

"மெய்தானுங்க. ஆனல்......இப்போ நமக்குக் கூலிக்கு ஆளுங்க வரதும் வராததுங்கூடப் பெரிய பண்ணைக்காரர் கையிலேதான் இருக்குது!"

"அவனுக்கு என்ன வேலை இருக்கிறது இப்பொழுது?"

"அவருக்கு வேலை இல்லையிங்க. அவருடைய உதவியை எதிர்பாக்கறாங்க. போன வருசம் விளைஞ்ச கேவிரு; இருபது மூட்டை அப்படியே அவரண்டை இருக்குது. அதை அவங்க பண்ணையாளுங்களுக்காக வச்சிருக்காராம். ஒரு வாரத் தவணைக்கு ஆளுக்கு ஒரு மரக்கால், ரெண்டு மரக்கால் கேக்கணுமின்னு யோசிச்சுக்கிட்டு இருக்காங்க."

"ஊரோடு கொடுக்க முடியுமாடா?"

"கொடுக்கலாமுங்க. ஒரு வாரச் சாப்பாட்டுக்குத்தானே? கேவிருக்குக் கேவிரானலும் துட்டானலும் கொடுத்திடறதாகப் பேசிக்கிறாங்க. பாளையத்துக்கு வேப்பலை அடிச்சுக்கிட்டு இருக்காங்க. நாளை நாளையன்னிக்குத் தெரியும் சங்கதி."

"இந்தப் பைத்தியம் கொடுத்தாலும் கொடுத்துவிடும். ஆனல், திரும்பி வருமான்னு கனவுலேகூட நினைக்காதே!" என்றார் வீராசாமி பிள்ளை.

"அவ்வளவு மோசத்துக்குப் போக மாட்டாங்க. எதுக்கும் ரெண்டு நாள் பொறுக்கலாமுங்க" என்று அவன் விடை பெற்றுக்கொண்டு போனன்.

மறுநாள் பிற்பகல் மூன்று மணிக்கு நூறு ஹரிஜனங்கள், கும்பலாக வந்து கண்ணையிரம் பிள்ளையின் வீட்டுக்கு முன் கூடினர். முன்னதாகவே பாளையத்தின் மூலம் சமாசாரத்தைத்

தெரிந்துகொண்ட பிள்ளைக்கு, இப்பெருங் கூட்டத்தைக் கண்டதும் சிறிது மனக் கலக்கம் ஏற்பட்டது.

"பாளையம், இவ்வளவு பேருக்கும் கொடுக்கத் தானியம் இருக்குமாடா?"

"இருக்குதுங்க. ஆளுக்குப் பத்துப் பன்னிரண்டு படிக்கு மேலயா கொடுக்கப்போகிறோம்?"

"அப்புறம் உனக்கு, மாட்டுக்காரன்களுக்கு, வண்ணான், பரியாரி—எவ்வளவோ பேர் இருக்காங்களே, அவர்களுக்குக் கஷ்டமில்லாமல் பார்த்துக்கொள்."

"திருப்பிக் கொடுத்திட மாட்டாங்க?" என்றான் பாளையம்.

"சரி, நம்மை அண்டிக்கொண் டிருப்பவர்களை நாம் கைவிடக்கூடாது. அதை மாத்திரம் கவனி. அப்போ, அளந்து விடேன்!"

அவர் சொல்லிக்கொண் டிருக்கும்போதே ஒரு கிழவன் கண்ணாயிரம் பிள்ளையைப் புகழ ஆரம்பித்தான். "ஏழைங்களுக்குப் படி அளக்கிற தருமராஜா! உங்களுக்கு ஒரு நாளும் குறை வராது!"

"என்ன மாமா, இதையும் களத்துமேட்டுத் தருமமின்னு நினைச்சுடாதே! யசமானுக்குத் திருப்பிக் கொடுக்கணும். மறந்திடாதே."

"அட, கூறுகெட்டவனே. அது தெரியுமடா எனக்கு! யசமான்கிட்டேத் தின்னது கணக்குப் போட்டு முடியுமா? இப்போ கெட்டுப் போச்சு. திருப்பிக் கொடுக்காட்டி, அவங்க ஆளுங்க பிழைக்கிறதெப்படி? யசமான், ஏழைங்க மனதைக் குளிர வைக்கிறது, வீணாப் போவாதுங்க!" கிழவனைப் பேசவேண்டாமென்று கண்ணாயிரம் பிள்ளை சமிக்ஞை செய்தார். பாளையம், படியைக் கொணர்ந்து அளக்க ஆரம்பித்தான். மாதவன் ஒவ்வொருவனுக்குக் கொடுத்ததையும், அவன் பெயரையும் ஒரு நோட்டுப் புஸ்தகத்தில் எழுதிக்கொண்டான். அவன் சிநேகிதர்களும் வேடிக்கையாகப் பாளையத்துக்குச் சகாயம் செய்தனர். வாங்கிக்கொண்டவர்கள் பிள்ளைக்குக் கும்பிடு போட்டு

விட்டு, வரிசை வரிசையாகத் திரும்பிச் சென்றனர். கடைசி ஆள் போனதும், இன்னும் நான்கு மூட்டைகள் மிஞ்சியதாகப் பாளையம் தெரிவித்தான். "பின்னே, என்ன? பார்த்துக்கொள்ள லாம், போ'' என்ருர் கண்ணுயிரம் பிள்ளை.

"இவர்களெல்லாம் திருப்பிக் கொடுப்பார்களா?'' என்று முத்துசாமி மாதவனைக் கேட்டான். மாதவன், சிரித்தவாறு தன் தந்தையைப் பார்த்தான். "கொடுத்தால் கொடுக்கட்டும், கொடுக்காத போனல் போகட்டும்'' என்று கண்ணுயிரம் பிள்ளை கையை அசைத்தார்.

முத்துசாமி - ஒரு மனிதனைப் பார்த்த மாத்திரத்தில் எடை போடும் சக்தி தனக்கு உண்டு என்று பெருமை அடித்துக் கொள்பவன் - இப்பொழுது மாதவனின் தகப்பனுரைப்பற்றித் தெரிந்துகொள்ள முடியாதவனுக விழித்தான்.

சந்தையிலிருந்து திரும்புகிறவர்கள்போல், மூட்டை, முடிச்சுகளோடு ஹரிஜனங்கள் தம் வீட்டு வழியாகப் போவதைப் பார்க்கப் பார்க்க வீராசாமி பிள்ளைக்கு ஒரே எரிச்சல் எடுத்துக்கொண்டது. அவர்களில் இரண்டொருவர் அவரைப் பார்த்துக் கள்ளச் சிரிப்புடன் போனது, அவருடைய துராங்காரத்தை மேலும் அதிகரிக்கத்தான் அதிகரித்தது.

"மதுரை, கண்ணுயிரத்துக்கு உண்மையிலேயே பைத்தியம் பிடித்துவிட்டதா! இல்லாவிட்டால், எவனுவது இப்படி வாரி இறைப்பானு! இந்த வருஷமும் மழை பூஜ்ஜியந்தான். அப்பொழுது அவன் என்ன செய்யப் போகிருன் ?''

"ரொம்பத் துணிச்சல் காரருங்க !''

"அவன் துணிச்சலுலே நெருப்பைப் போடு! அவன் ஒழிகிறதோடு, எல்லாரையும் சேர்த்து ஒழித்திடுவான்போல் இருக்கிறதே! இப்போ ஒன்றுக்கு மூன்ருய்ச் செலவழித்தால்கூட நரிமேட்டைச் சீர்ப்படுத்த முடியாது. அட, நான் உனக்கு எவ்வளவோ கொடுக்கிறேன். அதை உனக்கு வைத்துக்கொள்ளாமல் ஊரெல்லாம் பங்கிட்டு விட்டால், உன் கதி என்ன ஆகும் ?''

"சாக வேண்டியதுதான். அவருக்கு மூளை கொஞ்சம் கலங்கிப் போயிட்டுதின்னு நினைக்கிறேனுங்க."

"கலங்கிறதாவது! அவனுக்கு மனது அடியோடு ஒழிந்து வெகுகாலம் ஆயிட்டுதுடா!" என்று வீராசாமி பிள்ளை, தன்னை அறியாது மாபெரும் தத்துவத்தை உரைத்தார்.

"பிள்ளை ஜர்ஜனுகி, ஆயிரம் ஆயிரமாய்ச் சம்பாதிச்சுடுவான் என்கிற தைரியமிங்க" என்முன் மதுரை.

"அப்படியாவது, எல்லாத்தையும் விற்றுக்கொண்டு ஊரை விட்டுத் தொலைந்து போகட்டுமே! ஒன்று சொல்கிறேன். மதுரை; அவன் இந்த ஊரில் இருப்பது எனக்கு எள்ளளவும் இஷ்டமில்லை. அவனைத் துரத்திவிட்டுத்தான் வேறு வேலை பார்க்கணும். நான் சொல்வது தெரியுதா?"

மதுரை தலையை அசைத்தான். "நாளைக்குக் காலையிலே புலிப்பாளையம் போய் வரணும். நினைவு வச்சுக்கோ. நீ போய், மாரியப்பன் பனை ஓலைச் சங்கதி என்ன ஆச்சுதின்னு கண்டுக்கிட்டு வா" என்று வீராசாமி பிள்ளை, மதுரையை அனுப்பி விட்டு, யோசனையில் ஆழ்ந்தார்.

மாதவனைப்போல் தன் மகன் பாலன், படிப்பில் முன்னேற்றம் அடைய மாட்டான் என்பது அவருக்கு உள்ளூறத் தெரியும். அதனால் அசூயை என்ற பேய், அவரை ஒருபுறம் வாட்டியது. பிறகு, தமக்கு அவ்வளவு செல்வமிருந்தும், கிராமத்தில் தமக்குச் செல்வாக்கும் மதிப்பும் இல்லாமல் போனதற்குக் காரணம் கண்ணாயிரம் பிள்ளையின் செய்கைகளே என்று அவருக்குத் திண்ணமாகத் தெரிந்துவிட்டது. அதனால், கண்ணாயிரம் பிள்ளையின்மீது அவருக்கு உண்டான வெறுப்பை விவரிக்க முடியாது. இவ்வெறுப்புப் பேயினால் பீடிக்கப்பட்டதால், உண்மையில் தம் மூளையே கொதித்து, மனக்குழப்பத்தை உண்டாக்கியதென்பதை அவரால் உணர முடியவில்லை.

மறுநாள் காலையில், இணை பிரியாத மதுரையுடன் அவர் புலிப்பாளையத்துக்குச் சென்றார். நாயக்கரைத் தேடிப் பிடித்து, அவருடன் ஏகாந்தமாகப் பேசத் தொடங்கினார்.

“உங்களுக்கு வட்டியும் முதலும் சேர்ந்து, பதினைந்தாயிரம் ஆகியிருக்கிறது. ஆனால் இது வரையிலும் வந்த வட்டி, வருஷத்துக்கு எழுநூறுதான். நான் உங்களுக்கு வருஷத்துக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன். எப்படி வேண்டுமானாலும் எக்ரிமென்டு எழுதிக்கொள்ளுங்கள். மாசூல் விளைந்தாலும் விளையாத போனாலும் உங்களுடைய பணம் வந்துவிடும்”

“அது எப்படி முடியுமிங்க ?”

“கண்ணாயிரத்துக்கு விவசாயம் செய்கிற வகை தெரியாது. முதல் பாசனம் அவனுக்குத்தான். நெல்லு நெல்லுன்னு சாகாமல் மிளகாய் போட்டிருந்தால், அவன் இதற்குள் உங்கள் கடனை அடைத்து, பிறருக்கும் தான் கடன் கொடுத்திருக்கலாம். அவன் பூமி தங்கமானதுங்க. மிளகாயிக்குத் தண்ணியே வேண்டியதில்லை. நெல்லுக்குத் தேவையானதுலே முப்பதுலே ஒரு பங்கு இருந்தால் போதும்; அதோடு அவன் கொஞ்சம் பைத்தியமுங்க. பஞ்ச காலத்தில் உணவுப் பொருள்தான் பயிரிடணுமாம். தண்ணீர் இருந்தால் அல்ல ? நெல்லுக்கு நெல்லும் போயிட்டுது; மிளகாயிலே வருகிற கொள்ளை லாபமும் இல்லை. இவனுக்குக் கடவுள் வக்காலத்து கொடுத்தாற்போல நினைத்துக்கொண்டால் முடியுமா ?”

“இப்பொழுது நீங்கள் என்ன செய்யணும் என்கிறீர்கள் ? சுருக்கமாய்ச் சொல்லுங்கள்” என்றார் நாயக்கர்.

“பதினையாயிரத்துக்கு அந்த நாற்பது ஏகராவைப் போக்கியத்துக்கு எழுதி வாங்கிக்கொள்ளுங்கள்.—அதுதான் சுவாதீன அடமானம். எனக்கு ஆயிரம் ரூபாயிக்குக் குத்தகைக்கு விட்டு விடுங்க. அவன் ஏரிக்கரையிலேயே காலை வைக்கத் தேவையில்லை.”

“இரண்டு மாதம் டயம் கேட்டார். நானும் ஒப்புக்கொண்டேன். அறுப்பு அறுத்தால் என்ன நெல் கிடைக்கும்?”

“ஒரு மணி கிடைக்காது. தண்ணீர் இல்லையிங்க. இந்த வருஷம், போன வருஷத்தைவிட மோசம். இன்னொரு தடவை

வரும்போது, நீங்களே பயிரைப் பாருங்கள். துட்டு அவரிடத்திலே காலணு பெயராது. இது மாதிரி செய்தீர்களானல் உங்களுக்கும் வரும்படி வரும்; அவருக்கும் வட்டி ஏருது!'' என்று கண்ணுயிரம் பிள்ளைக்கும் சகாயம் செய்வதுபோல் வீராசாமி பிள்ளை சொன்னர்.

"சரி, அவரைப் பணம் திருப்பிக் கொடுக்க முடியுமான்னு ஒரு வார்த்தை கேட்டுவிட்டுச் செய்கிறேன்.''

"அவன் கொடுப்பேன்னுதான் சொல்வான். ஆனல் கைக்குப் பணம் வராது.''

"அதுக்கு டயம் லிமிட் வைக்கமாட்டேன்? இந்த ஏற்பாடு எனக்குப் பிடித்திருக்கிறது. கட்டாயம் அப்படியே செய்து விடலாம்'' என்ருர் நாயக்கர்.

"எனக்கும் எதைப் போடுவதென்று தெரிய வேண்டுமல்லவா? இவ்வளவு நாளுக்குள்ளே முடியுமின்னு நிச்சயமாய்ச் சொல்லிவிட்டால், அதற்குத் தகுந்த ஏற்பாட்டை நான் செய்வேன்'' என்ருர் வீராசாமிபிள்ளை.

"ஒரே ஒரு மாதம் வைத்துக்கொள்ளுங்கள். அற்கு முந்தியே முடியுமே தவிர, பிந்திப் போகாது'' என்று நாயக்கர் வாக்களித்தார்.

"நீங்கள் ஒரு வார்த்தை சொல்லிவிட்டால், அது தவருதின்னு எனக்குத் தெரியாதா?'' என்று வீராசாமி பிள்ளை விடை பெற்றுக்கொண்டார்.

நடந்துகொண்டே, "மதுரை, இனி அந்த ஏரிப்பக்கம் அவன் வரமாட்டான்!'' என்று சந்தோஷப்பட்டுக்கொண்டார்.

"அதுக்குள்ளே, மத்த சங்கதியையும் முடிச்சிடணுமிங்க'' என்ருன் மதுரை.

"பின்னே, அது இல்லாதையா?'' என்ருர் வீராசாமி பிள்ளை.

மூன்று தினங்களுக்குப் பிறகு, மாதவன் தன் சிநேகிதர்களுடன் நகரத்துக்குத் திரும்பச் சித்தம் செய்துகொண்டான். வீராசாமி பிள்ளையோடு எவ்வளவு மனஸ்தாபம் இருந்தபோதி

லும், அவருடைய மகள் மீனாட்சியை மாதவன் தன் ஆருயிர்த் தோழியாகவே கருதினான். போவதற்கு முன் அவளோடு பேசாவிட்டாலும், ஒரு முறை கண்ணாரப் பார்க்கவாவது வேண்டுமென்று அவன் ஆசைப்பட்டான். ஆனால், சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. வீராசாமி பிள்ளை இல்லாத சமயத்தில், அவன் நாலைந்து தடவை அவருடைய வீட்டுக்கு முன் உலாவினான். பலன் இல்லை. பிறகு துணிச்சலோடு, தெருவில் விளையாடிக்கொண்டிருந்த பாலனை அழைத்து, "அம்மா இருக்காங்களா?" என்று கேட்டான்.

"ஊம், இருக்காங்க!"

"அக்கா?"

"அக்காவும் இருக்குது. ஆனால் அக்கா சும்மா அழுதுகொண்டே இருக்கிறாள். அப்பா வீட்டிலே இல்லை. நீ வேணுமின்னால் போய்ப் பார்" என்று ரகசியமாகச் சொன்னான். மாதவனுக்குப் புன்முறுவல் வந்தது.

"நான் போகக் கூடாது. அவர்களை வரச் சொல்லேன். நான் இரவு ஊருக்குப் போகிறேன் பாரு!"

பாலன் உள்ளே விரைந்து சென்று, தகவல் கொடுத்துவிட்டு, "வராங்க" என்று விளையாட ஓடிவிட்டான்.

"என்ன தம்பி, ஊருக்குப் போறயாமே?" என்றாள் பார்வதி அம்மாள்.

"ஆமாம் மாமி, சொல்லிவிட்டுப் போகலாமென்று வந்தேன்" என்று மீனாட்சியை உற்றுக் கவனித்தான். அவள் முகத்தில் சோகம் குடிகொண்டிருந்தது.

"நான் போய் வரட்டுமா, மீனா?" என்று அவன் சொல்லும்போது, மீனாட்சிக்குக் கண்களில் நீர் ததும்பிவிட்டது.

"அப்பா, நீ நல்ல பிள்ளை, உனக்கு ஒரு குறைவும் ஏற்படாது. கடவுள் எங்களைச் சோதிக்கிறாரே! உன்னை உள்ளே அழைக்கக்கூட எனக்குத் தைரியமில்லையே!" என்று பார்வதி கூறும்போது, அவன் மீனாவைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டு நின்றான்.

"மாமி, சோதித்துக் கடவுள் நன்மையைத்தான் செய்வார். எங்கப்பா சொல்வது பொய்யாகாது"—இப்போது வீராசாமி பிள்ளை தெருத் திருப்பத்தில் வருவதைக் கவனித்த பார்வதி அம்மாள், "இரு" என்று உள்ளே சென்று, ஒரு லாந்தரைக் கொண்டுவந்து மாதவனிடம் கொடுத்து, "இது உங்களது, எடுத்துக்கொண்டு போ" என்று தாழ்ந்த குரலில் சொன்னாள்.

அதற்குள் வந்து விட்ட வீராசாமி பிள்ளை, லாந்தரை எடுத்துப் போகும் மாதவனையும், தன் மனைவி, மகளையும் எரித்து விடுவதுபோல் பார்த்தார்.

"எங்கே வந்தான் அவன்?" என்று கர்ஜித்தார்.

"அன்னிக்கு ராத்திரி கொண்டுவந்த அவர்களுடைய லாந்தர் இங்கே நின்றுவிட்டது..."

"அப்பவே கொடுக்கிறதுக்கு என்ன? மானங் கெட்ட பயல்! இவனை யார் இங்கே வரச்சொன்னது? நீ ஒரு பீடை! உன்..." என்றவர் பேச்சை அடக்கிக்கொண்டு, காலின் முன் இருந்த மணையை உதைத்துத் தள்ளினார்.

## 7

மாதவன் வைத்தியக் கலாசாலைக்குத் திரும்பிப் போய் ஒரு வாரம் இருக்கும். பார்வதி அம்மாளுக்குத் தன் தாயார் மரண அவஸ்தையில் இருப்பதாகத் தகவல் வரவே, மீனாட்சியையும் பாலனையும் அழைத்துக்கொண்டு, அவள் பிறந்தகம் போய்விட்டாள். அதனால் வீராசாமி பிள்ளை தாமே சமையல் செய்து கொள்ள வேண்டியதாயிற்று. சமையல் வேலை அவருக்கு வெகு சகஜமாயிருந்ததால், அவர் ஒரு விதக் கஷ்டத்தையும் அநுபவிக்கவில்லை. பார்க்கப் போனால், இத்தருணத்தில் அவருக்கும் மதுரைக்கும் தனிமையாகக் கலந்து பேச, ஓர் அவகாசம் ஏற்பட்டது மிகவும் சௌகரியமாக இருந்தது.

ஒரு நாள். வற்றிப்போன மாடுகளை நாட்டுக்கு ஓட்டிப் போய்க்கொண் டிருந்த சில வியாபாரிகளை வீராசாமி பிள்ளையும் மதுரையும் தாமாகவே அழைத்து, அவர்களை ஏரிக்குச் சமீ

பத்திலிருந்த இலுப்பைத் தோப்பில் இரவில் மந்தை போடும்படி கேட்டுக்கொண்டார்கள்.

ஐம்பது அறுபது மாடுகள் தங்குவதால், தங்களுக்கு நல்ல உரம் கிடைக்குமென்றும், அதற்காக இரண்டு சுமை வைக்கோல் தருவதாகவும் வீராசாமி அவர்களிடம் சொன்னார். இவ்வளவு சௌகரியங்கள் கிடைக்கவே, மாடு ஓட்டிகள் அவ்வேற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டனர்.

"காலையில் ஐந்து மணிக்கு மாடுகளை ஓட்டுவீர்களா?" என்று வீராசாமி பிள்ளை கேட்டதற்கு, "மூணு மணிக்கே கிளம்பி விடுவோம். குளுந்த வேளையிலேதானே நடக்கணும்? வெய்யிலுலே கன்றுக்குட்டிகள் நடந்தால் என்னத்துக்கு ஆகுங்க?" என்றான், அக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தவன்.

"அதுவும் நல்லதுதான்" என்றார் பிள்ளை பல யோசனைகளோடு.

இரவில் அவ்வழியாக வந்த பாளையத்திற்கு, என்றும் இல்லாமல் இப்பொழுது இலுப்பைத் தோப்பில் மாட்டு மந்தை இருந்ததைக் காணச் சிறிது ஆச்சரியமாகத்தான் இருந்தது. வழிப்போக்கர்கள் என்று தெரிந்ததும், அவ்விஷயத்தைப்பற்றி மேலே யோசியாமல், கண்ணையிரம் பிள்ளையின் வீட்டுக்குச் சென்று, கறவை மாடுகளுக்கு ராத்தீனியைப் போட்டுவிட்டு, வழக்கம்போல் சிறிது வம்படிக்க, பிள்ளைக்காக அவன் காத்திருந்தான். பிள்ளை ஆகாரத்தை முடித்துக்கொண்டு திண்ணையில் வந்து உட்கார்ந்துகொண்டதும், இருவரும் ஓய்வு ஒழிவில்லாத விவசாய விஷயங்களைப்பற்றி வெகு நேரம் பேசினர். பிறகு தம் தம் இடத்துக்குப் படுத்துறங்கச் சென்றனர்.

விடிந்ததும், பாளையம் கறவை மாடுகளை வெளியே கட்டி, கட்டுத்தறியைச் சுத்தம் செய்துவிட்டு, பல் விளக்கி, திருநீறு பூசி, சூரியநாராயணனைப் பார்த்துத் துதி செய்தான். அதன் பின், லோகநாயகியம்மாள் தனக்காக எடுத்து வைத்திருந்த உணவைப் புசித்துவிட்டு, தெருப்பக்கம் வந்தான். இதற்குள், தம்முடைய ஸ்நான பானங்களை முடித்துக்கொண்ட கண்ணை

யிரம் பிள்ளை, வந்த நோயாளிகளுக்கு மருந்தை வழங்கிக்கொண்டிருந்தார். அப்பொழுது, ஆண்டி, யாரோ அடித்துக் கொன்றுவிட்டதுபோல் உரக்க அழுதுகொண்டு ஓடி வந்தான்.

"யசமான்! அப்பா! எல்லாம் அடியோடு போச்சே!" என்று நாவில் வார்த்தை எழும்பாமல் தேம்பினான்.

"என்னடா! சங்கதியைச் சொல்லேண்டா!" என்று பாளையம் பதறினான்.

"சம்பாப் பயிரை எல்லாம் அளிச்சிட்டாங்க !"

"என்ன !"

"ஊருலே போற மாடுகளை எல்லாம் மேய விட்டு, மிதிச்சு, நாசமாக்கிட்டாங்க, அப்பா !"

"அதுக்குத்தான் நேத்து மந்தையைப் போட்டாங்களா! அய்யோ! என்ன சாவியாய்ப் போனாலும், ஏளெட்டு வண்டி நெல் கிடைக்குமின்னு பாத்தேனே! நான் போறேன் யசமான்!" என்று பாளையம் கண்ணீருடன் ஓடினான்.

"நானும் வருகிறேன்" என்றார் பிள்ளை. ஆனால், பாளையம் அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல் ஓடிவிட்டான். ஆண்டி, தன் தகப்பனைப் பிடிக்க முடியாமல், சிறிது பிந்தியே சென்றான்.

"இதென்ன நம்பக் கூடியதாக இல்லையே? என்ன அக்கிரமம்! நாங்களும் வரோம், எழுந்திருங்க" என்றான் மருந்துக்கு வந்தவன் ஒருவன். பிறகு கண்ணையிரம்பிள்ளை புறப்பட்ட பொழுது, ஏறக்குறைய இருபது ஜனங்கள் அவரைப் பின் தொடர்ந்தனர்.

வயல்களில் பெரிய கும்பல் கூடியிருந்தது. பிள்ளையைக் கண்டதும், பாளையம் விரைந்து வந்து, "யசமான், இது வேணுமின்னு செஞ்ச வேலையிங்க. சும்மா விட்க்கூடாது. கேஸ் போட்டு, அவங்களைத் தொலைச்சிடணும். இல்லாத போனால், பெரிய மானக்கேடுங்க. நாங்க இத்தினி ஆளுங்க இருந்து, என்ன பலன்! எங்களைப் பதர்னு அல்ல நினைச்சுட்டாங்க? நாங்க ஆண் பிள்ளைங்க இல்லையா? ரோச மில்லையா? இதோ பாருங்க, அவங்

களுக்குத் தண்டனை விதிக்காட்டி, அவன் எந்தச் சீமானாய் இருந்தாலும், நாங்க சும்மா இருக்கமாட்டோம்!'' என்றான்.

“பாளையம், பொறு, பொறு! தலை போகிறது ஒன்று மில்லை ..''

“இதுக்கு மேலே எது போகுமிங்க, யசமான்! என் வயிறு எரியுதே! ஒரு மணி நெல்லு எடுக்காதே பண்ணிட்டாங்களே!'' என்று பாளையம் 'ஓ' வென்று அழ ஆரம்பித்துவிட்டான்.

“நாளைக்கு அவங்களது ஒரு பயிரு இருக்குதா பாக்க றேன்!'' என்றான் ஆண்டி.

“அடே, அந்த வழிக்கே போகாதே. யாருக்கடா லாபம்? விளைந்த நெல்லைக் கொண்டு போயிருந்தால், நாலு பேர் சாப்பிட லாம். புத்தி கெட்டுப் போய்ப் பயிரை அழித்தால், என்ன கிடைக்கும்? பாவத்தைத்தான் மூட்டை கட்டிக்கொள்ள லாம்!''

“பாவமாவது; புண்ணியமாவது, யசமான்! நீங்கள் கேஸ் போட்டோ எப்படியோ அவங்களை நஷ்டத்தைக் கக்கும்படி பண்ணுட்டி, நான் பண்ணையை விட்டு விலகிடுறேன்!''

“அப்புறம்?''

“அப்புறமா? இந்த மருதைப் பயலையும் அந்த வீராசாமி பிள்ளையையும் அடியோடு ஒளிச்சிடறேன். நான் பத்து வருசம் ஜெயிலுக்குப் போனாலும் சரி! எனக்குத் தூக்குப் போட்டா லும் சரி!''

“பாளையம்! பாளையம்! உனக்குக் கிளிப் பிள்ளைக்குச் சொல் வதுபோலச் சொன்னதெல்லாம், இவ்வளவுலேயா வந்து முடிந்தது!''

“நீங்க சாகவும் விடமாட்டேங்கிறீங்க! பிழைக்கவும் விட மாட்டேங்கிறீங்களே!'' என்று அவன், தலையில் அடித்துக் கொண்டான்.

“அக்கிருமக்காரங்க கிட்டே, துட்டு சேர்ந்து போனால், இப்படித்தான் செய்வாங்க, யசமான். அதுக்காகத்தான்

ஏழையென்றும் பணக்காரனென்றும் இருக்கக்கூடாது'' என்றான் ஒருவன்.

“அட பயித்தியக்காரா! இந்த உலகம் இருக்கிற வரையிலும், எந்த விதத்திலாவது தாழ்வும் உயர்வும் இருக்கத்தான் இருக்கும். ஐந்து விரல்களும் சரியாய் இருக்குதா? நீதி ஒன்றுதான் நீடித்து நிற்கும்!''

“பயிரை அளிச்சது நீதியா, சொல்லுங்க? நாட்டுக்குப் போற மாடுகளை, மந்தை போடச் சொன்னது ஒரு சாக்குங்க! அவங்க போனப்புறந்தான் இந்த வேலை நடந்திருக்குது. பில்லூரான் மாடுங்க மேஞ்சிதின்னு சப்பாணி சொல்றானே?''

“ஒருத்தன் வீட்டு மாடா? முருங்கப்பட்டி மாடுங்களெல்லாம் வந்துதாமே'' என்றான் ஒருவன்.

“முருங்கப்பட்டிக்காரங்களுக்கு வீட்டுக்கு ஒரு ரூபாய் கொடுத்தாங்களாமே'' என்றான் மற்றொருவன்.

“அவங்களைச் சாட்சி போட்டு, பிராது பண்ணுங்களேன், யசமான்'' என்றான் பாளையம்.

“அடே, அவர்கள் சாட்சி சொல்வார்களா? நாம் கண்ணாலே பார்க்கணும்.''

“பார்த்தால் என்ன செஞ்சிடுவீங்க?''

“நல்ல புத்தி சொல்லித் தடுப்பேன். சத்தியாக்கிரகம் செய்வேன்.''

“அதை நாங்க இப்பொ செய்யறோம். அடே, வீராசாமி பிள்ளை வீட்டுலே ஒரு அம்பது பேரு மறியல் போடுங்க. அந்த மருதைப் பயல் வீட்டுலே பத்துப் பேர் மறியல் போடலாம்...''

“பாளையம், ஏது நீகூட இப்படி ஆரம்பித்துவிட்டாய்? மகாத்மா காந்தி, கள்ளுக்கடைக்குப் போகும்போதோ கள்ளை விற்கும்போதோ, சத்தியாக்கிரகம் செய்யச் சொன்னார். குடித்த இரண்டு நாளைக்குப் பிறகா, ஒருவனை மறியல் போடுவது! உனக்கு இப்பொழுது மூளை சரியாய் இல்லை. இது நிம்மதியாய் யோசிக்க வேண்டிய விஷயம். பார்த்தாகிவிட்டது;

எழுந்திருந்து வா, வீட்டுக்குப் போகலாம்!'' என்றார் கண்ணாயிரம் பிள்ளை.

பாளையம் பேசவில்லை.

"பசிக்குப் படி அளப்பீங்களே, எங்களுக்கும் மனம் நோவாதா, யசமான்?'' என்றான் ஒருவன்.

"அதற்கு என்ன செய்வது? இந்த மாதிரி சமயத்தில்தான் பொறுமை வேண்டும். நீங்கள் யாரும் ஆத்திரப்படக்கூடாது. என் மனம் நோகாமல் இருக்க வேண்டுமானால், நீங்கள் சாந்தியாய் இருக்கவேண்டும். ஒரு வம்புக்கும் போகக்கூடாது. எனக்கு இல்லாத நஷ்டமா உங்களுக்கு?''

"அது ஒரு பேச்சுங்களா, யசமான்? நல்லவங்களுக்கு வர்ற நல்லது பொல்லாது எல்லாரையும் சேர்ந்ததுதான். நீங்க ஒண்ணும் செய்யமாட்டீங்க, தருமதுரை! அவங்க இப்படிச் செய்யறாங்க. உங்களுக்குத் தெரியாதது ஒண்ணுமில்லே. இப்படிப் பட்டவங்களைச் சும்மா விடறதுகூடப் பாவந் தானுங்க'' என்றான் ஒரு கிழவன்.

கண்ணாயிரம் பிள்ளை அவனை உற்றுக் கவனித்தார். பிறகு "இந்த மனக்கொதிப்புலே ஒன்றும் செய்யக்கூடாது. கொஞ்சம் ஆறப்போடலாம்'' என்று பாளையத்துக்கு மறுபடியும் நல்ல வார்த்தைகளைச் சொல்லி, அவனை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போனார்.

பாளையம், கதையாகச் சொன்னதை யெல்லாம் கேட்ட பிறகு, லோகநாயகி அம்மாளுக்கும் கோபம் பீறிக்கொண்டு வந்தது.

"இவனுக்கு என்ன கேடுகாலம் வந்துவிட்டது? நீ சொல்வதுபோலப் பயித்தியக்கார நாயை அடித்துத்தான் போட வேண்டும்!'' என்றாள் பாளையத்திடம்.

"அவன் வெறும் பயித்தியம் இல்லே அம்மா. இப்போ ஏரித் தண்ணி முழுவதையும் தன் வயலுக்குப் பாச்சிட்டு, வண்டி, வண்டியாய் நெல் அறுக்கணுமின்னு பார்க்கிறான்.

ஆனால், அது நடக்கப் போறதில்லை. நாம் சும்மாயிருந்தால், வேலன்சாவடி ஜனங்க சும்மாயிருக்காது!''

''பார்வதி அம்மாளும் அவளுடைய குழந்தைகளும் இவன் கையிலே அகப்பட்டுக்கொண்டு முழிக்கிறாங்களே! இந்த மாதிரித் தகப்பனையா படைக்கணும்! ஆனால், அதுவும் கடவுள் செயல். அய்யா சொல்வதெல்லாம் சத்தியம். அவர் சாமியாருக்கு மேலானவர். அதை மறந்துவிடாதே!''

''எனக்குத் தெரியாதா அம்மா? அவர் மனதை நோவடிக்கிறவங்க உருப்பட மாட்டாங்க!'' என்றான் பாளையம் தழுதழுத்த குரலில்.

''எனக்கு இந்த ஊரைவிட்டே போய்விட்டால், நல்லது போலத் தோன்றுகிறது. பையனுக்குப் பட்டணத்தில் இல்லாத சம்பாத்தியமா?'' என்றாள் லோகநாயகி அம்மாள்.

''எங்க கதி என்ன ஆகிறது அம்மா? மூட்டைப்பூச்சிக்குப் பயந்துக்கிட்டு வீட்டைச் சுட்டுடுறதா! சின்ன அய்யா வாலே, இந்த ஊர் முன்னுக்கு வரணுமின்னு நாங்க காத்துக்கிட்டு இருக்கோமே! என்ன, என்னமோ பிளான் போட்டுக்கிட்டு இருக்கோமே?'' என்றான் பாளையம்.

''சரி, நடக்கிறது நடக்கட்டும். நீ மட்டும் அய்யாவுக்குத் தெரியாமல், தடா புடா என்று எதையும் செய்துவிடாதே!''

''நான் ஏன் அம்மா செய்கிறேன்?'' என்று பாளையம் வாக்களித்தான்.

ஊரில் நடைபெறுவதை யெல்லாம் நன்கறிந்த வீரர்சாமி பிள்ளைக்குச் சிறிது அச்சம் ஏற்படத்தான் ஏற்பட்டது. கண்ணாயிரம் பிள்ளையால் தமக்கு ஒரு தீங்கும் வராதென்பது அவருக்கு நிச்சயமாகத் தெரியும். ஆனால் மற்றவர்கள், கோபவெறியில் ஏதாவது செய்துவிட்டால் என்ன செய்வது? அவர் தமக்குச் சில பாதுகாப்புகளைத் தேடிக்கொண்டார். மதுரையின் உறவினர்களில் இரு முரடர்கள் இருந்தார்கள். அடிதடி சண்டையே அவர்களுக்குப் பிழைப்பு. பல முறை ஜெயிலுக்குப் போனவர்கள். மதுரையின் மூலம், அவர்களை இரவில் துணைக்

குத் தம் வீட்டில் படுத்துக்கொள்ளும்படி அவர் ஏற்பாடு செய்தார். இதனால் கிராமத்தில் சிலருக்கு அருவருப்பு உண்டாயிற்று. ஏனெனில், இவ்விருவரும் எப்படியோ குடித்து விட்டும், கட்டுக் கட்டாய்ச் சிகரெட், பீடிகளைக் கொளுத்திக் கொண்டும் அட்டகாசம் செய்யத் தொடங்கினர். நினைத்த பொழுது பணம் கொடுக்காவிட்டால், வீராசாமி பிள்ளையையே அலட்சியம் செய்வதோடு, தூஷணையாகவும் பேசத் தொடங்கினர். கேடிகள் ஆனதால் எந்த வீட்டில் எச்சமயத்தில் திருடுவார்களோ என்று பயந்து, இரண்டொரு பேர்கள் வீராசாமி பிள்ளையினிடம் எச்சரித்ததோடு, போலீஸ் அதிகாரிகளுக்கும் எழுதுவதாகப் பயமுறுத்தினர். வீராசாமி பிள்ளைக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஆனால் இவ்விஷயத்தில் கண்ணுயிரம் பிள்ளை எள்ளளவும் தலையிட்டுக்கொள்ளவில்லை என்பது மட்டும் அவருக்குத் தெரியும். எனினும், உலகமெல்லாம் கண்ணுயிரம் பிள்ளைபோல் இருக்காதென்ற எண்ணம் இன்னும் அவருக்கு உதிக்கவில்லை.

கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட சங்கதி ஆகிவிட்டது. அக்குடிகார முரடர்களை எப்படி நீக்குவது என்று வீராசாமி பிள்ளை யோசித்துக்கொண் டிருக்கையில், ஓர் இரவு பக்கத்து வீட்டுக்காரரின் வைக்கோல் போர், தீப் பிடித்துக்கொண்டு, சொக்கப்பனைபோல் கொழுந்துவிட்டு எரியவே, நாலா பக்கங்களிலிருந்தும் ஜனங்கள் நெருப்பை அவிக்கப் பறந்து வந்தனர்.

## 8

நல்ல காலமாய், காற்றோட்டமில்லை. அதோடு வைக்கோல் போரும் சிறியதாக இருந்ததனால், ஜனங்களால் தீயை அணைக்க முடிந்தது. கண்ணுயிரம்பிள்ளையும் பாலையமுங்கூடச் சகாயம் செய்தனர். பாலையம், வீராசாமி பிள்ளையின் மாட்டுத் தொழுவத்திலிருந்த மாடுகளைத் தைரியமாக உள்ளே சென்று, அவிழ்த்து விடாமல் இருந்தால், அவைகளில் அநேகம் சேதமா

யிருக்கும். ஏனெனில், எவ்வளவு தடுத்தும், வீராசாமி பிள்ளை யின் மாட்டுக் கொட்டகை அடியோடு எரிந்துதான் போயிற்று. ஆனால், 'அதோடு தீ நின்றதே!' என்று எல்லோருக்கும் சந்தோஷம். இவ்வளவு கூத்திலும், வீராசாமி பிள்ளை தம் பாதுகாப்புக்கு அமர்த்திய இரண்டு ரௌடிகளும், குடிமயக்கம் தெளியாதவர்களாக ஓர் இடத்தில் உட்கார்ந்துகொண்டு, ஒருவர் மீது ஒருவர் குற்றம் சாட்டிக்கொண் டிருந்தனர்.

"நீ பீடியை எறிந்ததுனாலே வந்திச்சு!" என்றான் ஒருவன்.

"போடா, நீ தீக்குச்சியை அணைக்காமே எறிஞ்சிட்டே!" என்றான் மற்றொருவன்.

இதைக் கேட்ட ஒரு கிராமவாசி பக்கத்து வீட்டுக்காரரை அழைத்து, "இந்தக் குடிகாரர்கள் செய்த வேலை அருணாசலம்! பீடியைக் கொளுத்தி வைக்கோல் போர்மீது போட்டார்களாம்" என்றார். அருணாசலத்துக்கும் இருபது பிராயமுள்ள அவர் மகனுக்கும் கோபவெறி தலைக்கேறியது.

"நல்ல புண்ணியவான் அய்யா, நீ! இன்னிக்குப் போர், நாளைக்கு வீடு; அப்புறம் ஊரையே கொளுத்திவிடணுமின்னு பார்க்கிறயா? கொள்ளையடித்த பணத் திமிரு என்னிடத்திலே பலிக்காது. அண்ணே, நீங்கள் முனிசீப் என்கிற முறையிலே நான் உங்களிடம் பிராது செய்கிறேன். இத்தனை பேரும் சாட்சி!" என்று அவர் சொல்லிக்கொண் டிருக்கும்பொழுதே, "பீடியைக் கொளுத்தியா போட்டே!" என்று அவருடைய மகன் ஒரு ரௌடியை எட்டி உதைத்தான்; மற்றவன் அடிக்கக் கை ஓங்கவே, அவனுக்கு ஒரு குத்துவிட்டான். கும்பலில் ஆளுக்கு ஓர் அடி போடவே, ரௌடிகள், "அய்யோ! அப்பா!" என்று கதறத் தொடங்கினர். கண்ணாயிரம் பிள்ளை எவ்வளவு தடுத்தும் முடியவில்லை. "இனி இந்தக் கிராமத்தில் காலை வைக்காதீர்கள்! உடம்பிலே ஒரு எலும்பு இருக்காது. ஓடுங்கள்! ஓடுங்கள்!" என்று அவ்விரு போக்கிரிகளையும் ஊருக்கு அப்பால் இருந்த ஆலமரம் வரையில் ஜனங்கள் அடித்துத் துரத்திக் கொண்டு போயினர். அடியுடன் குடி மயக்கமும் சேரவே,

அவர்கள், அடிக்க வந்தவர்களின் காலைப் பிடித்துக்கொண்டு; மெய்ம்மறந்து மரத்தடியில் படுத்துக்கொண்டனர்.

வீராசாமி பிள்ளையின் வீட்டுத் திண்ணையில் விளக்கு வெளிச்சத்தில் கூடிய சபை இன்னும் கலையவில்லை. அருணாசலம், ஒரே பிடிவாதமாகத் தனக்கு நூறு ரூபாய் நஷ்ட ஈடாகக் கொடுத்தாலொழிய, பிராது செய்வது தவறாது என்றார். வீராசாமி பிள்ளையோ தம் நஷ்டத்தைக் குறித்துப் புலம்பினார்.

"என்ன அண்ணா, நான் இவர்மீது பிராது செய்கிறேன். இவர் ரௌடிகள்மீது செய்யட்டும்" என்றார் அருணாசலம் பிள்ளை, அனைவருக்கும் சிரிப்பு வரும்படி.

"எல்லாம் கேலிப் பிழைப்பாய்ப் போயிட்டுது!" என்றார் வீராசாமி பிள்ளை.

"கேலியா! பாளையம் இல்லாத போனால் உன் மாடுகளெல்லாம் செத்திருக்குமே, அய்யா! இத்தனை பேரும் வராவிட்டால், ஊரே எரிஞ்சு போயிருக்குமே! கேலியாம், கேலி! இதோ பாருங்க அண்ணா, நான் எழுத்து மூலியமாயும் மனுக் கொடுத்து விடுகிறேன். மாஜிஸ்டிரேட்டுக்கு அனுப்பிவிடுங்கள். வீராசாமி பிள்ளை உங்களுக்கு உறவினர் என்று யோசிக்கக்கூடாது!" என்று அருணாசலம் கண்ணாயிரம் பிள்ளையைப் பார்த்துச் சொன்னார்.

"என்ன வார்த்தை சொன்னாய்!" என்று கண்ணாயிரம் பிள்ளை மூக்கின்மீது விரல் வைக்க, "அதுதான் மாட்டை விட்டுப் பயிரை அளிச்சாரு!" என்றான் பாளையம்.

"பாளையம்! வாயைத் திறக்காதே! அருணாசலம் எனக்குப் பட்சபாதம் இல்லை, அப்பா! நீயும் ஒன்றுதான்; வீராசாமியும் ஒன்றுதான். எடுத்ததற்கெல்லாம் கோர்ட்டும் விவகாரமுந் தானா? நமக்குள்ளே ஒற்றுமையாய், நீதிக்கு விரோதமில்லாமல் எல்லா விஷயங்களையும் தீர்த்துக்கொள்ளக் கூடாதா? உன் வைக்கோல் போர் சின்னது, ஐம்பது ரூபாய்க்கு மேல் பொறாது என்று நினைக்கிறேன். உன் மதிப்பு என்ன?"

"ஐம்பது ரூபாயை வாங்கிக்கொண்டு போ என்கிறீர்கள்?"

என்றார் அருணாசலம் புன்முறுவலுடன்.

"அப்பா வீராசாமி, அருணாசலத்துக்கு ஐம்பது ரூபாயைக் கொடுத்துவிடு. போனது போகட்டும்; இனிமேல் இந்த விஷயங்களில் தலையிடாமல் இருப்பது நல்லது" என்றார்.

"சரி, நாளைக்குத் தருகிறேன்."

"நாளைக்கா? அது வந்தாற்போல்தான்! உன்னிடத்தில் பணமில்லையா? கொடுத்தால் இப்பொழுது கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால் நான் செய்வதைச் செய்துகொள்கிறேன்" என்றான் பிடிவாதக்காரனான அருணாசலம், எழுந்து நின்று.

அதன்மேல், 'தீராதே, தெய்வமே!' என்று வீராசாமி பிள்ளை உள்ளே சென்று, ஐம்பது ரூபாயைக் கொணர்ந்து கொடுத்தார். கும்பல் கலைந்தது. உள்ளூற, 'இதோடு விட்டதே!' என்று வீராசாமி பிள்ளை சந்தோஷப் பட்டுக்கொண்டார்.

மக்களுடன் பிறந்தகம் சென்ற பார்வதி அம்மாள், அங்கே ஒரு மாதத்துக்குமேல் தாமதிக்க நேர்ந்துவிட்டது. ஆனால் சிகிச்சையோடு, தான் அன்பாகச் செய்த பணிவிடையால் தாயாருக்கு உடல் நலமடைந்ததைக் குறித்து அவளுக்குப் பரம சந்தோஷம். பார்வதியம்மாளின் நெருங்கிய உறவினர்களில் சிலர், நகரத்திலேயே வெகு காலமாக வசித்து வந்தனர். அவர்களில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த இளைஞனுக்கு இத்தருணத்தில் திருமணம் நடக்கப்போவதாகத் தெரிய வந்தது. வழக்கம்போல் திருமணப் பத்திரிகை வீராசாமி பிள்ளைக்கு அனுப்பப்பட்ட போதிலும், தற்செயலாக அவ்வூருக்கு வந்த மணமகனின் தந்தை, பார்வதியம்மாளும் குழந்தைகளும் திருமணத்துக்குக் கட்டாயம் வரவேண்டுமென்று வற்புறுத்தினர். நகரத்தை என்றும் பார்க்காத மீனாட்சிக்கும் பாலனுக்கும் அந்தச் சாக்கை வைத்துக்கொண்டாவது நகரத்தைப் பார்க்க வேண்டுமென்று துடிதுடிப்பாய் இருந்தது. எல்லோரும் புறப்பட்டார்கள்.

மீனாட்சிக்கும் பாலனுக்கும் நகரம் தெய்வ லோகம் போலக் காணப்பட்டது. பாலன் எடுத்ததற்கெல்லாம் கேள்வி

கள் கேட்டுக்கொண் டிருந்தான். ஏராளமாகவும் விதவிதமாகவும் இருந்த மோட்டார் வண்டிகளைக் காண அவனுக்கு வெகு வியப்பாக இருந்தது. "அம்மா, நாம் ஏன் இந்த ஊரிலேயே இருக்கக்கூடாது?" என்று அவன் மெள்ளத் தாயாரைக் கேட்டபொழுது, அவளுக்குச் சிரிப்பு வந்தது.

"நமக்கென்ன வேலை இருக்கிறது. இங்கே? படித்தவர் களும் ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிப்பவர்களுந்தான் இங்கே இருக்க முடியும்."

"ஆமாம், இங்கே இருக்கிறவர்களெல்லாம் ஆயிரம், ஆயிரமாகச் சம்பாதிக்கிறார்களாக்கும்! அதோ அந்தப் பெண் உடுத்துக்கொண் டிருக்கிற சித்தாடையைப் பாரம்மா! எவ்வளவு அழகாக இருக்கிறது! எனக்கு இந்தச் சாக்குத் துணிதான் வாங்கிக் கொடுப்பே! என் ஆடையோ, என் மூஞ்சியோ!" என்று மீனாட்சி முறையிட்டாள்.

"உன் மூஞ்சிக்கு என்ன குறையம்மா?" என்றாள் பார்வதியம்மாள் புன்முறுவலோடு. "மூக்குக் கண்ணாடியும், பட்டுப் புடவையும் இருந்தால் அழகு வந்துவிடுமா?"

"அந்த ஜவுளிக்கடையில் புகுந்து பார்க்கலாமா?" என்றாள் மீனாட்சி.

"இந்தப் பேரமெல்லாம் எனக்குத் தெரியாது. கல்யாணம் முடிந்த பிறகு, மாமாவை அழைத்துக்கொண்டு போகலாம். சரி, திரும்பிப் போகலாம் வாருங்கள். இதற்குமேல் போனால், வீடு தெரியாமல் திண்டாட வேண்டும்."

"இன்னும் ஒரு தெருவைக்கூடத் தாண்டவில்லை. இது தானா உனக்குத் தெரிஞ்சது!"

"இது முந்தி ஊர் இல்லை, அம்மா. எவ்வளவு மாறி விட்டது!"

"பின்னே, எப்போ நான் எல்லாத்தையும் பார்க்கிறது? மிருகக்காட்சி, செத்த காலேஜு இன்னும் என்ன என்னவோ சொன்னியே, அம்மா"-என்று பாலன் முனகினான்.

"பொறு, பாலு. நாளைக்குக் காலையிலே தாலிகட்டி யாகி விடும். அப்புறம், எல்லாருக்கும் ஓய்வு இருக்கும். குமார சாமியையோ சீனிவாசனையோ அழைத்துக்கொண்டு, ஒரு இடம் பாக்கி இல்லாமல் காட்டுகிறேன்."

"சரி, இப்போ எனக்கு அந்த ஊதலை வாங்கிக் கொடு" என்று பாலன் ஒரு கடைப் பக்கம் கையைக் காட்டினான்.

"இது ஊதல் அல்ல, பாண்டு வாத்தியம். இனிமையாக வாசிக்கலாம்" என்று கடைக்காரன் ஒரு நொடியில் அந்த வஸ்துவை எடுத்து, வாசிக்க ஆரம்பித்தான்.

"இது என்ன விலை?"

"இரண்டரை ரூபாய், அம்மா."

"அப்பா! ஒரு ரூபாய்க்கு எத்தனையோ பேர் வாங்கியிருக்கிறார்களே!" என்று பார்வதியம்மாள் சொல்லி வைத்தாள்.

"ஒரு ரூபாயிலேயும் இருக்குது" என்று கடைக்காரன் மற்றொன்றை எடுத்து ஊதிக் காட்டினான்.

"இது யாருக்கு வேணும்? முதலில் எடுத்தது என்ன விலையானால் கொடுப்பாய்? ஒரே விலை சொல்."

"இரண்டு ரூபாயென்றால் பாருங்க!"

"ஒண்ணரை ரூபாய்க்குக் கொடுப்பியா?"

"நஷ்டத்துக்கா அம்மா, வியாபாரம் செய்யறது? வியாபாரம் விழுந்துபோயிட்டுதின்னால், நினைத்த விலைக்கா கேக்கிறது?"

"இதோ, இஷ்டப்பட்டால், கொடு. நான் அடித்தா பறிக்கிறேன்?"

"அட, கடவுளே! சரி, எடுங்க" என்று கடைக்காரன் பாண்டு வாத்தியத்தை விற்பனை செய்தான்.

மறு நாள் காலையில் முகூர்த்தம் ஆரம்பித்து முடியும் வரையில், மீனாட்சி, உட்கார்ந்த இடத்தை விட்டு நகராமல், எல்லா நடவடிக்கைகளையும் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள். ஆடைகளிலும் ஆபரணங்களிலும் இவ்வளவு ரகங்கள் இருக்குமென்று அவள் நினைக்கவே இல்லை. ஒரு காலணாச் செலவழிக்க முக்கால் அழும் தன் தந்தை இவற்றையெல்லாம்

வந்து பார்க்கவில்லையே என்று அவள் ஏங்கினாள். பகலில் நடந்த விருந்துச் சாப்பாட்டைப்போல் அவள் எப்பொழுதும் புசித்ததில்லை. வசித்தால் நகரத்தில் வசிக்கவேண்டும் என்ற ஆசை அவளுக்கும் உதித்தது. பாலனோ, பல சகாக்களைச் சம்பாதித்துக்கொண்டான். ஆடி ஓடுவதிலும், பற்பல பட்சணங்களைத் தின்பதிலும் அவன் பொழுதைப் போக்கினான். பார்வதியம்மாளுக்கு, மணமகன், ஒன்று விட்ட மாமனின் பிள்ளையாக இருந்த போதிலும், தன் பிறந்தகத்தைச் சேர்ந்தவர்களே என்று பெருமைப்பட்டுக்கொண்டாள்.

மாலையில் சங்கீதக் கச்சேரிக்கும் சிற்றுண்டி விருந்துக்கும் ஏராளமாகப் பந்துக்களும் நண்பர்களும் வந்தனர். அனைவரும் கண்டுகொள்ளும்படி உன்னதமான சோபாவின்மீது மணமகனும் மணமகளும் அமர்த்தப்பட்டிருந்தனர். காலையைவிட இப்பொழுதே அன்பளிப்புகள் வந்து குவிந்தன. மணமகனோடு கல்லூரியில் படிக்கும் பல தோழர்கள் வந்து, கை குலுக்கியவாறே இருந்தனர். இவைகளையெல்லாம் உற்றுக் கவனித்த மீனாட்சி, மாதவனும் அவனுடைய நண்பன் முத்துசாமியும் கூட மணமகனுக்கு ஏதையோ கொடுத்து, உறவாடுவதைக் கண்டு, பிரமித்துப் போனாள்; பிறகு தன் தாயாருக்கு ரகசியமாகத் தெரிவித்தாள். "அவனோடு படித்தவனாக இருக்கும். மாதவன் அந்தஸ்து உள்ளவன்தான். அவன் பெரிய டாக்டர் ஆகிவிடுவான், அதில் சந்தேகமில்லை! நிஜமாய், அவனைக் கூப்பிட்டால் நல்லது, மீனா. ஊரெல்லாம் சுற்றிக் காட்டிவிடுவான்.!"

"எப்படி அம்மா கூப்பிடுகிறது? அதோ, பாலுவைப் பார்! எங்கிருந்தோ பூமாலைகளைச் சுமந்துகொண்டு வருகிறானே! ஆ! மாதவன் அத்தான் அவனைப் பார்த்துவிட்டார். பாலு நம்மைச் சுட்டிக் காட்டுகிறான்!"

"ரொம்ப நல்லதாய்ப் போய்விட்டது. சரி நீ எழுந்திரு" என்று பார்வதியம்மாள் மெல்லச் சபையில் யாருக்கும் தொந்தரவு இல்லாமல் மீனாட்சியுடன் கல்யாணப் பந்தலுக்கு வெளியே வந்தாள். "நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்? தெரிந்

திருந்தால் உடனே வந்திருப்பேனே? பாலுவைக் கண்டதும் என்றால் திரும்ப முடியவில்லை" என்றான் மாதவன்.

"அத்தான், நான் நீங்கள் உள்ளே நுழையும்போதே பார்த்துவிட்டேன். அம்மாவிடம் சொன்னேன். எப்படிக் கூப்பிடறதின்னு யோசித்துக்கொண்டிருக்கும்போது, நீங்களே பாலுவைப் பார்த்துவிட்டீர்கள்" என்று சொல்லி மீனு சிரித்தாள்.

"அப்பொழுது, நீ இருந்து சாப்பிட்டுவிட்டு வாயேன், மாதவா. யாராவது ஒருவன் இருந்தால், நம்ம மாப்பிள்ளைக்கும் சந்தோஷமாக இருக்கும்" என்று புன்முறுவலுடன் அவனுடைய தோழன் முத்துசாமி, விடை பெற்றுக்கொண்டான். பாலன் எப்பொழுதோ அவ்விடத்தை விட்டு ஓடிவிட்டான்.

அவர்களுடைய கிராமவாசியாகிய வீரம்மாளும் கல்யாணத்திற்கு வந்திருந்தாள். பெண்வீட்டுக்காரர்களுக்கு அவள் நெருங்கிய உறவினள். ஆனால், வம்பளக்கும் சுபாவம் உள்ளவள். அவள் எப்படியோ பார்வதியம்மாள் முதலியோர் உட்கார்ந்த இடத்தைக் கண்டு பிடித்து, அங்கே வந்துவிட்டாள். அவளை உதறித் தள்ள இஷ்டமில்லாமல், மாதவன் முதலானோர் அவ்விடத்தை விட்டு நகர எழுந்தனர்.

"ஏன் கிளம்பிவிட்டீர்கள்? நான் வந்தேனென்றா?" என்றாள் வீரம்மாள்.

"நன்றாய் இருக்கிறது! நாளைக்கு ஊரைச் சுற்றிப் பார்க்க வேணுமின்னு குழந்தைகள் ஆசைப்படுகின்றன. மாதவனைச் சகாயம் செய்யும்படி கேட்டுக்கொண்டேன். அவ்வளவு தான். பேச வேறே என்ன இருக்கிறது?"

"பேசுவதற்கா இல்லை? வண்டி வண்டியாகப் பேசலாம். இந்தக் கல்யாணத்தைப் பார்த்ததும், மீனுவும் மாதவனும் நினைவுக்கு வந்தார்கள். எவ்வளவு பொருத்தமாக இருக்கும் தெரியுமா?"

"நான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை, பாட்டி" என்றான் மாதவன்.

"பிரம்மசாரியாய் இருக்கப் போகிருயா? உன்னைப்போலச் சொன்னவர்கள் எத்தனையோ பேர்! மீனுட்சிக்கு என்ன? தங்கப் பதுமை!"

"சரி, கொஞ்சம் பாட்டைக் கேட்கிறேன். இரவு சாப்பாட்டின்போது சந்திக்கிறேன். நான் வரேன், மீனு" என்று மாதவன் விடை பெற்றுக்கொள்ளும்பொழுது அவனுடைய பார்வையும் மீனுவின் பார்வையும் ஒன்ருேடொன்று ஐக்கியமாயின.

"ஜோடி நன்ருக அமைந்திருக்கிறது. ஆனுலும் உன் வீட்டுக்காரர் இப்படி இருக்கக் கூடாதம்மா. ஊரில் நடந்த விஷயங்களெல்லாம் உனக்குத் தெரியுமல்ல?" என்று வீரம்மாள் கேட்டாள்.

"எதைப்பற்றிப் பேசுகிறீர்கள்?"

"கண்ணுயிரம் பிள்ளை வீட்டுப் பயிரை மாட்டை விட்டு மேச்சது, உங்கள் பக்கத்து வீட்டு வைக்கப் போர் எரிஞ்சு போனது..."

பார்வதியம்மாளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "எனக்குத் தெரியாதே!" என்ருள்.

"அய்யோ! உனக்குத் தெரியும் என்றல்ல நினைத்தேன்? எனக்குச் சொல்லவும் முடியவில்லை; சொல்லாதிருக்கவும் முடியவில்லை!" என்று வீரம்மாள் ஒன்று விடாமல் கிராம நிகழ்ச்சிகளை யெல்லாம் ஒப்பித்தாள்.

## 9

அன்றிரவு, விருந்துச் சாப்பாடு முடிந்ததும், மாதவன் பார்வதியம்மாள் இருந்த இடத்துக்கு வந்தான்.

"வீரம்மாள் பாட்டி மற்ருெரு சொந்தக்காரர் வீட்டுக்குப் போய்விட்டாள். 'நாளைதான் வருவேன்' என்று அவள் சொன்னபொழுது, 'பிழைத்தோம்!' என்று நான் எண்ணிக் கொண்டேன். என்ன விஷயம் மாமி? ஒரு மாதிரி இருக்கிறீர்களே ? என்ன மீனு, நீ விளக்கெண்ணெய் குடித்தாயா!"

மீனுவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"நாளைக்கு எங்களுக்காக நீ வேலையைக் கெடுத்துக் கொள்ள வேண்டாம், அப்பா! நான் துணைக்கு வேறு யாரை யாவது அழைத்துக்கொண்டு போகிறேன். நாங்கள் பாவிகள். உங்கள் குடும்பத்தோடு கூடி வாழும் பாக்கியத்தைச் செய்ய வில்லை!" என்று பார்வதியம்மாள் கண்ணீர்விட ஆரம்பித்தாள்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே, மாமி? பெரிய பெரிய வார்த்தை போடுகிறீர்களே?" என்றான் மாதவன்.

"பெரிய வார்த்தை அல்ல,; சரியான வார்த்தைதான். உனக்கு எவ்வளவு துரோகம் செய்துவிட்டோம்! உனக்குத் தெரியாது. கட்டின புருஷன்மீது எப்படிக் குறை சொல் வேன்?"

"எனக்கு எல்லாம் தெரியும் மாமி. நீங்கள் மாமாவால் எங்கள் பயிர் அழிந்ததைப்பற்றித்தானே சொல்கிறீர்கள்?"

"அப்பா எழுதினரா?" என்று பார்வதியம்மாள் ஆத்திரத் தோடு கேட்டாள்.

"எங்கப்பா எழுதுவாரா? எங்களுடைய குடும்பத்துக்குக் குல தெய்வம்போல் இருக்கிறானே, பாளையம், அவன் யாரையோ பிடித்து, எல்லா விவரங்களையும் எழுதச் செய் தான்."

"எல்லாம் தெரிந்தா, எங்களோடு பேச வருகிறாய்?"

மாதவனுக்குச் சிரிப்பு வந்தது. "மாமா செய்யும் காரியங் களுக்கு நீங்களா பொறுப்பு?" என்றான்.

"அப்பா மாதவா, எங்களை மறந்துவிடு. மாமா பொல்லாத வர் என்று நான் சொல்ல மாட்டேன். அவருக்கு ஒருவிதப் பைத்தியம் பிடித்துவிட்டது. இனிமேல் நம் குடும்பங்கள் சேர முடியாது. மீனுவை அடியோடு மறந்துவிடு, ராஜா. அவளுக்கும் உனக்கும் ஒரு தீங்கும் வரக்கூடாது. இந்த வீரம்மாள் கிழவி, ஒன்றுக்கு இரண்டாகச் சொல்லி வைப் பாள். அப்புறம், அவர் படாதபாடு படுத்துவார். நான் ஒரு பாவி! பாவி வயிற்றில் பிறந்த குழந்தைக்கு மட்டும் நல்லது

எப்படி வரும்!" என்று தாரை தாரையாகக் கண்ணீர் சொரிந்தாள் பார்வதி. மீஞ்சிக்கும் அழுகை வந்துவிட்டது.

"மாமி, எங்கப்பாவே மாமாவை வழிக்குக் கொண்டு வந்துவிடுவார். நீங்களே பார்ப்பீர்கள். தினம் எங்கப்பாவுக்கும், எங்கம்மாவுக்கும் ஏதாவது வாக்குவாதம் நடக்கும். எங்கம்மா பாவம், படித்தவளா? அப்பொழுது அடிக்கடி அப்பா இதைத்தான் சொல்வார். 'அன்பு என்பது கடவுளின் ஒளி! அன்பால் உலகத்தையே வெல்லலாம்!' என்பார். வர வர எனக்கும் அதில் முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. கடைசியாகச் சொல்லுகிறேன்: மீனுவை மணந்துகொள்ளாவிட்டால் நான் பிரம்மசாரியாகவே இருந்துவிடுவேன்!"

"ஐயோ, அப்படிச் சொல்லாதே, அப்பா! நீ பெரிய டாக்டராகி, குழந்தை குட்டிகளுடன் சுகமாக வாழ வேண்டுமென்று எப்பொழுதும் கடவுளைப் பிரார்த்தனை செய்வேன். எங்கள் தலைவிதிபோல் எங்களுக்கு நடக்கும். மீனுவை மறந்துவிடு!"

"அது என்னால் முடியாத காரியம். மாமி, எனக்குப் பாசாங்கு செய்ய இஷ்டமில்லை. ஆனால் உங்களுக்கு மனம் நோகும்படி ஒரு நாளும் தவறுதலாக நடந்துகொள்ள மாட்டேன். நீங்கள் பேசுகிறீர்களே தவிர, கடவுளின்மீது நம்பிக்கை இல்லையா? அவர் எங்களைக் கைவிடமாட்டார் என்பது சத்தியம். மாமா என்ன தவறு செய்தாலும் நீங்கள் அதை எடுத்துக் காட்டாமல் இருப்பது மட்டும் நியாயமா? 'துரோகம், துரோகம்!' என்று சொல்கிறீர்களே; நீங்கள் இப்படி இருப்பது அவருக்குச் செய்யும் எவ்வளவு பெரிய துரோகம் தெரியுமா?"

பார்வதியம்மாளுக்குச் சுருக்கென்றது. "உன் அப்பா மாதிரியே பேசுகிறாயே?" என்றாள்.

"எங்கப்பாவுக்குச் சுகத்தைத் தேடும் வழி தெரியும். அம்மாவுக்கும் போதனை செய்துவிட்டார். அது போகட்டும். வீரம்மாள் கிழவி, மாமாவிடம் ஆயிரம் சொல்லட்டுமே? நீங்கள் எதற்காகப் பயப்பட வேண்டும்? நாம் என்ன குற்றத்தைச்

செய்துவிட்டோம்? தெரியாத இடத்தில் வந்தால், வழி காட்டக் கூடாதா? நீங்கள் கோபித்துக்கொள்ளாதீர்கள். பக்கத்து வீட்டு அருணசலம், போலீஸ் நடவடிக்கை எடுக்காமல் தடுப்பதற்கு மாத்திரம் எங்கப்பா வேண்டுமா? மாமாவைக் கெடுத்தது நீங்களே!"

"சொல்லு, சொல்லு!"

"நான் குற்றம் சாட்டவில்லை மாமி. ஆனால் ஒன்று மாத்திரம் நிச்சயமாகச் சொல்கிறேன். எனக்கும் மீனுவுக்கும் எப்பொழுதோ விவாகம் ஆகிவிட்டது."

"என்னது!" என்றாள் பார்வதியம்மாள், அலறிப் புடைத்துக்கொண்டு. மாதவன் சிரித்தான். "பயப்படாதீர்கள்! அகௌரவமாக நாங்கள் எப்பொழுதும் நடந்துகொள்ள மாட்டோம். அவள் உங்களுக்குத் தகுந்த மகள். நான் என் தகப்பனாரின் மகன். அதை மறந்துவிடாதீர்கள். ஆனால் நாங்கள் பிரதிக்ஞை செய்துகொண்டு விட்டோம். எங்களைப் பிரிக்கக் கடவுளாலும் முடியாது. அவர் போட்ட திட்டத்தை அவராலேயே மாற்ற முடியாது. ஆகையினாலே, நீங்கள் எல்லா விதங்களிலும் எங்களுக்குச் சகாயம் செய்துதான் ஆகவேண்டும். நாங்கள் உங்கள் குழந்தைகள்" என்று அவனும், அவனைக் கண்டு மீனாட்சியும் பார்வதியம்மாளுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்கள். பார்வதியம்மாளுக்கு மனப்பூரிப்போடு துக்கமும் தொண்டையை அடைத்துக்கொண்டு வந்தது.

"இந்தத் தரும சங்கடத்துக்கு நான் என்ன செய்வேன்!" என்று அவள் கைகளைப் பிசைந்தாள்.

"தைரியமாக மாமாவோடு வாதாடி, தங்களைக் கொலை செய்ய வேண்டாமென்று சண்டை போடுங்கள். ஆனால் எங்கள் காதலைக் குலைக்க அவரால் இந்த ஜன்மத்தில் முடியாது. மீனு என்னுடையவள்; நான் அவளுடையவன். என்ன மீனு?" என்று அன்போடு இரு கைகளாலும் அவளுடைய கன்னங்களைப் பிடித்து, முகத்தைச் சிறிது உயர்த்தி, "சொல்லேன்,

மீனு!'' என்று அவன் கெஞ்சியவாறு சொன்னான். விழிகளில் ஆனந்தம் பொங்கி வழிய, "ஆமாம், அத்தான்! நிஜந்தான், அம்மா!'' என்று, தன் தாயைப் பார்த்து மீனு சொன்னாள். பார்வதியம்மாள் திகைத்துப் போனாள்.

"சரி, நாளைக் காலையில் ஒரு மோட்டார் வண்டியை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு வந்துவிடுகிறேன்."

"வேண்டாம் அப்பா, குதிரை வண்டியே வைத்துக்கொள்ளலாம்.''

'எல்லாம் எனக்குத் தெரியும்.'' கைக் கடிகாரத்தைப் பார்த்து, "நேரமாகிவிட்டது. ஹாஸ்டல் கதவை மூடிவிடுவார்கள். வருகிறேன் மாமி, வருகிறேன் மீனு'' என்று அவன் விரைந்து சென்றுவிட்டான்.

அன்றிரவு, பார்வதியம்மாளுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. பெருமிதம் ஒரு பக்கம்; பயமும் கவலையும் மற்றொரு பக்கம். மாதவன் முன்னேற்றம் அடைவான் என்பதில் சந்தேகம் என்ன இருக்கிறது! பகையாலும் வெறுப்பாலும் கண்மூடித் தனமாகத் தன் கணவன் நடந்துகொண்டால், அதற்காகத் தன் அருமைக் குழந்தை மீனுவின் சுகத்தையா பலி கொடுப்பது! அவர் போன வழியெல்லாம் விடக்கூடாதென்ற ஒருவிதத் தைரியம் வந்தது. தன் அபிப்பிராயத்துக்கும் மதிப்புக் கொடுக்கும்படி அவரைக் கட்டாயப்படுத்த வேண்டும் என்று அவள் தீர்மானித்துக்கொண்டாள். பிறகு தன்னை அறியாமலே கண் அயர்ந்துவிட்டாள்.

மறுநாள் சரியாக ஒன்பது மணிக்கு, மாதவன், வாடகை மோட்டார் வண்டியில் ஆஜர் ஆனான்; பிறகு, பார்க்கத் தகுதியான பல இடங்களைக் காண்பித்தான். சிற்றுண்டி வேளைக்கு, நகரில் பெயர் பெற்ற ஓர் ஓட்டலுக்கு அவர்களை அழைத்துச் சென்று, அவர்கள் என்றும் கண்டிராத பலகாரங்களை வழங்கச் செய்தான்.

"சரிதான்! இதுமாதிரி செய்தால், பாலு இந்த ஊரை விட்டு வரவே மாட்டான்!'' என்றாள் பார்வதியம்மாள்.

"இங்கேயே படிக்கட்டுமே மாமி; என்ன பாலு!"

"ஓ! எனக்கு இந்த ஊர் ரொம்பப் பிடித்திருக்கென்று அம்மாவண்டை அப்பவே சொல்லிவிட்டேன், அத்தான்!"

"மாதம் என்ன செலவாகும்?"

"என்ன ஒரு ஐம்பது ரூபாய் ஆகும்! அவ்வளவுதான்."

"அவ்வளவுதானு! ஐம்பது ரூபாய் என்ருல் உனக்கு அவ்வளவு அலட்சியமாக இருக்கிறது. உங்கள் மாமா ஐந்து ரூபாய் கூடக் கொடுக்க மாட்டாரே! அது போகட்டும். எனக்கு நினைத்துக்கொண்டால் அசந்து போகிறது, இந்த வருஷம் நெல்லே கிடைக்காதே. உன் செலவுக்கு, அப்பா என்ன செய்வாரோ, பாவம்!"

"என் செலவைப்பற்றி அப்பாவுக்குக் கவலை இல்லை. அந்தப் பொறுப்பு என் மாமாவைச் சேர்ந்தது. அவருக்குக் குழந்தை குட்டிகள் கிடையாது, தெரியுமல்லவா?"

"ஊம்!"

"அந்த ஏற்பாட்டை அம்மா செய்துவிட்டாள். அதுவும் தவிர, எங்கம்மாவுக்குச் சீதனமாகக் கொடுத்த நிலத்தை அவர் தானே ஆண்டுகொண்டு வருகிருர்? செலவுக்கு எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. நான் எவ்வளவு கேட்டாலும் கொடுப்பார். என்மீது அவருக்கு ரொம்பப் பிரியம், மாமி. ஆனுல் நான் வீண் செலவு செய்யமாட்டேன். அது அவருக்கும் தெரியும்."

"போகட்டும் அப்பா, இருக்கிறதை வைத்துக்கொண்டு, ஊரில் அப்பாவும் அம்மாவும் காலத்தைத் தள்ளிவிடுவார்கள்."

"பாலையம் அவர்களைக் கவனித்துக்கொள்வான், மாமி. அவனைவிடப் பெரிய மனிதன் நம்ம ஊரில் யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. பணத்தால் மட்டும் பெருந்தன்மை வந்துவிடுமா? அவன் மகன் ஆண்டியை எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளச் சொன்னேன். என்ன செய்கிருனே?"

"ராத்திரியிலே ரத்தினம் வாத்தியாரண்டை படிக்கிருன் அத்தான்" என்ருன் பாலு.

"ஆண்டியை அடுத்த மாதம் இங்கே வரச் சொல்லியிருக்கிறேன்."

"எதற்கு?"

"சும்மாதான், மாமி! ஊரைப் பார்த்துவிட்டுப் போகட்டுமே? வேலன் சாவடியிலேயே கிடந்தால் என்னதான் தெரியும்? அவனுக்கும் நாலும் தெரியவேண்டாமா? பாளையத்தின் பெயரை அவன் கெடுக்க மாட்டான். அவனுக்கு ஒரு பத்து ஏக்ரா நிலம் எழுதிக் கொடுக்கணுமின்னு இருக்குது."

பார்வதியம்மாள் சிரித்தாள். "நீ சம்பாதிக்கத் தொடங்கின பிறகு பார்த்துக்கொள்ளலாம். இப்பொழுது ஒன்றும் வேண்டாம். இனிமேல் எதையும் கொண்டுவரச் சொல்லாதே. உடம்புக்கு ஆகாது."

பிறகு, காபியைப் பருகிவிட்டு, கடைசியாகப் பார்க்க வேண்டியிருந்த மிருகக் காட்சிச் சாலைக்கும் சென்றுவிட்டு, அவர்கள் தம் இருப்பிடத்துக்குத் திரும்பினர்.

"நீங்கள் நாளைச் சாயங்காலம் புறப்படுவதற்கு முன் என்னால் வர முடியாது. ஆகையினால் இப்பொழுதே விடை பெற்றுக்கொள்கிறேன். அம்மாவிடம் நான் சௌக்கியமாக இருப்பதாகச் சொல்லுங்கள். என்ன மீனு, போய் வரட்டுமா?"

"நீங்கள் எப்பொழுது ஊருக்கு வருவீர்கள், அத்தான்?"

"இரண்டு மாதமாவது ஆகும். ஆண்டியைக் கேட்டால் என் சங்கதியெல்லாம் சொல்வான்...பாலு, போய் வருகிறேன்" என்று பாலனை அன்புடன் தட்டிக் கொடுத்துவிட்டு, மாதவன் தன் ஹாஸ்டலுக்குத் திரும்பினான்.

பார்வதியம்மாள் வேலன்சாவடிக்கு வந்ததும் அக்கம் பக்கத்தாரெல்லாம், அவள் இல்லாத சமயத்தில் நடந்த விருத்தாந்தங்களைக் கதையாகச் சொல்லத் தொடங்கினர். பார்வதியம்மாள் வேண்டாமென்று முறையிட்டுக்கொண்டாலும் அவர்கள் கேட்கவில்லை. அவளுக்கு லோகநாயகியம்மாளின் காலில் விழுந்து, மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும்போல் இருந்தது. ஆகவே, வீராசாமி பிள்ளை வெளியே போனதும்

பார்வதியம்மாள் மீனுட்சியுடன் கண்ணுயிரம் பிள்ளையின் வீட்டுக்குச் சென்ருள். மாதவனைச் சந்தித்த விவரங்களைச் சொல்லிய பிறகு, "அவர் உங்களுக்குச் செய்த அநியாயத்துக்கு எனக்குப் பரிகாரம் தெரியவில்லையே! கல்யாணத்தில், வீரம்மாள், முதல் முதலாக இந்த விஷயத்தைச் சொன்னபொழுது, என் மனம் எப்படித் துடித்ததோ, கடவுளுக்குத் தெரியும்!" என்ருள்.

"நீங்கள் என்ன செய்வீர்கள்? உங்கள் மனம் எனக்குத் தெரியாதா? இன்றைக்குத்தானு பழகுகிறேன்!" என்ருள் லோகநாயகியம்மாள் வெகு பொறுமையுடன்.

"லோகம்மா, எனக்கு என்ன செய்வதென்று தெரியவில்லையே? குழந்தைகளின் மனத்தை மாற்ற முடியாது போல் இருக்கிறதே!"

"ஏன் மாற்றவேண்டும்? மீனு, எங்கள் வீட்டுப் பெண் என்று நான் ஆதிமுதலிலிருந்து சொல்லிக்கொண் டிருக்கிறேனே!"

"அவருக்கு எதுதான் தெரிகிறது, லோகம்மா? இல்லாவிட்டால், மாதவனைப்போல் மருமகப்பிள்ளை கிடைக்க வேண்டுமே என்று ஏங்க மாட்டாரா?"

"அதுவும் உண்மைதான். கள்ள மார்க்கெட்டில் ஒன்றுக்கு இரண்டாக விற்றுப் பணம் முடியத் தெரியும். வட்டிக்கு வட்டி வாங்கத் தெரியும். ஆனால், அவர் வருஷக் கணக்கில் சம்பாதித்ததையெல்லாம், எங்கள் மாதவன் ஒரு மாதத்தில் சம்பாதித்துவிடுவான்!" என்று லோகநாயகியம்மாள் பெருமையாகச் சொல்லிக்கொண்டாள்.

"எனக்குத் தெரியாதா, அம்மா? இதைப் பாருங்களேன். அந்த வம்புக்காரி, வீரம்மாள் கிழவி அங்கே வரவேண்டுமா! இங்கே வந்த பிறகு மாதவன் எங்களோடு அலைந்ததையெல்லாம் அவரிடம் சொன்னுலும் சொல்வாள்!"

"சொல்லட்டுமே. என்ன பயம்!"

"அதுதான் நானும் சொல்கிறேன், அத்தை" என்றாள் மீனாட்சி.

"ஊஹூம், நீ எங்கள் வீட்டுப் பெண் அல்லவா?" என்று லோகநாயகியம்மாள் அன்புடன் மீனுவின் தலையை வருடினாள்.

பிறகு, அதிகம் தாமதிக்க இஷ்டமில்லாமல், தாயும் மகளும் வீட்டுக்குத் திரும்பினர்.

விளையாட்டுப்போல், இரண்டு மாதங்கள் கழிந்தன. வேலன்சாவடிக் கெல்லாம் அதிக நெல்லு அறுத்தவர் வீராசாமி பிள்ளையே. 'மூன்னூறு மூட்டைகளை எவ்வளவு திருட்டுத்தனமாகக் கள்ள மார்க்கெட்டில் விற்பனை செய்தபோதிலும், ஜனங்களுக்குத் தெரியாமல் போகவில்லை. இதில் பாதியாவது நியாயமாகக் கண்ணாயிரம் பிள்ளையைச் சேர வேண்டியதென்று எல்லோரும் பேசிக்கொண்டனர். அவருடைய பயிரை அழித்து, அவருக்குப் பாயவேண்டிய நீரால் விளைந்ததல்லவா அவ்வளவும்? ஆனால் இதைப்பற்றி வீராசாமி பிள்ளை நினைக்கவே இல்லை. அவருடைய பிரதாபத்தைக் கேட்க, மதுரையோடு, தக்காருக்குத் தக்கபடி பேசும் இரண்டொரு கிராமவாசிகளும் இருந்தனர். தட்டி முட்டிப் போனபொழுது ஏதாவது சிறிது தானியம் கொடுக்கமாட்டாரா என்பது அவர்களுடைய நோக்கம். ஒரு நாள் இப்படிப்பட்டவர் ஒருவரோடு வீராசாமி பிள்ளை, தம் புகழைப் பிரமாதமாக அளந்துகொண் டிருந்தார். 'கண்ணாயிரம், மரியாதையாக என்னோடு ஒத்துழைத்திருந்தால் எவ்வளவோ உதவி செய்திருப்பேன். என்னவோ, அரிச்சந்திரனே இவன் வீட்டில் தங்கியிருந்ததுபோல நடந்துகொண்டால், திண்டாட வேண்டியதுதான். இது கலிகாலம். ஆள் ஆளைத் தின்னும் நாள். அதுக்குத் தகுந்தபடியல்ல நாம் நடந்துகொள்ள வேண்டும்? கூலிக்காரர்களுக்கு நீ கணக்கு வழக்கில்லாமல் அளந்துவிட்டால், அவன் எல்லாரையும், 'அதே மாதிரி! போடு'ன்னுதான் சொல்வான்; நான் சொல்றது எப்படியிங்க?"

"சரியான பேச்சு!" என்று வந்தவர் சொன்னார்.

"மதுரையைக் கேளுங்கள். எப்படிப் போனாலும் இந்த மனிதனாலே விவசாயத்துக்கு முட்டுக்கட்டைதான். இவன் ஊரை விட்டு ஒழிந்துவிட்டால்தான் விவசாயம் தலை எடுக்கும். ஏன், நான் அறுத்த நெல்லை இவனும் அறுக்கக் கூடாதா?"

தாளம் போடும் ஆசாமியும் பொறுக்க முடியாமல், "இரக்க முள்ள மனது" என்று சொல்லி வைத்தார்.

"நீங்கள் என்னுங்க? தனக்கு மிஞ்சியல்ல தான தருமம்! நல்லது செஞ்சவங்களைக் கடவுள் கைவிட மாட்டாராம்! அது அந்தக் காலத்துலே இருக்கலாம். இப்போ பலிக்காது. இந்த வருஷம் சாப்பாட்டுக்கே திண்டாட்டந்தான்."

"ஏன், பாளையம் பதினைஞ்சு மூட்டை நெல் கொண்டு வந்து அடுக்கிட்டானுங்க!" என்றான் மதுரை.

"எங்கிருந்தடா வந்தது!"

"கேவிரு கடன் வாங்கிக்கிட்டுப் போனவங்க சில பேரு நெல்லாய்த் திருப்பிக் கொடுத்திட்டாங்க."

"அது எத்தனை நாளைக்குத் தள்ளும்? நாளைக்குப் புலியம் பாளையத்தான் நிலத்தையே கட்டிக்கப் போறானே, அப்போ என்ன செய்வார்?" என்று அவர் சொல்லிக்கொண்டிருக்கும் போது, மாரியம்மன் கோவிலில் பூஜை செய்யும் பண்டாரம் வந்தார்.

"வாங்க பண்டாரம். எப்போ திருநாளுக்குக் காப்புக் கட்டு?"

"அடுத்த புதன்கிழமை. இந்த வருஷம் திருவிழா உங்களாலேதான் நடக்கணும்."

"பெரிய போடு போட்டீங்களே!"

"ஆமாங்க; எல்லோருடைய கையும் நொடிச்சுப் போச்சு. பெரிய பண்ணைக் காரரண்டை போகிறதுகூட எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. வருஷா வருஷம் பொறுப்பையெல்லாம் அவரே எடுத்துப்பார். அப்படி இருந்தும் இரண்டு மூட்டை நெல் கொடுத்தார். பிரகலாத நாடகத்துக்குப் பந்தலையும் போட்டுக் கொடுத்து விடுவதாகச் சொல்லிவிட்டார்."

"பின்னே என்ன அய்யா? அவர் தருமராஜா வாச்சுதே! சரி, என்னிடத்துலே எதிர்பார்க்கிறதுக்கு ஒரு லிஸ்டு போட்டுக் கொடுங்க. நான் யோசித்துச் சொல்கிறேன். விவரம் தெரியாமல் நான் என்ன செய்வது?"

அதன்மேல் மாலையில் ஜாபிதாவுடன் வருவதாகப் பண்டாரம் போய்விட்டார்.

இப்பொழுது பாலனுடைய தோழன் ஒருவன் ஓடி வந்து, "மாமா! மாமா! ஆண்டி இல்லே, ஆண்டி? பெரிய பண்ணை வீட்டுக்காரர் மாட்டுக்காரன்? அவன், மாட்டைக் கல்லாலே அடிச்சான்; அப்போ பாலு குறுக்கே ஓடிவந்தான். அவன் வயித்திலே பட்டு அப்படியே கீழே விழுந்துவிட்டான். பெரிய பண்ணைக்காரர் மருந்து போட்டுக்கொண்டிருக்கார். வாங்க, வாங்க!" என்று கூவினான்.

"அடப் பாவிகளா!" என்று கூவிக்கொண்டு, வீராசாமி பிள்ளை ஓட்டம் பிடித்தார்.

பாலனைப் படுக்கவைத்து, அவன் அடிவயிற்றில் ஒரு தைலத்தைத் தடவி நீவிக்கொண்டிருந்த கண்ணாயிரம்பிள்ளை, "ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை. சரியாய்ப் போய்விட்டது" என்று வீராசாமி பிள்ளைக்கு உறுதிமொழி சொன்னார்.

"பாலு, என்ன செய்கிறது, அப்பா? எழுந்திருக்க முடியவில்லையா?"

"ஊம்! அவனைத் தூக்காதே! சிறிது நேரம் படுத்திருக்கட்டும். இப்பொழுது அவனைத் தொடக்கூடாது. வலி போயிட்டுது அல்ல, பாலு?" என்று கண்ணாயிரம் உருக்கத்தோடு கேட்டார்.

"போயிட்டுது" என்று பாலன் தலையை அசைத்தான்.

"வீராசாமி, உனக்குக் கடவுள் கிருபை இருக்கிறது. அந்த அடி மாத்திரம் இரண்டு அங்குலம் கீழே விழுந்திருந்தால் குழந்தையைக் காண்போமா!"

"இந்த ராஸ்கல் வேண்டுமென்று செய்த வேலை இது!" என்று வீராசாமி பிள்ளைப் பல்லைக் கடித்துக்கொண்டு அருகி

விருந்த ஆண்டியை அடிக்கப்போனார். கண்ணுயிரம் பிள்ளை வீராசாமியைப் பிடித்துக்கொண்டார். "என்னை நம்பு, வீரா சாமி! வேண்டுமென்று ஆண்டி கல் எறியவில்லை. இங்கிருப்பவர் கள் எல்லோரையும் கேட்டுப் பார். அவகேடாய் அவன் மாட் டின்மீது எறிவதற்கும் குழந்தை ஓடி வருவதற்கும் ஒத்துக் கொண்டது!" என்றார்.

"உங்களுக்கு உங்கள் பண்ணைக்காரன் உயர்த்தியாய் இருக்கலாம். அதற்காக அவன் எது செய்தாலும் பரிந்து கொண்டு வருகிறதா! அவன் என்மேல் காரம் வைத்துக் கொண்டிருப்பது எனக்குத் தெரியும். உன்னை என்ன செய் கிறேன், பார்!" என்று அவர் ஆண்டியைப் பார்த்து விரலைப் பல மாக ஆட்டினார்.

## 10

இதற்குள் பார்வதி அம்மாளும் மீனுட்சியுங்கூட அங்கே வந்துவிட்டனர். பையனை இரண்டு, மூன்று தினங்களுக்குப் படுக்கையை விட்டு நகராமல் பார்த்துக்கொள்ளும்படி கண் ணுயிரம் பிள்ளை சொன்னார்.

"நான் தினம் வந்து மருந்து போடுகிறேன்."

"போகட்டும், இதாவது செய்கிறீர்களே!" என்று வீராசாமி பிள்ளை, தம் மகனை வீட்டுக்கு மெல்லச் சுமந்து சென்றார்.

நாலைந்து தினங்களுக்கெல்லாம் பாலன் வழக்கம்போல் நடமாடித் திரிந்தான். மாரியம்மன் திருவிழா ஆரம்பமானது, அவனுக்குத் தன் தந்தையிடமிருந்து பணம் பறிக்கச் சாதகமாக இருந்தது. அவனுக்குப் படிப்பில் அக்கறை இல்லை என்ற குறை, வீராசாமி பிள்ளைக்கு இருந்தபோதிலும், அவருக்கு அவன் செல்லப் பிள்ளைதான்.

அவ்வருஷத்தின் விழா, தன் நன் கொடையாலும் முயற்சி யாலும் வெகு சிறப்பாக நடந்துகொண் டிருந்தது என்பது வீராசாமி பிள்ளையின் எண்ணம். ஆனால், உண்மையில் அதை

மிகமிகச் சாதாரண முறையில்தான் நடத்த முடிந்தது. எனினும், ஒரு பகுதியையும் விட்டுவிட இஷ்டமில்லாமல், முதலில் போட்டுக்கொண்ட ஏற்பாட்டின்படி, விழா முடிவில் பிரகலாத நாடகத்தையும் நடத்திவிடுவதாகக் கிராம வாசிகள் தீர்மானித்துக்கொண்டனர்.

நாடகத்தைப் பார்க்கச் சுற்றுப் பக்கத்திலுள்ள பல கிராம வாசிகளும் வருவார்க ளாகையால், நாடக மேடைக்கு முன், விஸ்தாரமான இடம், புல் செதுக்கப்பட்டுத் தண்ணீர் தெளிக் கப்பட்டு, வெகு சுத்தமாக வைக்கப்பட்டது. நாடகத்தன்று நல்ல நிலவாக இருந்தபோதிலும், பல பெட்ரோமாக்ஸ் விளக்கு கள் சேகரிக்கப்பட்டிருந்தன. பத்து மணிக்கு நாடகம் ஆரம்ப மாகி, விடியும் வரையில் நடக்கும் என்று தெரிந்தும், ஜனங்கள் இருட்டுவதற்கு முந்தியே திரள் திரளாக வரத் தொடங்கினர்.

ஆண்கள் ஒரு புறமும் பெண்கள் ஒருபுறமும் சௌகரிய மாக உட்கார வசதி செய்யப்பட்டிருந்தது. கிராமத்திலுள்ள பிரமுகர்கள் உட்கார, முதல் வரிசைகளில் சிறிது இடம் காலி யாக விடப்பட்டது. நாடகத்தாரைச் சிறிது அறிந்தவர்கள் மேடையில் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தார்கள். நேரம் ஆக, ஆக, ஓர் ஆயிரத்துக்குக் குறைவில்லாமல் ஜனங்கள் கூடி விட்டனர்.

கண்ணுயிரம் பிள்ளை, பயபக்தியுடன் முன்னணியில் அமர்ந்து கொண்டார். அவருடைய பண்ணையாள் பாளையமும் அவன் மகன் ஆண்டியும் தன் சுற்றத்தார்களோடு இட்ட வேலையைச் செய்துகொண் டிருந்தார்கள். வீராசாமி பிள்ளை, வால்போல் மதுரை பின்தொடர, அதிகாரம் செய்துகொண் டிருந்தார். அவர் தோற்றத்தில் கர்வமும் ஆடம்பரமும் போட்டி போட்டுக் கொண்டிருந்தன. வைக்கோல் போரைக் கொளுத்திய ரௌடிகளும் ஒரு பக்கத்தில் இருந்தனர்.

நாடகம் ஆரம்பமாகும் சமயம் நெருங்கிவிட்டது. மத்தளக் காரன், மத்தளத்தைக் கட்டை வைத்து அடித்து, ஒலியைச் சரிப்படுத்தத் தொடங்கினுன். அப்பொழுது பார்வதி அம்மா

ளும் மீனாட்சியும் பெண்கள் இருக்கும் பக்கம் நோக்கி வந்து கொண்டிருந்தனர். மீனாட்சியைக் கண்டதும், ஆண்டி விரைந்து சென்று, எதையோ மெதுவாகச் சொன்னான். அதை அங்கீகரித்ததுபோல மீனாட்சியும் தலையை அசைத்தாள். இதைக் கவனித்த வீராசாமி பிள்ளைக்குக் கோபாவேசம் வந்து விட்டது. ஆண்டியின்மீது அவருக்குக் குமுறிக்கொண் டிருந்த ஆத்திரம் கரை புரண்டு ஓடியது. விரைந்து அவனிடம் சென்று, பளீர் என்று கன்னத்தில் அறைந்தார்!

ஆண்டி பிரமித்துப் போய்விட்டான். "என் பெண்ணோடு உனக்கு என்ன பேச்சு!" என்று மறுபடியும் அடிக்கக் கையை ஓங்கினார். அப்பொழுது ஆண்டி, அவர் கையைப் பிடித்துக்கொண்டான். உடனே, வஞ்சம் தீர்த்துக்கொள்வது போல், மதுரை ஆண்டியை அடித்தான். அவ்வளவுதான்! பாளையம் மகனின் உதவிக்கு ஓடினான். அதற்குள் ரௌடிகள் இருவரும் ஓடி வந்து, ஆண்டியை நையப் புடைத்துவிட்டனர். கண்ணாயிரம் பிள்ளையும் அங்கே பதறிக்கொண்டு போய்த் தடுத்தார். ரௌடிகள் அவர்மீதும் கையை வைத்தனர்.

மறு நொடியில், அநேகர் ரௌடிகளைக் கண் மூக்குத் தெரியாமல் அடித்துக் கீழே தள்ளி, செத்த நாய்களைப்போல் அவர்களின் உடல் பூமியில் தேய, கூட்டத்துக்கு வெளியே இழுத்துச் சென்றனர். உட்கார்ந்திருந்த ஜனங்கள் எழுந்திருக்கவே, கலவரம் மற்றும் அதிகரித்துவிட்டது. மதுரையைச் சிலர் எங்கோ சுமந்துகொண்டே போய்விட்டார்கள். எவனோ ஒருவன் மண்ணைக் கவ்வும்படி வீராசாமி பிள்ளையை பின்புறத்திலிருந்து உதைத்துத் தள்ளினான். அவர் தள்ளாடிக் கொண்டு எழுந்தார்.

"அடே, என்மீது உங்களுக்குக் கௌரவம் இருந்தால், கலகமா செய்வது?" என்று உரக்கக் கத்தினார் கண்ணாயிரம் பிள்ளை. "என்னிடத்தில் உங்களுக்கு எள்ளளவாவது விசுவாசம் இருந்தால் அமைதியாக உட்காருங்கள். இல்லாவிட்டால் என்னைக் கொன்று தின்றவர்கள் ஆவீர்கள்!"

"அய்யோ! யசமான்! அப்படிச் சொல்லாதீங்க! வாரும், யசமான்! உக்காருங்க, உக்காருங்க" என்ற கூக்குரல்களுடன், அனைவரும் உட்கார்ந்தனர். அமைதியும் நிலவியது.

"வீராசாமி, ஆண்டியைத் துன்மார்க்கன் என்று நினைத்தாயா? ஒரு துன்மார்க்கன்கூட இப்பெரும் சபையில், இவ்வளவு ஜனங்களுக்கு முன் ஒரு பெண்ணை அவமதிக்கத் துணிவானா? அந்தக் குழந்தை யார்? ஆண்டி யார்? ஏதாகிலும் சற்று யோசித்தாயா?"

"உம்முடைய நியாயம் யாருக்கு வேண்டுமையா? மாடு மேய்க்கும் கழுதை, எவ்வளவு துணிச்சலோடு என் மகளைக் கூப்பிட்டுப் பேசுகிறான்!"

"ஆண்டி, எதற்காக மீனாவிடம் பேசப் போனாய்?" என்று கண்ணாயிரம் பிள்ளை வீராசாமி பிள்ளையின் பேச்சைத் தடுத்து, ஆண்டியை விசாரித்தார். ஆண்டி சிறிது தயங்கினான்.

"சொல்லேண்டா! உன்னாலே எவ்வளவு வம்பு வந்துவிட்டது?"

ஆண்டி தேம்பியவாறு, "இல்லேங்க யசமான். காலையிலே, மீனாட்சியம்மா நம்ப சின்ன ஐயா எப்போ வருவாரின்னு கேட்டுது. இன்னிச் சாயங்காலம் கடுதாசி வந்திச்சே, அதைச் சொன்னேனுங்க" என்றான் வெகு கஷ்டத்தோடு.

"இவ்வளவுதானா?"

"என்ன, இவ்வளவுதானா? நான்தான் தருமராஜா என்று சொல்லிக்கொள்கிறீரே; உங்கள் பிள்ளையை ஏன் அடக்கக் கூடாது?" என்று வீராசாமி பிள்ளை குதித்தார்.

"தன் மகளை அடக்கமாட்டாமல்..." என்று எவனோ சொல்லவே, வீராசாமி பிள்ளைக்குக் கோபம் பொங்கிப் போக, நாவில் பேச்சு வராமல் தத்தளித்து, தன் மனைவியையும் மகளையும் எழுந்து வரும்படி, பாதி சொற்களாலும் பாதி சமிக்ஞைகளாலும் கட்டளையிட்டார். அவர், வீட்டுக்குப் போவதை உணர்ந்த கண்ணாயிரம் பிள்ளை, பாளையத்தையும் மற்றொருவனையும் அவருக்குத் துணைபோகச் சொன்னார். அதன்மேல், கண்

ஞயிரம் பிள்ளை, அமைதியுடன் நாடகத்தைப் பார்த்துவிட்டுப் போகும்படி ஜனங்களை வேண்டிக்கொண்டார். அவரும் நாடகம் முடியும் வரையில் உட்கார்ந்த இடத்தைவிட்டு நகரவில்லை.

மறுநாள் வீராசாமி பிள்ளைக்கு வெளியில் தலையைக் காட்ட வெட்கமாயிருந்ததால், வீட்டோடு வீடாய் அடைந்து கிடந்தார். பார்வதி அம்மாளும் மீனாட்சியும் கண்ணும் கண்ணீருமாகவே இருந்தனர்.

சுமார் ஒன்பது மணிக்கு, மதுரையின் மனைவி கதறிக் கொண்டு வந்தாள்.

"யசமான், அவரைக் குத்துயிராய் அடிச்சு விட்டு, வாசலுலே போட்டிட்டுப் போயிட்டாங்களே! ஒரு கால் ஒடிஞ்சே போச்சே!" என்று குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

"என்னது! காலை ஒடித்துவிட்டார்களா?"

"ஆமாங்க, யசமான். நீங்க வந்து பாருங்களேன்! உடம்பெல்லாம் வீங்கிக் கிடக்குதே? நான் என்ன செய்வேன்? பண்ணைக்காரருக்கும் பண்ணைக்காரருக்கும் பகையின்னல், நாங்களெல்லாம் நடுவிலே சாகிறதா! செத்துட்டால் நான் என்ன செய்வேன்!" என்று அவள் விம்ம ஆரம்பித்துவிட்டாள்.

"நீ என்ன பிள்ளை, அடிபட்டு ஒருவன் சாவானு? அந்தப் பயம் வேண்டாம். கால்கூட, ஏதாவது நரம்பு பிசகிப்போயிருக்கும். அவ்வளவுதான்!"

"நீங்க என்னுங்க? முழங்கால் முட்டி பேந்து போயிட்டுது!" என்ருன் தெருவழியாகப் போய்க்கொண் டிருந்த ஒரு ஹறிஜன்.

"கால் போயிட்டால் அது எப்படி வேலை செய்யும்? நாங்க எப்படிப் பிழைக்கிறது! நீங்கள் படியளக்கப் போறீங்களா!" என்ருள் மதுரையின் மனைவி.

"யாரைக் கேட்டுங்கறேன்? ஐந்நூறு, ஆயிரம் கொடுக்காட்டி, பிரியாது செய்யணுமின்னு பஞ்சாயித்துலே பேசி ஆயிட்டுது. இந்தப் பெண்பிள்ளைக்கு என்ன தெரியும்!" என்ருன் அந்த ஹறிஜன்.

"அடே, நியாயம் தீர்க்க உன்னை அழைக்க வில்லை. உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ!" என்றார் வீராசாமி பிள்ளை கோபத்தோடு.

"என் வேலையைத்தான் சாமி, பார்க்கிறேன். என் உறை முறையானை உன்னைப்போலப் புண்ணியவான் இந்தக் கதிக்குக் கொண்ணுந்துட்டால் ....."

"அவன் திமிரைப் பார் அருணசலம்!" என்று இப்பொழுது பக்கத்து வீட்டிலிருந்து, வாசலுக்கு வந்த அருணசலத்தைப் பார்த்து, வீராசாமி பிள்ளை சொன்னார்.

"எனக்கா திமிரு? அந்தக் கூறுகெட்ட பயல் மதுரைக்கு, குரங்குக்குச் சாராயம் ஊத்தினதுபோல, இதையும் அதையும் கொடுத்து மயக்கி, நீ சொன்னபடி ஆடும்படி வச்சிட்டே. அந்த மடையன், ஊருலே முக்காலே மூணு வீசம் பேரை விரோதம் ஆக்கிக்கிட்டான். இப்போ திண்டாடுறன். உனக்கு என்ன, கால் மேலே கால்போட்டுக்கிட்டு உக்காந்திருக்கே!"

"பார், பார்!" என்றார் வீராசாமி பிள்ளை அருணசலத்தைப் பார்த்து.

"அடேய், மரியாதையாய்ப் பேசடா! நடந்தது நடந்து போய்விட்டது. இனிமேல் செய்ய வேண்டியதை அல்லவா யோசிக்க வேணும்?" என்றார் அருணசலம், வீராசாமி பிள்ளைக்குப் பரிந்து பேசுவதுபோல்.

"அதைத்தான் யசமான், நானும் சொல்றேன், இந்தப் பொம்பளை இவருகிட்டே வந்து கெஞ்சுவானேன்? புண்ணியவான், பெரிய பண்ணைக்காரரைக் கேட்டு, ஏதாவது மருந்து அல்ல, வாங்கிக் கொடுக்கவேணும். இந்த மகாராசன் ஊரை ரெண்டாக்கிட்டாலும், நல்லது பொல்லாது வந்தால் நாங்க விட்டுக் கொடுக்க மாட்டோம். கோபத்துலே எக்கச்சக்கமா அடி பட்டிட்டுது."

"படுமடா, படும்! நாளைக்குப் போலீஸ் விசாரணை வருகிற போதல்லவா தெரியப்போகிறது. காலை ஒடிக்க உங்களுக்கு எவ்வளவு துணிச்சல்?" என்றார் வீராசாமி பிள்ளை.

“விளைஞ்ச பயிருலே மாட்டை விட்டு மேய்க்க, உனக்கு எவ்வளவு துணிச்சல்! வைக்கப்போரை ஆளைவிட்டுக் கொளுத்த உனக்கு எவ்வளவு துணிச்சல்? இதோ பாரு, சின்னப் பண்ணைக் காரரே! அந்தப் போலீஸ் எங்களுக்கும் இருக்குது. கலகம் யார் மூலமா வந்திச்சு? ஆண்டியை முதல்லே யார் அடிச்சது? அப்புறம் எத்தனை பேரு அடிச்சாங்க? எங்களுக்கும் சட்டம் தெரியும்! வேலையைப் பாரையா! வா அம்மே, அந்தத் தரும ராஜன் காலுலே விழலாம். அவர் மருந்து கொடுத்துக் காப்பாத்தினால் தான் உண்டு'' என்று அவன், அவளைக் கண்ணுயிரம் பிள்ளை வீட்டுக்கு அழைத்துச் சென்றான்.

அவர்கள் நான்கு வீடுகள்கூடத் தாண்டியிருக்க மாட்டார்கள். அப்பொழுது, தெரு முனையில் ஆலமரத்தண்டை விளையாடிக்கொண்டிருந்த பாலன் ஓட்ட ஓட்டமாய் ஓடி வந்து, “அப்பா, மதுரையை ஒரு கட்டிலுலே படுக்க வைத்து, நாலு பேர் தூக்கிக்கொண்டு வருகிறார்கள்! அதுலே பாளையம் ஒருத்தன்'' என்று தெரிவித்தான்.

வீராசாமி பிள்ளை, கைகளைப் பிசைந்துகொண்டு நின்றார்.

## 11

மதுரையைச் சுமந்து வந்தவர்கள், நேராகக் கண்ணுயிரம் பிள்ளையின் வீட்டுக்குச் சென்றனர். “நில்லுங்கள், நில்லுங்கள்!'' என்று வீராசாமி பிள்ளை எவ்வளவு கத்தியும் அவர்கள் சட்டை செய்யவில்லை.

மதுரையின் நிலைமையை நன்கு அறிந்துகொண்ட கண்ணுயிரம் பிள்ளை, “அவனை ஏனடா இமிசை செய்து, கொண்டு வந்தீர்கள்? நானே வந்திருப்பேனே!'' என்றார்.

“நினைச்சப்போ, நீங்க வர முடியுமா? தண்ணீர்ப்பந்தல் சும்மாத்தானே இருக்குது? அதுலே நாலைஞ்சு நாள் வச்சு, நீங்க மருந்து கொடுத்தால் பிழைப்பான்னு, கொண்டாந்தேன் யசமான்'' என்றான் பாளையம்.

"கடவுள் இருக்கிறர். அவர் ஆணைப்படி எல்லாம் நடக்கும்!" என்றபடி கண்ணுயிரம் பிள்ளை உள்ளே சென்று, மருந்துப் பெட்டியையும் பச்சிலை சிறிதும் கொண்டு வந்தார்; பிறகு மருந்தைத் தேனில் குழைத்து, மதுரைக்குக் கொடுத்தார். "பாளையம், வெந்நீரைக் கொதிக்க வைத்து, அதில் இந்தப் பச்சிலையைப் போடு. அது குழம்புபோல் ஆனதும், சூடு தாங்கும் படி அவன் உடம்பெல்லாம் பூசி விடு; பயப்படாதே பிள்ளை!" என்று அவர் மதுரையின் மனைவியிடம் சொன்னர்.

"நீங்க இல்லாட்டிச் செத்திருக்குமே? உங்களைப்போல யாரு செய்வாங்க, யசமான்" என்று மதுரையின் மனைவி, தன் நன்றியை அடக்க முடியாமல் சொன்னள்.

கண்ணுயிரம் பிள்ளை, அவளை மேலே பேசவிடாமல் தடுத்து, "புதன் கிழமை நம்ப பையன் வருகிருன். அவன் என்ன சொல்கிருன் பார்க்கலாம். ஒடிந்த காலையும் சரிப்படுத்தறது தானே அவர்களுக்கு வேலை. பாளையம், அப்போ அந்தக் கொட்டகையிலே மதுரையைப் படுக்க வைத்துவிடேன். நீ பயப்படத் தேவையில்லை, அம்மா! அவன் நாடி பலமாய்ப் பேசுது!" என்று கண்ணுயிரம், மதுரையின் மனைவிக்குத் தைரியம் சொல்லிவிட்டுத் தம் அலுவல்களைக் கவனிக்க உள்ளே போய் விட்டார்.

"உடம்பை உடம்பின்னு பாக்காதே உயிரைக் கொடுத்து உழைச்சுதே! அந்தப் பாவி மலையாட்டம் நிக்குருனே ஒழிய, இங்கே வராஞ பாத்தியா!" என்ருள் மதுரையின் மனைவி, பாளையத்தினிடம். அங்கிருந்தவர்கள் எல்லோரும், தம் வீட்டு வாசலில் நின்றுகொண் டிருந்த வீராசாமி பிள்ளையைப் பார்த்தார்கள்.

"அடே, சும்மாயிரு, அம்மை!" என்று பாளையம் அவளை அதட்டி, மற்றவர்களின் உதவியோடு, மதுரையைத் தண்ணீர்ப் பந்தல் வைக்கும் கொட்டகையில் கட்டிலோடு படுக்க வைத்துவிட்டு, தண்ணீர் கொதிக்கவைக்கப் போனுன். மற்ற மூன்று ஹரிஜனங்களும் தம்மிடத்துக்குப் போகப் புறப்பட்டனர்.

வழியில், வீராசாமி பிள்ளை அவர்களை நிறுத்தி, மதுரையின் நிலைமையைப்பற்றி விசாரித்தார்.

"நீங்க போய்ப் பாக்கக் கூடாதுங்களா? உங்களுக்கு அவன் அவ்வளவு செய்யிலையா?" என்றான் ஒருவன்.

"அடே, அதற்கு இல்லையடா. எனக்கும் பெரிய பண்ணைக்காரருக்கும் பேச்சுவார்த்தை இல்லையே? நான் எப்படி அவர்கள் வீட்டுக்குப் போவேன்?"

"உங்க தலையிலே அவரு கல்லையா போட்டாரு! நீங்க என்னுங்க? பெரிய பண்ணைக்காரர் தம்மைக் கொல்லவந்தவனுக்கும் நல்லது செய்வாரே தவிர, கனவுலேயும் கெடுதி நினைக்க மாட்டாரே! நேத்து ராத்திரி, அவர் மனம் நோகக்கூடாது, முகம் கோணக் கூடாதின்னுட்டு, உங்களை விட்டாங்களே தவிர..."

"சரி, சரி, போடா!" என்று எரிந்து விழுந்துவிட்டு, வீராசாமி பிள்ளை வீட்டினுள் நுழைந்தார். அவருக்கும் மனது தாங்கவில்லை. மதுரையைத் தண்ணீர்ப் பந்தலில் விட்டதை அவர் கவனித்திருந்தார். தண்ணீர்ப் பந்தலுக்கும் கண்ணையிரம் பிள்ளையின் வீட்டுக்கும் இடையே முப்பது கஜ தூரமாவது இருக்கும். யாருக்கும் தெரியாமல் மதுரையைப் பார்க்க முடியுமென்று தோன்றியது. உடனே, இருபது ரூபாய்களை எடுத்துக்கொண்டு, தெருப்பக்கம் வந்தார். தண்ணீர்ப் பந்தலின் பக்கத்தில் ஒருவரும் இல்லை. தெருவிலேயே ஜன நடமாட்டத்தைக் காணோம். இதுதான் சமயமென்று, விரைந்து சென்று, அவர் தண்ணீர்ப் பந்தலில் புகுந்துகொண்டார். மதுரை, அவரை எளிதிலேயே கண்டுகொண்டான்.

"எப்படி இருக்கிறது மதுரை?"

"இருக்குது" என்றான் மதுரை கிணற்றிலிருந்து பேசுவது போல்.

"நீ பயப்படாதே. நான் உன்னைக் கைவிட மாட்டேன். சிறிது லகுவானதும் நம்ம வீட்டுக்கு வந்துவிடு. இங்கேயே வர எனக்கு இஷ்டமில்லை. ஆனால், மருந்துக்கு இவரை விட்டால்

வேறு யாரும் இல்லையே! கொஞ்சம், பொறு. நான் போய் வருகிறேன். ஏ, பிள்ளை, இதைச் செலவுக்கு வைத்துக்கொள்'' என்று, கொண்டுவந்த பணத்தை மதுரையின் மனைவியினிடம் கொடுத்துவிட்டு, திருடன்போல் வெளியேறினார். வந்ததை விடுவானேன் என்று, அவள், பணத்தைத் தலைப்பில் இறுக முடிந்துகொண்டாள்.

ஒரு வாரத்துக்கு விடுமுறை நாட்களாக இருந்ததால், கடிதத்தில் தெரிவித்தபடி, மாதவன், புதன்கிழமை, கிராமத்துக்குத் திரும்பி வந்தான். நடந்த விஷயங்களைக் கேட்டதும் அவனுக்கு விசனம் பொறுக்க முடியவில்லை. இனி மீனுவைக் காண யத்தனிப்பதுகூட அவளுக்குப் பெருந் துயரத்தை உண்டாக்கும் என்று ஊகித்துக்கொண்டான்.

எவ்வளவு அடக்கிப் பார்த்தும், மீனுட்சியைக் காணுமல் ஊரைவிட்டுப் போக அவன் மனம் ஒப்பவில்லை. கண்ணுடிப் பாட்டியின் வீட்டுக்கு இரண்டு மூன்று தடவைகள் போய்ப் பார்த்தான். ஆனால் மீனுட்சி தென்படவில்லை. இதுதான் கடைசி முறை என்று அவன் சென்றபொழுது, வீட்டில் யாரும் இல்லை. கண்ணுடிப் பாட்டி கொல்லைப்புறம் போயிருந்ததாகத் தெரிய வந்தது. யோசனையில் ஆழ்ந்தவாறு, மாதவன் அங்கேயே உட்கார்ந்துவிட்டான். அப்பொழுது, இருட்டில் மின்னல்போல், மீனுட்சி, பொரித்த அப்பளங்களை எடுத்துக் கொண்டு, அங்கே வந்தாள். தங்களை அறியாமல், இருவரும் சிரித்துக்கொண்டனர்.

"என் பிழைப்புக்குச் சிரிப்பு வேறேயா, அத்தான்!'' என்றுள் மீனுட்சி.

"உன் பிழைப்புக்கு என்ன குறைவு, மீனு! இதே மாமானும் இருவரையும் தலையில் தூக்கிக் கொண்டாடாவிட்டால், ஏன் என்று கேள்!'' என்றுன் மாதவன்!

"கொண்டாட வேண்டாம். திட்டாமல் இருந்தால் போதும்.''

"அவருக்கு உண்மையில் மூளைக் கலக்கம் என்றுதான் நினைக்கிறேன் மீனு! இல்லாவிட்டால் தெருக்கூத்தைத் தன் வீட்டுக் கூத்தாக்குவாரா?"

இதைச் சொன்னதும், மீனாட்சி மள மளவென்று கண்ணீர் விட ஆரம்பித்துவிட்டாள். "நான் ஒரு மடையன்!" என்று மாதவன் தன்னைத்தானே நொந்துகொண்டு, "வேண்டாம், மீனு; அழாதே, அழாதே! நாம் எப்படி இருக்கப் போகிறோம் பார். ஊம், அழாதே!" என்று தன் கைக்குட்டையால் அவள் கண்களைத் துடைத்து, அவளுடைய தலையைத் தன் தோளின்மீது சாய்த்துக்கொண்டான்.

"பாட்டி வருகிறதுபோல் இருக்கிறது, அத்தான்!" என்று மீனாட்சி, விலகிக்கொண்டு, "நான் தாமதிக்கக் கூடாது. நீ இரண்டு மூன்று தடவை இங்கே வந்ததை நான் கவனித்தேன். ஆனால், நான் எப்படி வருகிறது சொல்லு?"

"இப்பொழுதாவது வர முடிந்ததே என்று சந்தோஷப் படுகிறேன். பாட்டி, மீனு, அப்பளம் பொரித்துக்கொண்டு வந்திருக்கிறாள்!" என்றான் மாதவன், உள்ளே வந்துகொண்டிருந்த பாட்டியினிடம்.

"ஓஹோ!" என்று, எதையோ ஊகித்தவாறு, பாட்டி சிரித்தாள்.

"எனக்கு நிற்க நேரமில்லை, பாட்டி. இதோ இங்கே வைத்திருக்கிறேன். தாமதித்தால் வசவு விழும். போய் வருகிறேன் அத்தான்" என்று மீனாட்சி மாயமாகப் பறந்து விட்டாள்.

தனக்குத் தெரிந்தவரையில் மாதவன், மதுரையின் காயங்களைப் பரிசோதித்துப் பார்த்தான். எலும்பில் அடி பட்டிருக்குமென்றே அவனுக்குப் புலப்பட்டது.

"எதற்கும் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோவது நல்லது அப்பா. 'எக்ஸ்ரே' மூலமாக எலும்பில் என்ன பிசகு இருந்தாலும் கண்டுபிடித்து விடுவார்கள். பிறகு அதற்குத் தகுந்த சிகிச்சை செய்வார்கள்!" என்றான்.

"ஆஸ்பத்திரியில் எவ்வளவு காலம் இருக்கவேண்டும்? செலவு என்ன ஆகும்?" என்றார் கண்ணாயிரம் பிள்ளை.

"இரண்டு மாதங்களாவது தங்கவேண்டி யிருக்கும். மதுரையின் வைத்தியத்துக்காக ஒன்றும் தேவையில்லை. ஆனால், அவனைச் சேர்ந்தவர்கள் யாராவது ஒருவர் அங்கே இருக்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் அவனுக்கு உதவி செய்ய யாருக்கு அக்கறை! கூட வரும் ஆளுக்குச் சாப்பாட்டுச் செலவு, குறைந்தது நூறு ரூபாயாவது ஆகாதா?" என்றான் மாதவன்.

"நூறு ரூபாயா! நான் எங்கே போவேன், சாமி!" என்று மதுரை கைகளை விரித்தான்.

"உங்க பண்ணைக்காரர்தான் கொடுக்கணும்!" என்றான் பாளையம்.

"அவரா கொடுப்பாரு!" என்று மதுரை ஆயாசப்பட்டான்.

"கொடுக்காட்டி, அவரு காலு தக்காது!" என்றான் மதுரையின் மைத்துனன்.

"ஊம், ஊம், இந்த மாதிரிப் பேச்சும் எண்ணமுந்தானே வேண்டாம்! அவனுக்குக் கால் போனால், மதுரைக்குக் கால் வந்துவிடுமா? மடையா! பாளையம், நீயும் மதுரையின் பெண்சாதியுமாக வீராசாமியைக் கேளுங்கள். நல்லதனமாய்ச் சொல்லிப் பார். என் கையிலே இருந்தால் கொடுத்துவிடுவேன். இல்லையே!" என்று கண்ணாயிரம் பிள்ளை மனம் நொந்தார். உடனே, பாளையம், மதுரையின் பெண்சாதியுடன் வீராசாமி பிள்ளையினிடம் சென்று, பணிவுடன், அவரை வழிக்குக் கொண்டுவரப் பல முறைகளைக் கையாண்டான்.

"உங்க புண்ணியத்தாலே, மதுரைக்குக் கால் வந்துட்டுதின்னால் உங்க மேலே எங்களவங்களுக்கு இருக்கிற கோபம் போயிடும். உங்களைச் சாமிபோல அல்ல கும்பிடுவாங்க. கொஞ்சம் யோசித்துப் பாருங்க யசமான். மருதை, என் மகனை அடிச்சான். அவனைக் கொன்று போட்டுடணுமின்னு கூட நினைச்சான். இப்போ நான் ஏன் அந்த மருதைக்குப் பரிஞ்சிக்கிட்டு வரணும்...?"

பாளையம், கடைசியாகச் சொன்ன வார்த்தைகள், வீராசாமி பிள்ளையின் அடி வயிற்றில் பதுங்கிக் கிடந்த சில நல்லுணர்ச்சிகளைத் தட்டி எழுப்புவதுபோல் இருந்தன. ஒரு நிமிஷம் யோசித்தார். பிறகு ஏதோ தயவுக்கு இணங்குவதுபோல் அவர் அவ்வுதவியைச் செய்யச் சம்மதித்தார். அதன்மேல் மாதவன் நகரத்துக்குப் புறப்படும்பொழுது, மதுரையையும் அவனுக்கு உதவியாக அவன் பெரியப்பா மகனையும் அழைத்துக்கொண்டு போனான். போன இரண்டொரு தினங்களில் மதுரையை ஆஸ்பத்திரியிலும் சேர்த்துவிட்டான்.

விளையாட்டுப்போல் மூன்று மாதங்கள் கடந்துவிட்டன. இடைவிடாமல் நான்கு வருஷங்கள், வானம் மோசம் செய்ததால், ஏழை மக்களுக்குப் பிழைக்க வழியில்லாமல் போய்விட்டது. வேலன்சாவடி முழுவதிலும், வீராசாமி பிள்ளையின் லாபம் அதிகரிக்க, அதிகரிக்க, ஏழைக் கிராமவாசிகளின் துயரமும் அதிகரித்துக்கொண்டே போயிற்று. கண்ணுயிரம் பிள்ளைக்கோ, தம் குடும்பத்தை நடத்துவதே கஷ்டமாக இருந்தது. அப்படியிருந்தும், தம் சக்திக்கு மீறியே அவர் ஏழை மக்களுக்கு உதவி செய்தார்.

வேலன்சாவடியில், நீர்ப் பாங்கு இல்லாததால், கிணறுகள் மிகக் குறைவு. இருந்த சிலவற்றிலும் இந்த வறட்சியில் ஒரு கவளைக்குக்கூட நீர் இல்லாமல் போய்விட்டது. இத்தருணத்தை எப்படி லாபகரமாகப் பயன்படுத்திக்கொள்வது என்பதைப் பற்றி, வீராசாமி பிள்ளையின் மூளை, தீவிரமாக வேலை செய்தது. அவர், நூறு மைலுக்கு அப்பாலிருந்த ஆத்தூர் என்னும் கிராமத்துக்குப் போக நேர்ந்தபோது, அங்கே கிணற்றுக்கு நீர் இறைக்கும் எஞ்ஜினை வைத்து, விவசாயம் செய்வதைக் கவனித்திருந்தார். 'நாமும் அப்படி ஏன் செய்யக்கூடாது?' என்ற யோசனை அவருக்கு உதித்தது. கிணறு வெட்டுவதற்கோ எஞ்சினை வாங்குவதற்கோ, வேண்டிய பணம் அவரிடம் இருந்தது; தேவையானது தண்ணீர் ஒன்றுதான்.

மழை இல்லாத போதிலும், அவ்வப்பொழுது, இரண்டு மைலுக்கு அப்பால் இருந்த காட்டு வாய்க்காலில் தண்ணீர் ஓடத்தான் ஓடியது. ஆனால் ஓடும் நீரெல்லாம், சமுத்திரத்திலிருந்து பொங்கிவரும் உப்புக் கால்வாய்களில் வீணாக வடிந்தது. கண்ணையிரம் பிள்ளையின் விஸ்தாரமான மேய்ச்சல் காட்டை, இக்காட்டு வாய்க்கால் சுற்றி ஓடியபோதிலும், அவருடைய மாடுகளுக்குக் குடிக்கத் தண்ணீர் கிடைப்பதைத் தவிர, அவருக்கு வேறொரு பயனும் இல்லை.

இக்காட்டு வாய்க்காலின் மர்மங்கள் வீராசாமி பிள்ளைக்கு ஒரு புத்துணர்ச்சியை ஊட்டின.

ஆதிகாலத்திலிருந்து ஓடும், காட்டு வாய்க்காலின் நீரோட்டம் ஏரிப்பக்கமும் பரவியிருக்கலாமென்றும், அப்படியானால் ஏரிக்கரையிலிருந்த தம் வயல்களிலும் நீர்ப்பாங்கு இருக்கலாமென்றும் நம்பிக்கை பிறந்தது, வீராசாமி பிள்ளைக்கு. அவ்வளவுதான்; நான்கு ஆட்களை விட்டு, தம் நிலத்தில் இரண்டு மூன்று இடங்களில் பதினைந்து அடி ஆழத்துக்குச் சோதனைக் குழிகள் போடச் சொன்னார். போட்ட குழிகளிலெல்லாம், நீர், பத்தடிக்கு முன்னதாகவே கிடைத்துவிட்டது. மழை பெய்தாலும் சரி, பெய்யாவிட்டாலும் சரி; சமுத்திரத்துக்கு ஒப்பான நீர்த்தேக்கம் தமக்குக் கிடைத்துவிட்டதென்று, அவர், பேரானந்தத்தில் மூழ்கினார். ஆனால் அவருடைய உற்சாகத்தைப் பாராட்ட இப்பொழுது மதுரை இல்லாமல் இருந்தது அவருக்குப் பெருங்குறையாகத்தான் இருந்தது. எவனாவது ஓர் ஆள் வேண்டுமே என்று, மதுரைக்கு அநுகூலமாக இருந்த சுப்பனை அவர் பிடித்துக்கொண்டார்.

கிணறு வெட்டி, எஞ்சின் வைப்பதைப் பகிரங்கமாக நாலு பேரிடம் தெரிவித்துக்கொண்டார்.

தினம் மாலையில் சுப்பனுடன், தம் நிலத்தில் தோண்டிய சோதனைக் குழிகளைச் சுற்றிச் சுற்றி வருவது அவருக்கு வழக்கம் ஆகிவிட்டது.

"சுப்பா, இது ஆற்று மணலடா! தெரியில்லே!"

“நல்லாத் தெரியுதுங்க. சின்னச் சின்னக் கூழாங்கல்கூட இருக்குதுங்களே! இங்கிட்டு இருக்கிற எல்லா நிலத்துக்கும் தண்ணி கொடுக்கும். தண்ணி வடியாதுங்க.”

“கிணறு வெட்டி, இஞ்சினை வைத்துப் பயிரிட ஆரம்பித்து விட்டால் எல்லாரும் வயிறு எரிந்தே சாகப் போகிறார்கள் பார்! அதுவும் இந்தக் கண்ணாயிரம் பிள்ளைக்குத்தான் அதிக வருத்தம் வரும்! பக்கத்து நிலத்துக்காரன் ஆச்சுதே! அவனுக்கு என்ன இருக்குதுன்னு நினைக்கிறே? கையிலே கால் துட்டுக் கிடையாது. இனி ஒரு படி நெல்லைக்கூடக் கண்ணாலே பார்க்க மாட்டான். அப்படியிருந்தும், அவனாலே எனக்கு எவ்வளவு துன்பம் தெரியுமா? எவ்வளவு மானக்கேடு! அன்னி ராத்திரி நாடகத்துக்கு நீ வரவில்லை?”

“வந்தேனுங்க, யசமான்.”

“அப்பன் ஒரு விதத்துலே எனக்கு மரியாதை இல்லாமல் செய்கிறான். அவன் மகனோ? தெரியுமல்ல உனக்கு அந்தப் பயல் மாதவன்?”

“ஏன் தெரியாதுங்க?”

“அவன் என் பெண்ணை எந்த விதத்திலேயோ மயக்கிவிட்டான். அவனாலே என் குடும்பத்துக்கே மானக்கேடு வரும் போல் இருக்குதேடா?”

“மெய்தானுங்க.”

“இந்தப் பயல்களைக் குடும்பத்தோடு துரத்திவிடணுமடா; வேலன்சாவடியிலேயே காலை வைக்கக்கூடாது. இவர்கள் ஒழிந்தால்தான் எனக்குக் கௌரவமும் மானமும் தக்கும். என்ன சொல்கிறாய்?”

“மெய்தானுங்க, யசமான்.”

“அடேய், அதுக்கும் ஒரு பெரிய பிளான் போட்டிருக்கேன். ஆனால், கிணறு வெட்டுகிறதுக்கு முன்னாலே, இதை நிறைவேத்தணும். நான் சொல்வது தெரியில்லை?”

“ஆமாங்க.”

"நாளைக்கே புறப்படுகிறேன். இன்னும் மூன்றே நாள், அப்புறமல்ல இந்த வேலன்சாவடிக்கு வீராசாமி பிள்ளை யாரின்னு தெரியப்போவுது! அடே, நீயும் என்னோடு அலைய வேண்டியிருக்குமடா; ஒரு மூட்டை கேழ்வரகை இன்றைக்கே கொண்டு போய்விடு."

"அப்படியே, யசமான்" என்று சுப்பன் ஆனந்தத்தோடும் நன்றியோடும் கை கூப்பினான்.

## 12

**வீ**ராசாமி பிள்ளை, சுப்பனுடன் புலிப்பாளையத்துக்கு வந்த பொழுது நாயக்கர் வீட்டில் இல்லை. அவர் தம்முடைய சினிமாக் கொட்டகையை ரிப்பேர் செய்துகொண் டிருப்பதாகவும், பகல் சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வரமாட்டாரென்றும் தகவல் தெரிந்தது. அதன்மேல், காலதாமதம் செய்ய இஷ்டமில்லாமல் வீராசாமி பிள்ளை, நாயக்கரைத் தேடிக்கொண்டு கொட்டகைக்கே போனார்.

நாயக்கர் வீராசாமி பிள்ளையை மரியாதையுடன் வரவேற்று, தம் சமீபமாகச் சோபாமீது உட்காரச் சொன்னார். சுப்பன், பற்களைக் காட்டிக்கொண்டு, கைகட்டியவாறு நின்றான். "சரி, நீ அப்பாலே போய் இரு" என்று அவனை அனுப்பிவிட்டு, வீராசாமி பிள்ளை, நாயக்கரிடம் தம் மனத்தில் போட்டுக்கொண்ட திட்டத்தைத் தெரிவித்தார்.

நாயக்கர், சிறிது நேரம் ஆலோசனை செய்தார். பிறகு, "இதோ பாருங்கள்; கண்ணாயிரம் பிள்ளைக்கு ஒரு விதத்திலும் தீங்கு செய்ய எனக்கு இஷ்டமில்லை. அவரை நல்லவர் என்று சொல்லாதவர்கள் கிடையாது. சம்சாரி; நான்கு வருஷங்கள் மழைமாரி இல்லாததால் கஷ்டம் வந்துவிட்டது. ஆனால், நானும் ஒரு வியாபாரி. வட்டி நஷ்டப்படவும் இஷ்டமில்லை. இவை எல்லாவற்றிற்கும் சௌகரியமாக ஒரு ஏற்பாடு இருந்தால் சொல்லுங்கள்" என்றார்.

“அதைத்தான் அப்பொழுதே நான் சொல்லிவிட்டேனே? அடமானக் கடனைப் போக்கியமாக மாற்றிவிடுங்கள். எனக்குக் குத்தகைக்கு விட்டுவிடுங்கள். உங்களுக்கும் வட்டி நஷ்டமாகாது. அவரும் பணம் வந்தபோது நிலத்தை மீட்டுக் கொள்ளலாம்” என்றார் வீராசாமி பிள்ளை.

“ஆமாம், அந்தக் குத்தகைக்கு நான் அவருக்கே கொடுத்தாலோ?” என்றார் நாயக்கர்.

“தாராளமாகக் கொடுக்கலாம். ஆனால் வருஷத்தில் நான் ஒப்பந்தம் செய்யத் தயாராயிருப்பதுபோல், ஆயிரம் ரூபாய் எங்கிருந்து கொடுப்பார்?”

“நீங்கள் மட்டும் எப்படிக் கொடுப்பீர்கள்?”

“நானா? பத்தாயிரம் ஆனாலும் சரி, ஒரு பெரிய கிணற்றை என் நிலத்தில் வெட்டி, இஞ்சினை வைத்து, நாற்பது காணிக்குக் குறையாமல் பயிரிடப் போகிறேன். நீங்களே பார்க்கப் போகிறீர்கள். அவர் எதை வைத்துக்கொண்டு செய்வார்?”

“ஒரு வாரம் கழித்து வாருங்கள்.”

“அடமானத்தை என் பெயருக்கு மாற்றுவதானால் யோசிக்க வேண்டும். அந்த ஏற்பாட்டைத்தான் விட்டுவிட்டோமே. குத்தகைக்குக் கொடுக்கக்கூட என்ன யோசனை, நாயக்கர்வாள்? எனக்கு இரண்டு தினங்களில் உங்களுடைய அபிப்பிராயம் தெரியவேண்டும்!”

அதன்மேல் நாயக்கர், மறுநாளே முடிவைத் தெரிவிப்பதாகச் சொன்னார்.

புலிப்பாளையம் நாயக்கர், கண்ணாயிரம் பிள்ளையோடு கலந்து பேசிய பொழுது, வழக்கம்போல் பாளையம், அவர் அருகில் நின்று, அனைத்தையும் கவனித்துக் கேட்டுக்கொண்டிருந்தான். லோகநாயகியம்மாளும் தலைமறைவாக நடையில் இருந்தவாறு சம்பாஷணையை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்தாள். எல்லாம் ஈசன் செயலென்று, எதற்கும் மனச்சஞ்சலம் அடையாத கண்ணாயிரம் பிள்ளைக்குக்கூட ஒரு கணம் மனம் நோகத்தான் நொந்

தது. "இனி எங்களுக்கு நிலம் இருந்தும் ஒன்றுதான், இல்லாததும் ஒன்றுதான்" என்றார் கண்ணாயிரம் பிள்ளை.

"எப்பொழுது பணத்தைத் திருப்பித் தருகிறீர்களோ, அப்பொழுது நிலத்தை விடத் தயாராக இருக்கிறேன். ஆயிரம் ஆயிரமாகக் கொடுத்தாலும் வாங்கிக்கொள்கிறேன். வீராசாமி பிள்ளையினிடமிருந்து வருஷத்துக்கு வருஷம் தனிக் குத்தகைச் சீட்டு எழுதிக்கொள்ளப் போகிறேன்" என்றார் நாயக்கர்.

"சரிதானுங்க. நிலம் இல்லாட்டி எங்களுக்கு வருமானம் ஏதுங்க? கடனை எப்படிக் கட்டுவோம்?" என்றான் பாளையம்.

"தண்ணீர் இல்லாமல் எப்படிச் சாகுபடி செய்வாய்? வீராசாமி பிள்ளை, பெரிய கிணற்றை எடுத்து, இஞ்சின் வைக்கப் போகிறாராம். இதை உங்களிடம் சொல்ல வேண்டாம் என்றார்."

"ஆமாம், இல்லாட்டி யாருக்கும் தெரியாதாக்கும்!"என்றான் பாளையம். கண்ணாயிரம் பிள்ளை பெருமூச்சு விட்டார். "ஏரி நிரம்பினால் அந்த ஆயிரம் ரூபாயை நாங்களும் கொடுத்துவிடுவோம்" என்றார் பிள்ளை.

"மழை பெய்தால் அல்லவா?" என்றார் நாயக்கர்.

"இனிமேல் எப்பவும் மழை பெய்யாதுங்களா, யசமான்?" என்றான் பாளையம் சிறிது காரத்தோடு.

"அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. நான் நான்கு வருஷங்கள் பொறுத்தேன். இனி முடியாது. இரண்டில் ஒன்று முடிவாகச் சொல்லவேண்டியது உங்களுடைய கடமை!" என்று நாயக்கர் சொன்னார்.

"சரி, அப்படியே செய்துடுங்க, யசமான்" என்று பாளையமும், சட்டை செய்யாதவன்போல் தூண்டினான்.

'எங்களுக்கும் ஒரு நல்ல காலம் வருமின்னு நாங்கள் நினைத்துக்கொண்டிருக்கிறோம். நிலத்தை மாத்திரம் வீராசாமி பிள்ளை அபகரிக்காமல் பார்த்துக்கொள்ளுங்கள்." என்று மறைவிலிருந்தே லோகநாயகியம்மாள் கேட்டுக்கொண்டாள்.

"வீராசாமி பிள்ளை வெறும் குத்தகைக்காரர்தான், அம்மா! நிலம் உங்களை விட்டு எங்கும் போகாது. அதற்கு எழுத்து மூலமாக வேண்டியதையெல்லாம் எழுதிக் கொடுத்துவிடுகிறேன்."

"என்னுங்க, அவர் சொல்கிறபடியே செய்துவிடலாமே?" என்றாள் லோகநாயகியம்மாள் தம் கணவரைக் குறிப்பிட்டு.

"சரி" என்றார் கண்ணுயிரம் பிள்ளையும், மேலே எதுவும் பேசத் தெரியாமல்.

"அப்பொழுது, உங்களையும் பாளையத்தையும் நகரத்துக்கு அழைத்துக்கொண்டு போகிறேன். உங்கள் பையனும் கையெழுத்துப் போடவேண்டி இருக்கும். பையனுக்குப் படிப்புத் தடையாகாமல், அங்கேயே அவன் கையெழுத்தை வாங்கிக்கொண்டு, காரியத்தை முடித்துவிடலாம்" என்றார் நாயக்கர்.

பிறகு, கண்ணுயிரம் பிள்ளையும் பாளையமும் நாயக்கரோடு நகருக்குச் சென்றனர். லோகநாயகி, பிறந்தகத்தையே நம்பித் தைரியமாக இருந்தாள் என்று பிள்ளை நினைத்தார். ஆனால் பாளையத்தின் வறட்டுத் துணிச்சலுக்கு அவருக்குக் காரணம் தெரியவில்லை. எதுவாயிருந்தால் என்ன? எல்லாப் பாரத்தையும் சுமக்க வேண்டியவர் கடவுள் அல்லவா? அந்த நம்பிக்கையை அவர் எப்பொழுதும் இழக்கவில்லை.

நகரத்தில், நாயக்கர் தாம் சொன்னபடி வெகு நேர்மையுடன் நடந்துகொண்டார். சீட்டு, நாட்டுக்கள் எல்லாம் முடிந்த பின், அவர் கண்ணுயிரம் பிள்ளையைத் தனிமையாக அழைத்து, ஒரு ஐந்நூறு ரூபாயைக் கொடுத்தார். "இது வட்டியில்லாத கடன், ஒரு நோட்டு மாத்திரம் கால் வட்டிக்கு எழுதிக் கொடுத்துவிடுங்கள். ஆனால் அந்த வட்டியும் தேவையில்லை. உங்களுக்குச் சௌகரியப்பட்ட பொழுது திருப்பிக் கொடுங்கள். இந்தக் கருவு காலத்தில் எதற்காவது உபயோகப்படும்" என்றார் நாயக்கர். கண்ணுயிரம் பிள்ளை திகைத்துச் சிலைபோல் நின்றார். "கடவுள் இருக்கிறார்" என்றார் மெல்ல.

"இல்லையென்று சொல்லவில்லையே!" என்றார் நாயக்கர் சிரித்தவாறு.

இவர்கள் இருவரும் தனிமையாகப் பேசிய பொழுது, மாதவனும் பாளையமும் சற்று விலகிச் சென்று, தாங்களும் ரகசியமாகப் பேசத் தொடங்கினர். பேசப் பேச, பாளையத்தின் முகத்தில் சந்தோஷக் குறி உண்டாவதை, கண்ணாயிரம் பிள்ளை கவனித்தார்.

புலிப்பாளையம் நாயக்கர், விடை பெற்றுக்கொண்டு போனதும், அவருடைய பெருந்தன்மையைப் புகழ்ந்து, தம்மிடம் இருந்த ஐந்நூறு ரூபாயை எடுத்துக் காட்டினார் கண்ணாயிரம் பிள்ளை.

"மெய்யாலும் பெரிய மனுசன்தானுங்க அவரு!" என்றான் பாளையம்.

"அப்பா, என்னிடம் நானூறு ரூபாயைக் கொடுங்கள். நான் பாங்கியில் போட்டு வைக்கிறேன். நல்ல சமயத்துக்கு உதவும். உங்களிடம் இருந்தால், கஷ்டம் என்றால் யாருக்காவது கொடுத்துவிடுவீர்கள். எடுத்ததற்கெல்லாம் மாமாவைக் கேட்க இஷ்டமில்லை."

"சரி, எடுத்துக்கொள்" என்று கண்ணாயிரம் பிள்ளை, தம் புதல்வனிடம் நானூறு ரூபாயைக் கொடுத்தார்.

பிறகு, "பாக்கி நூறு ரூபாயைப் பாளையத்திடம் கொடுத்துவிடுங்கள்" என்றான் மாதவன். கண்ணாயிரம் பிள்ளைக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"என்னிடத்தில் பணத்தை வைக்கக்கூடாது என்கிறாய். சரி, இந்தா பாளையம்! எதற்காக நூறு ரூபாய், பாளையம்? என்னிடம் சங்கதியைச் சொல்லக்கூடாதா?"

"சொல்றதுக்கு ஒண்ணுமில்லை யசமான். காட்டு வாய்க்காலுலே ஒரு குழி எடுத்து, ஒரு காணி நெல்லும், ஒரு காணி கேவிரும் ஏத்தம் இரைச்சுப் பயிரிடலாமின்னு யோசிச்சேன். இப்போ இது ரெண்டு காணி, அது ரெண்டு காணி, போடலாமின்னு தோணுது. கரம்பாக் கிடந்த நிலம்; மண்ணும் தங்க

மான மண்ணு. பயிரிட்டால் விளைஞ்சு தள்ளிடுமே! நாமும் சாப்பிட்டு, நாலு பேருக்கும் போடலாமே, யசமான்!''

கண்ணுயிரம் பிள்ளை, ஒரு கணம் பாலையத்தின் குதூகலத்தைக் கவனித்தார். 'முற்றும் நனைந்தார்க்கு ஈரமில்லை என்று சொல்வார்கள். அதேபோல் அதிக விசனம் உண்டான பொழுது, அது களிப்பாகவும் மாறும். பாலையம் இப்பொழுது அந்த நிலைமையில் இருக்கிறன்' என்று அவர் தம் மகனிடம் சொன்னபொழுது, பாலையத்துக்கு அடக்க முடியாமல் கண்ணீர் வந்துவிட்டது. முகத்தை அப்புறமாகத் திருப்பிக்கொண்டு, கண்களைத் துடைத்துக்கொண்டான்.

அதன்மேல், கண்ணுயிரம் பிள்ளையும் பாலையமும் அன்றிரவே ஊருக்குப் புறப்பட்டனர்.

வீராசாமி பிள்ளை, கிணற்று வேலையை வெகு துரிதமாக முடித்துவிட்டார். ஜலத்தில் பத்தடிக்குக் கீழ் வேலையாட்களால் முழுக முடியாமல் போய்விட்டது. அடியிலிருந்து, ஊற்று அவ்வளவு வேகமாகப் பொங்கி வந்துகொண்டிருந்தது. பார்த்த நிபுணர்கள் எல்லாம், இரண்டு எஞ்சின்களை வைத்து அடித்தாலும், நாலைந்து அடிகளுக்கு மேல் தண்ணீர் வடியாது என்று நிச்சயமாகச் சொல்லிவிட்டார்கள்.

வீராசாமி பிள்ளையின் பெருமையையும் ஆனந்தத்தையும் விஸ்தரிக்க முடியாது. இப்பொழுது மதுரை இல்லாதது, அவருக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. சுப்பன், மதுரையோடு எவ்வளவு பழகியிருந்தும் அவனுக்கு மதுரையின் சாமர்த்தியத்தில் சிறிதும் வரவில்லை. சில வேளைகளில் மூளையில்லாமல் நடந்துகொண்டான். உதாரணமாக, கணக்குப் பிள்ளையை உத்தேசித்து, 'பிள்ளையை அழைத்துக்கொண்டு வா' என்ருல், அவன் என்ஜினைப் பூட்டும் முகூர்த்தத்துக்குக் கண்ணுயிரம் பிள்ளையை அழைத்துக்கொண்டு வந்தான். கண்ணுயிரம் பிள்ளையும் சந்தோஷத்துடன் வந்து, ஆசி கூறினுர்!

ஏழை மக்கள்—எங்கும் பிழைக்க வழி இல்லாததால்—கொடுத்ததை வாங்கிக்கொண்டு, வேலை செய்ய, வீராசாமி

பிள்ளையின் நிலத்துக்கு வந்து குவிந்தனர். கிணற்று நீர், ஆற்று வாய்க்காலைப்போல் நாலா பக்கங்களிலும் சிறு கால்வாய்களின் வழியாக நிலம் முழுவதும் பரவியது. ஒரே சதுரமாக ஐம்பது ஏகராக்களைச் சாகுபடி செய்ய வீராசாமி பிள்ளை ஏற்பாடு செய்தார். ஊரெல்லாம், 'அவர் லட்சக் கணக்கில் சம்பாதித்துக் குவித்துவிடுவார்!' என்று பேசிக்கொண்டனர்.

வீராசாமி பிள்ளையின் பண்ணை, இவ்வாறு செழித்து ஓங்கிக் கொண்டிருக்க, கண்ணுயிரம் பிள்ளையின் 'பெரிய பண்ணை' காட்டு வாய்க்காலை ஒட்டினாற்போல் இருந்த ஓர் ஏற்ற மரத்திலும் அதன் மூலம் பயிரான இரண்டு காணி நிலங்களிலும் ஒடுங்கிவிட்டது.

ஏற்றமரம் பிடித்து வழக்கம் இல்லாததால், பாளையத்துக்கும் அவன் மகன் ஆண்டிக்கும் நீர் இறைப்பது வெகு கஷ்டமாகத்தான் இருந்தது. கஷ்டத்தைப் பொருட்படுத்தா விட்டாலும், நிலத்துக்குப் போதுமான அளவுக்கு நீரும் இறைபடவில்லை. ஆகவே, சாப்பாட்டுச் செலவுக்கு வைத்திருந்த பணத்தைப் போட்டு, பாளையம் ஒரு கவலை தயாரித்துக்கொண்டான். மாதவன் வந்ததும் அவனிடமிருந்து செலவுக்குச் சிறிது பணத்தை வாங்கிக்கொள்ளலாமென்று பாளையம் நினைத்திருந்தான். ஆனுல், மாதவன் இன்னும் வந்தபாடில்லை. இவ்வாறு, முன்னும் போக முடியாமல் பின்னும் வர முடியாமல், பாளையம் தவித்துக்கொண்டிருந்தபொழுது, ஒரு நாள், நிலவரி இலாகாவைச் சேர்ந்த ஓர் அதிகாரி, சர்க்கார் உத்தரவில்லாமல் வாய்க்கால் நீரை உபயோகிக்கக் கூடாதென்று தடுத்தார்.

"என்ன யசமான்! வீணுகப்போய் உப்பங் காவாயிலே விழுகிற தண்ணியை இறைச்சுப் பயிரிட்டு, நாலு பேர் பிழைக்கலாமின்னுல், இது என்ன நாயமுங்க! ஊரெல்லாம் காஞ்சு எரிஞ்சு போயிக்கிட்டு இருக்குதே! இந்தப் பாழாப்போவுற தண்ணியை, நான் நெஞ்சு உடைய எடுத்து ஊத்தக்கூடாதா?"

"சர்க்கார் அநுமதியை வாங்கிக்கொண்டு, அப்புறம் செய்!"

"நீங்கதான் அந்த அநுமதியைக் கொடுங்களேன்!"

"எனக்கு அதிகாரம் இல்லை."

"பின்னே, யாரைத்தான் கேக்கிறது யுசமான்?" என்று பாளையம் தலையில் அடித்துக்கொண்டான்.

"தாசில்தாருக்கு எழுது!"

"ஊஹூம்...எனக்கு எழுதத் தெரியாதுங்க. இந்த நிலத்துக்கார அய்யா பட்டணத்துலே இருக்காரு. அவரண்டை இன்று ராவுலேயே போறேன். அவர் எல்லாம் செய்வாருங்க. அவருக்கு எல்லாம் தெரியும். எங்கப்பன், ஜில்லா கலெக்டருக்கு மேல்பட்டவங்களையும் கண்டு பேசிடுவாரு" என்றபொழுது, அச்சில்லறை அதிகாரியின் முகம் சிறிது குன்றியது. "அடே ஆண்டி, இது வீராசாமி பிள்ளை தாறுகைச் செஞ்சகுச்சுமம். அவனுக்கு ஏதோ வந்திட்டுது! அடியோடு போவான்! நீங்க போங்க. எங்க சின்ன அய்யா எல்லாத்தையும் ஒரு கை பாப்பாரு!' என்று பாளையம் மிரட்டுவதுபோல் சொன்னான்.

## 13

பாளையம் அன்றிரவே நகரத்துக்குப் புறப்படுவதாக வீண் ஜம்பத்துக்குச் சொல்லவில்லை. பல காரணங்களை உத்தேசித்து, அவன் உடனே புறப்பட்டுவிட்டான். வழி தெரியாமல் திண்டாடப் போகிறானே என்ற பயம் கண்ணையிரம் பிள்ளையைப் பிடித்துக்கொண்டது.

"நீங்க ஒண்ணும் பயப்படாதீங்க, யசமான். எனக்கு வாயில்லே? சின்ன அய்யா பேரு, இருக்கிற இடத்துப் பேரு, எல்லா விவரங்களையும் எழுதிக்கொடுங்க. நான் போறேன். டில்லி என்றால்கூட எனக்குக் கணக்கில்லை" என்று பாளையம் ஒருவித முரட்டுத் தைரியத்தோடு ரயில் ஏறிவிட்டான்.

நகரத்துக்கு வந்ததும், பாளையம், சுமுகமாக இருந்தவர்களிடமெல்லாம் குறிப்புக் காகிதத்தை நீட்டி, தட்டுத் தடு

மாறிக் கொண்டு, மாதவனைக் கண்டே பிடித்துவிட்டான்! பாளையத்துக்கு இவ்வளவு சாமர்த்தியம் இருக்குமென்று மாதவன் நம்பவில்லை.

"எனக்கு வயிறு எரிஞ்சு போயிட்டுது, யசமான்! ஒரு காணிக்கு வந்த பேச்சுத்தானே ஐம்பது காணிக்கும் வரும்? இந்த நாயத்தை ஒரு வழியாத் தீத்துடணுமிங்க. அக்கிரமத்துக்கு ஒரு கங்கு கரை இல்லை! அந்தக் கவுனரைத்தான் பாக்கலாமே, அவரே நாயத்தைச் சொல்லட்டும்!"

"பலே! உனக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது, பாளையம்?"

"வயிறு எறிஞ்சால், எல்லாம் வருமுங்க!"

"நீ கவலைப்படாதே! இது எவனோ போக்கிரித்தனத்துக்குச் செய்த வேலை! என்னோடு டாக்டர் பரீட்சைக்குப் படிக்கும் ஒரு சிநேகிதன் இருக்கிறான். அவன் தகப்பனாருக்கு வரி இலாகா போர்டில் பெரிய உத்தியோகம். அவர் உணவுப் பொருள் உற்பத்தி செய்யும் பிரச்னையைத்தான் கவனித்துக் கொண்டிருக்கிறார். அவரால் நமக்குக் கட்டாயம் நியாயம் கிடைக்கும்."

"எப்போ பார்க்கப் போறீங்க அவரை?"

"இன்று ராத்திரியே."

"நானும் வரட்டுங்களா?"

"வேண்டாம், வேண்டாம்" என்று, தன் பெட்டியைத் திறந்து, சலவை செய்த சில துணிகளைக் கொடுத்து, "இதைக் கட்டிக்கொண்டு அழுக்குத் துணிகளை மூட்டை கட்டி வை!" என்றான் மாதவன்.

"என்னத்துக்குங்க, யசமான்?"

"அங்கே வந்தால், நீ சொன்னபடி நான் கேட்கிறேன்; சரிதானா?"

"போங்க, யசமான்" என்று சந்தோஷம் பொறுக்கமாட்டாமல் கூறினான் பாளையம்.

இரவில், மாதவன் சிநேகிதன் அறிமுகப்படுத்த, அவனுடைய தகப்பனரிடம் எல்லா விவரங்களையும் தெரிவித்தான். அவருக்குப் புன்முறுவல் வந்தது.

“எவ்வளவோ பைத்தியக்காரத்தனங்களில் இதுவும் ஒன்று! சரி, நீ ஒரு மனுவை எழுதிக்கொடு” என்று அவனிடமிருந்து ஒரு மனுவை வாங்கிக்கொண்டார். பிறகு மறுநாள் பிற்பகலில் தன்னைக் காரியாலயத்தில் வந்து காணும்படி சொன்னார்.

மாதவன் அங்கே போவதற்கு முன், அவ்வதிகாரி, நன்ருகப் பரிசோதனை செய்து, சம்பந்தப்பட்ட ஜில்லா கலெக்டருக்கு ஒரு தந்தியைக் கொடுத்துவிட்டார். அத்தந்தியின் ஒரு நகலைத் தன் கையொப்பத்துடன் மாதவனிடம் கொடுத்தார். அதை மாதவன் படித்துப் பார்த்தான். ‘சர்க்காரின் கொள்கை உணவுப்பொருள்களை உண்டாக்குவோருக் கெல்லாம் உதவி செய்ய வேண்டியதுதான். அதனுல், பிறருக்குப் பிரதிகூலம் நேரிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அதிகாரிகளின் கடமை. வேலன்சாவடி விவகாரத்தில் தடை போட்டது பிசகு. பலனுக்குத் தகுந்த நிலவரியை நிர்ணயிப்பது, பிற்பாடு செய்யவேண்டிய வேலை. கிராமாதிகாரிகளுக்குத் தெரிவிக்கவும்!’ என்று அதில் இருந்தது.

மாதவனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. அப்பெரியாருக்குத் தன் மனமார்ந்த வந்தனங்களைச் செலுத்தினுன். பிறகு, விடை பெற்றுக்கொண்டு, அவன் பாளையத்தினிடம் நற்செய்தியைத் தெரிவிக்க ஓடி வந்தான்.

“அப்போ இந்த உத்தரவை நான் கொண்டு போகட்டுங்களா? ஐயா கிட்டே கொடுத்து, பத்திரமாய் வைக்கச் சொல்றேன்!”

“எஞ்ஜினீரிங் காலேஜில் இருக்கும் என் சிநேகிதனை அழைத்துக்கொண்டு போய், நம்ப மேய்ச்சல் காட்டுலே, மட்டங்களை எடுக்கணுமின்னு சொன்னேனே, மறந்துவிட்டாயா? அவன் நாளையன்றைக்குத்தான் வரமுடியும்!” என்ருன் மாதவன்.

இரண்டு தினங்களுக்குப் பிறகு, மாதவன், அவன் சிநேகிதன், பாலையம் மூவரும் மட்டம் எடுக்கும் முக்காலிச் சட்டங்கள் முதலியவற்றோடு வேலன்சாவடிக்கு வந்தனர். பிறகு மூவரும் ஆண்டியையும் உதவிக்கு வைத்துக்கொண்டு, சந்தடி செய்யாமல், மேய்ச்சல் காடு முழுவதும் மூன்று தினங்கள் விடாமல் அலைந்து திரிந்தனர். முன்னதாகவே மாதவன் சேகரித்து வைத்திருந்த அந்த நிலத்துப் பிளானில், மாதவனின் நண்பன், பல குறிப்புகளைப் பதிவு செய்துகொண்டே போனான். எல்லாம் ஒரு விதமாக முடிந்தது.

பிறகு மாதவனின் சிநேகிதன், "பாலையம்! அந்தப் பனந்தோப்புக் கிட்டே முப்பது ஏக்கரா இருக்கிறதே, அது இந்த வாய்க்காலுக்கு அரை அடி பள்ளமாகவே இருக்கிறது. இங்கிருந்து ஒரு கால்வாய் ஆழமாய் வெட்டிக்கொண்டு போனால், நாளைக்கே நீ அதைச் சாகுபடி செய்யலாம். அப்புறம், அந்த ஆலமரத்துக்கு மேற்புறம் இருக்கிற இருபது ஏகரா, முக்கால் அடி மேடாயிருக்கிறது. மொத்தத்தில் எழுபத்தைந்து ஏகராக்களைச் சாகுபடிக்குக் கொண்டுவந்து விடலாம், பாலையம்" என்றான்.

"இந்த மேடு முப்பது ஏக்கராவுக்கு மேலே இருக்கிறது. இதுலே உங்க ஐயா ஒரு ஊரைக் கட்டப் போகிறாராமே! அப்புறம் பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி! பெரிய பிளான்தான் போட்டிருக்கிறார், பாலையம்'' என்று நண்பன் மேலும் கூறினான்.

"கடவுள் புண்ணியத்துலே எல்லாம் நடக்குமுங்க. நீங்க இல்லாமலா கட்டப் போறாரு?" என்று பாலையம் நன்றி ததும்பக் கூறினான்.

மாதவனின் நண்பன், வேலையெல்லாம் முடிந்துவிட்டதால் அன்றிரவே ரயில் ஏறிவிட்டான். இரண்டு தினங்கள் எலி வேட்டையாடுகிறவர்கள்போல், மாதவனும் பாலையமும் மேய்ச்சல் காடு முழுவதும் சுற்றித் திரிந்தனர். அவர்களுடைய பாதம் படாத இடமே இல்லை. யோசித்து, யோசித்து இருவரும் ஒரு தீர்மானத்துக்கு வந்தனர். பணமில்லாக் குறையே

அவர்களை வாட்டியது. இனித் தாமதிக்க முடியாமல், மாதவன் திரும்பவேண்டி யிருந்தது. போவதற்கு முன், வீராசாமி பிள்ளையின் விவசாயத்தைப் பார்க்க வேண்டுமென்று அவ னுக்கு ஆசையாக இருந்தது. போய்ப் பார்த்தான்.

மாதவன் ஏரிகரை ஏறினதும், பாலைவனத்தில் நந்தவனம் போல் வீராசாமி பிள்ளையின் விளைச்சல் பச்சைப் பசேலென்று தோற்றமளித்தது. எஞ்ஜின் ஓடிக்கொண் டிருந்தது. ஆட்கள் வேலை செய்துகொண் டிருந்தனர். பிள்ளையைக் காணவில்லை.

தங்களுடைய நிலத்திலும் பாதிக்கு மேல் பயிரிடப்பட் டிருப்பதை மாதவன் உணர்ந்தான். ஏரிகரையை விட்டுக் கீழே இறங்கப் போகும் சமயத்தில், எஞ்ஜின் கொட்டகையி லிருந்து பார்வதியம்மாளும் மீனாட்சியும் வெளியே வந்து, கால் வாய் நீரில் சில பாத்திரங்களைச் சுத்தம் செய்வதைக் கண்டு, அப்படியே நின்றுகொண்டான். மீனாட்சி, குழாயிலிருந்து வரும் வேகமான வீழ்ச்சியில், இரு கைகளை நீட்டி முகத்தைக் கழுவிக்கொள்ள யத்தனித்தாள். நீர் வீழ்ச்சியை எதிர்ப்பது அவளுக்கு ஒரு வேடிக்கையாக இருந்ததுபோலத் தோன்றி யது. இப்பொழுது, அழைத்த குரலுக்குப் பதில் சொல்வது போல் பார்வதியம்மாள் கொட்டகைக்குள் சென்றாள். வீரா சாமி பிள்ளை, கொட்டகையில்தான் இருக்க வேண்டுமென்று மாதவன் ஊகித்தான். சில நிமிஷங்களுக்குப் பிறகு, பார்வதி யம்மாளும் மீனாட்சியும் வீட்டுக்குக் கிளம்பினர். மீனாட்சியைக் கண்டு பேச வேண்டுமென்ற ஆசை மாதவனுக்கு உண்டாகி விட்டது. குறுக்கு வழிகளில் விழுந்தடித்துக்கொண்டு, அவர் களுக்குச் சிறிது தூரம் முன்பாகப் போய், வாரியில் இறங்கினான். மீனாட்சி, உடனே அவனைக் கண்டுகொண்டாள். அவன் விரைந்து, அவர்களிடம் சென்று, "மாமி சௌக்கியமா? மீனா, எப்படி இருக்கிறாய்?'' என்று விசாரித்தான்.

மீனாட்சி, வாய் அடைபட்டவள்போல் விழித்து, அவனைப் பார்த்தவாறு நின்றாள்.

"எங்கள் சௌக்கியத்தைச் சொல்லு! நாங்களும் சரி, அந்த உழவு மாடும் சரி! அதாவது இப்பொழுது காலாற, சுயேச்சையாக மேய்கிறது..."

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? உங்களுக்காகத்தானே மாமா இவ்வளவு பாடு படுகிறார்? இந்த வருஷம் அவருக்கு முதல் தரமான வெள்ளாமை ஆச்சே!"

பார்வதியம்மாள் மாதவனை விழித்துப் பார்த்து, "குத்திக் காட்டுகிறாயா?" என்றாள்.

"ஐயோ! அந்த எண்ணமே எனக்கு இல்லையே, மாமி. மாமா பயிரிடும் முறை, மெச்சத்தக்கது என்று அல்லவா சொல்ல வந்தேன்?"

"உங்கள் நிலத்தை அபகரித்துக்கொண்டு நெல்லாய் வாரிக் கொட்டிக்க வேண்டும் என்று நினைக்கிறாரே!"

"அவர் எங்கே அபகரித்துக்கொண்டார், மாமி? நாங்கள் கடனைக் கொடுக்காவிட்டால் அவர் மேலா தப்பு?"

"உனக்கு நிஜமாய் அவர்மேல் கோபம் இல்லையா?" என்றாள் பார்வதியம்மாள்.

"நிஜமாய்க் கோபம் இல்லை. ஆனால் பரிதாபம் இருக்கிறது."

"எனக்கு ஒன்றும் புரியவில்லையே!" என்று பார்வதியம்மாள் முகவாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டாள்.

"புரிகிற காலம் வரும், மாமி! கடவுளே மாமா புத்தியை மாற்றிவிடுவார். பாருங்கள். அப்பாவுக்கு அந்த நம்பிக்கை இருக்கிறது. எனக்கும் இருக்கிறது. உனக்கு, மீனு?"

"எனக்கும் இருக்கிறது. அத்தான்" என்றாள் மீனாட்சி ஆனந்தத்தோடு.

பார்வதியம்மாள், மாதவனையும் மீனாட்சியையும் மாறி மாறிப் பார்த்தாள். "எனக்கு வருகிற கோபத்துக்கு, என்ன செய்வேன் தெரியுமா?"

"என்ன செய்வீர்கள், மாமி!"

"நடக்கிறது நடக்கட்டுமின்னு, கண்காணாத இடத்துக்கு அழைத்துக்கொண்டு போய், உங்கள் இரண்டு பேருக்கும் கல்யாணத்தைச் செய்துவிடுவேன்" என்றாள் அவள், வெகு பதற்றமாக. மாதவன் விழுந்து விழுந்து சிரித்தான்.

"உங்களுக்கு ஏன் அந்தக் கஷ்டம்? மாமாவே செய்துவிடுவார்?"

"நீ எங்கே போகிறாய்?"

"மாமாவைப் பார்க்கத்தான்."

"அய்யோ! வேண்டாமடா, என் கண்ணே! இப்பொழுது நீ பேசுவதைப் பார்த்தால்கூட, அவர் எரிந்து விழுவாரே! இருக்கிற சண்டை போதும் அப்பா. நீ வீட்டுக்குத் திரும்பிப் போ" என்று பார்வதியம்மாள் கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள்.

"ஏன் சண்டை வருகிறது, மாமி? எனக்குப் பகையா? பொறாமையா? கிணறு எப்படி இருக்கிறது? இஞ்சின் எப்படி வேலை செய்கிறது என்று நான் தெரிந்துகொள்ள வேண்டாமா? மீனுவுக்காக, அவர் என்னை அடித்தாலும் பட்டுக்கொள்கிறேன்!" என்று மீனாட்சியை விழித்துப் பார்த்துவிட்டு, அவன் விரைந்து போய்விட்டான். சிறிது நேரம் தாயும் மகளும் அவனை நோக்கியவாறு நின்றனர்.

## 14

மாதவன் வெகு சகஜமாகக் கிணற்றைப் பரிசோதித்துப் பார்த்தான். அவன் வந்ததை ஒருவன் ரகசியமாக வீராசாமி பிள்ளைக்குத் தெரிவித்தான். அவருக்குக் கோபம் பீரிட்டுக் கொண்டு வந்தது. இருந்தாலும் இடம் தேடி வந்தவனை அவமதிக்கக் கூடாதென்று, பல்லைக் கடித்துக்கொண்டு, பிள்ளையார்போல் உட்கார்ந்த இடத்திலேயே புதைந்துவிட்டார். பிறகு மாதவன், கால்வாய்கள் வெட்டப்பட்டிருக்கும் ஒழுங்கைக் கவனித்துக்கொண்டே வந்தான். அவனுடைய நிதானம், பிள்ளையின் எரிச்சலை மேலும் அதிகரிக்கத்தான் அதிகரித்தது. "சௌக்கியமா, மாமா?" என்று அவன் கேட்டது, தனக்கும்

அவருக்கும் நல்லுணர்ச்சி தவிர வேறு எவ்வித விரோதமும் இல்லாததுபோல், அவ்வளவு சகஜமாக இருந்தது. வீராசாமி பிள்ளை வாயைத் திறக்கவில்லை. ஆனால், மாதவன் விட்டுக் கொடுக்கவில்லை. "மதுரைக்கு அநேகமாய்க் குணம் ஆகிவிட்டது. இன்னும் ஒரு மாதத்தில் வந்துவிடுவான்" என்றான். "நீங்கள் இந்தப் பக்கத்தாருக்கெல்லாம் ஒரு வழியைக் காட்டிவிட்டீர்கள். உங்கள் விவசாய முறை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது!" என்றும் கூறினான்.

வீராசாமி பிள்ளைக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவன் மனத்தில் எதை வைத்துக்கொண்டு பேசுகிறான் என்று தெரியாததால், தலையை அசைத்து வைத்தார். அப்பொழுதும், மாதவன் அவரை விட்டபாடில்லை.

"நீங்கள் எவ்வளவுக் கெவ்வளவு தானியத்தைச் சேகரிக்கிறீர்களோ, அவ்வளவுக் கவ்வளவு எனக்குச் சந்தோஷம், மாமா! மனப்பூர்வமாகச் சொல்கிறேன். விளைந்த தானியமெல்லாம் பசியைத்தானே தீர்க்கும்?" என்று அவன் சொன்னபொழுது அவருக்கு மற்றொரு முறை, அடி வயிற்றில் ஒருவிதக் கலக்கம் உண்டாயிற்று. அது ஏதேதோ உணர்ச்சிகளைக் கிளப்பிவிட்டது. மாதவன் தன் தந்தையை அநேகமாக ஒத்திருந்தான் என்பதை மாத்திரம் அறிந்துகொண்டார்.

"நீர் பாழாகாமல், வாய்க்கால்களைப் புது முறையில் அமைத்திருக்கிறேன், வந்து பார்" என்று அவர் மாதவனுக்குத் தான் செய்த சீர்திருத்தங்களைக் காண்பித்தார். மாதவன் அவைகளில், அநுபவத்தின் பலனையும் ஊகத்தின் வெற்றியையும் கண்டு, களித்து, விடைபெற்றுக்கொண்டு போனான்.

மாதவன், வைத்தியக் கலாசாலைக்கு வந்ததும், கிராம விவகாரங்களை அடியோடு மறந்து, நெருங்கிவரும் பரீட்சையில் முன்னேற்றமடைய மும்முரமாக உழைத்தான். வீராசாமி பிள்ளை, பதினைந்தாயிரத்துக்கு நெல்லை விற்றதாகவும், எஞ்சின், கிணறு, முதலியவற்றின் செலவு போகப் பத்தாயிரம் லாபம் அடித்துவிட்டதாகவும், இதைத் தவிர வைக்கோல் போர்களை

மலை மலையாகக் குவித்து விட்டதாகவும் பாளையம் தெரிவித்தான், மாதவன் கிராமத்துக்கு வந்து பார்த்தபோது...

என்ன மாறுதல்! எங்கும் கவலையும் கஷ்டமுந்தான். மனிதர்களுக்கு உணவு இல்லாத குறையோடு, மாடுகளுக்கும் தீனி கிடைப்பது அரிதாகிவிட்டது. அன்று ஒரு நாள் ஏதோ தற்புகழ்ச்சியால் வீராசாமி பிள்ளை மாதவனோடு பேசினரே தவிர, இப்பொழுது அவனைக் கண்டால் வேணுமென்றே விலகிப் போவது, அவனுக்குத் தெரியாமல் போகவில்லை. தந்தையின் நற்குணங்கள் அவனிடத்தில் இருந்தபோதிலும், இளமையின் வேகம் எப்படி விலகும்?

அன்பு தோய்ந்த இதயமாயினும், அதில் சுயமரியாதை இல்லாமல் போகவில்லை. பிள்ளையின் பேராசையும் கருமித்தனமும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே போயின. இப்பொழுது, மீனுட்சி, இருக்கும் இடம் தெரியாமல் மறைந்திருந்தாள்.

பாளையம், தட்டுத் தடுமாறிக் கண்ணுயிரம் பிள்ளையின் குடும்பத்துக்கும், அவரை அண்டியிருந்த நாலைந்து குடும்பங்களுக்கும் எப்படியோ உணவுப் பொருள்களை விளைவித்து விட்டான். ஆனல், அவர்களிடம் ஏராளமாக இருந்த மாடுகளுக்குத் தீனி கிடைக்காமல் போனதுதான் அதிகக் கஷ்டத்தை கொடுத்தது. இந்தக் கணத்தில்தான், வீராசாமி பிள்ளையின்மீது மாதவனுக்கு அடக்க முடியாத கோபம் வந்தது. ஏனெனில் பணத்தைக் கொடுத்தாலும் அவர் வைக்கோலை விற்க மறுத்து விட்டார்.

விடுமுறை முடியும் வரையில், மாதவனுக்கும் பாளையத்துக்கும் கூடிக்கூடிப் பேசுவதே வேலையாக இருந்தது. அவ்விருவரும் மேய்ச்சல் காட்டுக்கு, நாள் தவருமல் போய் வருவதைக் கண்டால், தினமும் நடவோ அறுப்போ இருப்பதுபோலத் தோன்றியது. இதைப்பற்றி லோகநாயகியம்மாளும் பரிகாசம் செய்ய ஆரம்பித்தாள்.

“எந்தக் கோட்டையயடா பிடிக்கப் போகிறீர்கள்!” என்று கேட்டாள்.

"கோட்டையைப் பிடிக்கவில்லை. புதிதாகக் கட்டப் போகிறோம், அம்மா" என்றான் மாதவன்.

"இந்த வருஷம் நூறு வண்டி அறுப்பீர்களா?" என்று அவள் சிரித்தாள். "பணம் இருந்தால் இருநூறு வண்டி எடுப்போம். கையிலிருந்த இருநூறு ரூபாயும் வைக்கோலுக்குப் போய்விட்டதே!" என்றான் மாதவன்.

"பணம் இல்லாமல் எந்தக் காரியம் ஆகும் அப்பா? வீராசாமி பிள்ளை பணத்தை எடுத்தார். நம்மாலே முடியுமா?"

"நாங்கள் பணம் இல்லாமலே பணத்தை எடுக்கப் போகிறோம். அது தெரியுமா உனக்கு?"

"எப்படியோ, நீங்கள் இரண்டு பேரும் சந்தோஷமாய் இருக்கிறீர்கள். எனக்கு வேண்டியது அவ்வளவுதான். நெல், நிலத்தில் விளைந்தால் என்ன? ஆகாசத்தில் விளைந்தால் என்ன?" என்று லோகநாயகி அம்மாள் சிரித்தாள். பிறகு, "சொல்ல மறந்துவிட்டேனே? நாளைக்கு ராத்திரி, பார்வதியம்மாள், குழந்தைகளுடன் பிறந்தகத்துக்குப் போகிறாளாம்."

"நான் போகிற வண்டியில்தான் அவர்களும் ஏறவேண்டும். என்ன விசேஷம்?" என்றான் மாதவன்.

"அவளுடைய தாயாருக்கு நோவு வக்கரித்துக்கொண்டதாம்; பிழைக்கமாட்டாளாம்."

"மாமா போகவில்லையா?"

"அவர் இப்போ ஊரைவிட்டுப் போவாரா? நாற்று நடவு; ருசிகண்ட பூனை ஆச்சே?"

மாதவன் யோசித்தவாறு இருந்தான்.

தன் குடும்பத்தார் போகும்போது, மாதவனும் புறப்பட்டது, வீராசாமி பிள்ளைக்குச் சிறிது ஆச்சரியமாக இருந்தது. 'அதே வண்டியில் அவனும் ஏறிவிட்டால் என்ன செய்வது' என்று, அவர் பெண்களுக்குத் தனியாக இருந்த வண்டியில் தம் குடும்பத்தை ஏற்றிவிட்டார். இங்கும் அவர் அன்னியன் போல் நடந்துகொண்டது மாதவனுக்குக் கோபத்தை மூட்டியது. அவருக்கும் சிறிது மனக்கலக்கத்தை உண்டாக்க வேண்

டுமென்று, வண்டியில் நின்றுகொண்டவாறு, பாளையத்துக்குக் கண் சிமிட்டினான். பிறகு உரக்க, வீராசாமி பிள்ளையின் காதில் விழும்படி, "நீ கவலைப்படாதே பாளையம், பெரிய இஞ்சினைக வாங்கிவிடுகிறேன்!" என்று சொன்னான். "அதுதானுங்க நல்லது. அடிக்கடி மாத்துறதுலே என்ன சுகம்?" என்றான் பாளையமும்.

வீராசாமி பிள்ளை, அவர்களைத் திரும்பிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. ஆனால் மாதவன், அலட்சியமாய் முகத்தை அப்புறமாகத் திருப்பிக்கொண்டான். வண்டியும் நகர்ந்தது.

அடுத்த ஸ்டேஷனில், வண்டி நின்றதும், மாதவன் பார்வதியம்மாள் இருந்த பெட்டிக்கு வந்தான்.

அவனைக் கண்டுகொண்ட மீனு, கதவோரம் வந்தாள். பார்வதியம்மாளும் அவள் பின் வந்தாள்.

"மாமி, மாமா நாளுக்கு நாள் மாறுகிறாரே என்றுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. போன தடவை வந்தபோது, வடிகால்களையெல்லாம் காண்பித்தார். இப்பொழுது பேசக்கூட இல்லை!" என்றான் மாதவன்.

"ஆ! எங்கள் தலையெழுத்துடா அப்பா! ஆசைப்பட்டதெல்லாம் கிடைத்துடுமா!"

"ஆகையினாலே, நீங்கள் சும்மாயிருங்கள். நானும் சும்மாயிருக்கிறேன்! பழகினவர்களோடு பேசுவதுகூட ஒரு தப்பா? நானும் அவருக்கு மேல் நூறு வண்டி நெல் அறுத்தால், அவர் என்னோடு பேசுவார். என்னால் விவசாயத்திலும் சம்பாதிக்க முடியும், வைத்தியத்திலும் சம்பாதிக்க முடியும்! நல்லது. பாகூரில் நீங்கள் இறங்கும்போது, வந்து கண்டுகொள்கிறேன்."

"வேண்டாம், அப்பா."

"நீ வா, அத்தான். இந்த மூட்டை முடிச்சுகளை எப்படி இறக்குகிறது?" என்று மீனாட்சி தன் தாயாரைக் கடிந்து கொண்டாள்.

பாகூர் வந்ததும், மாதவன் ஓடிவந்து, அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்தான். "பயப்பட வேண்டாம் மாமி! கடவுள் நம்ம பக்கம் இருக்கிறார். நீயும் கவலைப்படாதே மீனு" என்று அவளுடைய இரு கைகளையும் இறுகப் பிடித்துக் கொண்டு சொன்னான். பார்வதியம்மாள் பிரமித்துப் போய், அவன் ஓடி, வண்டி ஏறும் வரையில் அவனைப் பார்த்தவாறு நின்றாள். வண்டி, காலியாக இருந்தபொழுதிலும்,மாதவனுக்குத் தூங்கப் பிடிக்கவில்லை. மாமி, பார்வதியம்மாளுக்குத் தர்ம சங்கடமாக இருந்ததை அவன் உணராமல் போகவில்லை. தன் அருமை மகளின் வாழ்க்கையைப் பாழாக்க அவளுக்கு இஷ்டமில்லை. ஆனால், கணவரின் ஆணைக்கு மீறி நடக்கவோ, அல்லது அவரை வற்புறுத்தித் தன் வழிக்குக் கொண்டுவரவோ அவளுக்குத் தைரியமும் இல்லை. எவ்விதத்தில் பரிகாரத்தைத் தேடுவது என்று, மாதவன் மனத்தைக் குழப்பிக்கொண்டான்.

**வீ**ராசாமி பிள்ளைக்குத் தானே தன் ஆகாரத்தைச் சமையல் செய்து கொள்வதில் ஓர் ஆனந்தம். தன் மனைவிக்குச் சாமான்களை நஷ்டமாக்கத்தான் தெரியும் என்று அவர் நினைத்தார். சாமான்களை நிறுத்துப் போட்டாற்போல் ஒவ்வொன்றையும் வெகு சிக்கனமாக அவர் வழங்குவார். தினம், காய்கறி இல்லாமல் பார்வதியம்மாள் சமையலை நடத்த மாட்டாள். பணத்தின் அருமை தெரியாமல் விலை கொடுத்துக்கூட அவள் வாங்கிவிடுவாள்! ஆனால், அந்த வழக்கம் பிள்ளையிடம் கிடையாது. ஒன்று, அவருடைய நிலபுலன்களில் காய்க்க வேண்டும்; இல்லாவிட்டால் யாராவது இனமாகக் கொடுக்கவேண்டும். இரண்டும் இல்லாவிட்டால் அவருக்குக் கறி பதார்த்தங்களே தேவையில்லை!

அன்று என்ன சமையல் செய்வதென்று யோசித்துக் கொண்டிருக்கும்பொழுது, வீட்டின் கொல்லைக் கோடியில் நாக மரத்தண்டை முளைத்திருந்த ஒரு பீர்க்கைத் தப்புச் செடியின் கொடியை, மரத்தின் மீது ஏற்றிவிட்டது அவர் நினைவுக்கு

வந்தது. உடனே அங்கே சென்று பார்த்தார். முதல் தரமான மூன்று இளங் காய்கள் தொங்கிக்கொண்டிருந்தன. காய் களைப் பார்க்க நாக்கில் நீர் ஊறியது. அவ்வளவுதான்; பறித் தார், உள்ளே கொண்டுபோய் நறுக்கினார். பிறகு, பாசிப் பயறு சேர்த்தாலொழிய, அதன் முழுச் சுவை வராதென்று, பயற்றம் பருப்பை முதலில் வேக வைத்து, அற்புதமான கூட்டைத் தயா ரித்தார்; அவசரமாகக் குளித்துவிட்டு, ஒரு பெரிய இலையைப் போட்டுக்கொண்டு, கூட்டு அவ்வளவையும் இலையில் கொட் டிக்கொண்டார். பிறகு, சாதத்தைச் சிறிது குறைவாக வைத் துக்கொண்டு, ஆனந்தமாக அவர் முதலில் எடுத்து, ருசி பார்த் தார். கசப்பதுபோல் இருந்தது. கசப்பு எப்படி வரும் என்று சந்தேகித்து, மற்றொரு பக்கத்திலிருந்து எடுத்து, வாயில் போட்டுக்கொண்டார். அதுவும் கசப்பாகத்தான் இருந்தது. அதற்குப் போட்ட பருப்பென்ன, மிளகாய் என்ன, எண்ணெய் என்ன! பெருங்காயத்தையும் போட்டாரே! இவ்வளவு செல வுடன் தயாரித்ததையா எறிந்துவிடுவது! அவருக்கு மனம் ஒப்பவில்லை. மூக்கைப் பிடித்துக்கொண்டு, அவ்வளவையும் சோற்றிலே கலந்து, விழுங்கி விடவேண்டும் என்று தீர்மானித் தார். அப்படியே செய்தும் முடித்தார். பிறகு வாயிலிருந்த கசப்புப் போவதற்காக, சுப்பனைக் கடைக்கு அனுப்பி, வெற் றிலையையும் பாக்கையும் வாங்கி வரச் சொன்னார். அதையும் மென்று தின்றார். என்ன செய்த போதிலும் சிறிது அருவருப்பு இருக்கத்தான் இருந்தது.

ஒரு மணி நேரங்கூடத் தூங்கியிருக்க மாட்டார். வயிற் றில் ஏதோ வேதனை செய்யவே எழுந்து உட்கார்ந்துகொண் டார்.

## 15

வீராசாமிபிள்ளை, சுப்பனை அழைத்து, "பண்டிதக்காரன் வீடு தெரியுமாடா? நாவிதன்?" என்று கேட்டார்.

"ஆமாங்க, கிழவனுரு. வைத்தியம் பண்ணுவாரே, அவரு தானுங்களே?"

"அவன் வீடு..."

"நத்த மேட்டுலே இருக்குது. எனக்குத் தெரியுமுங்க."

"அவனேதான். ஓடிப் போய்க் கையோடு அழைத்துக் கொண்டு வா. கசப்புப் பீர்க்கங் காயைத் தெரியாமல் தின்னிட்டாராம்; வயிற்றுப் போக்குக் கண்டுவிட்டதா மின்னு சொல்லு; ஓடு! ஓடு!"

சுப்பன் பரமானந்த சிஷ்யனுனதால் ஓடவே ஓடினுன்.

கிழட்டுப் பண்டிதன் சீக்காய்ப் படுத்துக்கொண்டிருந்தான். சுப்பன் எவ்வளவு மன்ருடியும் நகர முடியாது என்று அவன் சொல்லிவிட்டான்.

"அப்போ அவரண்டை என்ன சொல்லச் சொல்றே, பண்டிதரே?" என்ருன் சுப்பன்.

"சாகக் கிடக்கார். மருந்துப் பெட்டியும் உங்கிட்டே இருக்குதாம்னு சொல்லு; போ. நான் சோறில்லாமல் சாகறேன். அந்தப் படுபாவி மருந்தே இல்லாமல் சாகட்டும்!" என்ருன் பண்டிதன்.

சுப்பன் திரும்பி வருவதற்குள், வீராசாமி பிள்ளை எழுந்திருக்கச் சக்தியற்றவராக ஆகிவிட்டார். சுப்பன் ஒன்று விடாமல் பாடம் ஒப்பித்தான். இப்பொழுது வீராசாமி பிள்ளையின் கண்கள் செருகவே, சுப்பன் பயந்து, "அய்யோ! யசமான், அய்யோ! யசமான்!" என்று கூக்குரலிட்டான். பக்கத்து வீட்டு அருணுசலம் ஓடிவந்தார். ஆபத்தான நிலைமையென்று உணர்ந்து, கண்ணுயிரம் பிள்ளையிடம் ஓடினுர். கண்ணுயிரம் பிள்ளை விஷயம் அறிந்து, மருந்துப் பெட்டியை எடுத்துக் கொண்டு, விரைந்து வந்தார். இதற்குள் வீராசாமி பிள்ளை, தம் நினைவை இழந்துவிட்டார். பலாத்காரமாக, வாயைத் திறந்து, நாவில் காரசாரமான மருந்துகளை வைத்துக் கண்ணுயிரம் பிள்ளை தேய்த்தார்.

இதற்குள் பலர் வந்து கூடிவிட்டனர். அவர்களுக்கு அபிமானம் குறைவாக இருந்தபோதிலும், வேடிக்கை பார்க்க வேண்டுமென்ற ஆசை அதிகமாக இருந்தது. அரை மணிக்குப் பிறகு வீராசாமி பிள்ளைக்குத் தம் நினைவு வந்தது. எழுந்து உட்கார முயன்றார். "வேண்டாம்; சோர்வு தீரட்டும்; இன்னும் ஒரு தடவை மருந்து கொடுத்தால் போதும். இரவில், கஞ்சி சாப்பிடலாம். நம்ம வீட்டிலேயே போடச் சொல்கிறேன்" என்றார் கண்ணாயிரம் பிள்ளை.

"உங்களுக்கு ஏன் அந்தக் கஷ்டம்? வீரம்மாள் பாட்டியை அழைத்துக்கொண்டுவரச் சொல்கிறேன்" என்றார் வீராசாமி பிள்ளை.

"வீரம்மாள் பாட்டி ஊரில் இருக்கிறாளா? எனக்குத் தெரியாதே!" என்றார் கண்ணாயிரம்.

"நேத்து இங்கே வந்திருந்தாங்க, யசமான்" என்றான் சுப்பன்.

"அப்போ போய் அழைத்துக்கொண்டு வாயேண்டா" என்றார் கண்ணாயிரம் பிள்ளை. அந்தப் பாட்டியை அழைத்து வரச் சென்றான் சுப்பன்.

இரண்டு தினங்கள், வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தவாறே வீராசாமி பிள்ளை, தம் அலுவல்களைக் கவனித்தார். எவ்விதத்திலும் கண்ணாயிரம் பிள்ளையின் பெருமை ஓங்கும்படியே சம்பவங்கள் தோன்றினவே என்று அவர் வருத்தப்பட்டார். கசப்புப் பீர்க்கையைத் தின்னவேண்டுமா! அந்த நாவிதப் பண்டிதனும் வர முடியாமல் போகவேண்டுமா? கண்ணாயிரம் பிள்ளைக்குத் தாம் கடமைப்பட்டபடி ஆகவேண்டுமா! சே! சே! எவ்வளவு மோசம்! கண்ணாயிரம் பிள்ளையிடத்தில் ஏதோ ஒரு யட்சிணி இருக்க வேண்டுமென்று அவர் நம்பினார்.

பக்கத்து வீட்டு அருணாசலத்தினிடங்கூட, "போயும் போயும் இந்த மனிதனுடைய தயவுக்கு ஆளாகும்படி நேரிட்டதே!" என்று பல முறை அங்கலாய்த்துக்கொண்டார்.

மாதங்கள் ஓடின. பார்வதி அம்மாள் தன் தாயாரின் சாவுக் குரிய கர்மக்கிரியைகள் முடிந்த பின்னர் ஊருக்குத் திரும்பி ஞள். தன் கணவனுக்குப் 'பேய்ப்பீர்க்கன்' என்று நண்டு சிண்டுகளெல்லாம் பெயர் வைத்துக் கேலி செய்வதைக் கண்டு வருந்தினுள்.

மாதவன் சொன்னபடி, தன் கணவனிடம் மூர்க்கத்தனமே விருத்தியடைந்திருப்பதை அவள் உணர்ந்தாள். கண்ணுயிரம் பிள்ளை வீட்டுக்குப் போய், அவரை நமஸ்கரிக்க வேண்டு மென்று அவள் துடிதுடித்தாள். இதற்குச் சகாயமாக, ஒரு பண்டிகை நாள்; லோகநாயகியம்மாள், வீடேறி வந்து, அழைத் தாள். ஆனுல், மீனுட்சியுடன் பார்வதி அம்மாள் அவர் வீட்டுக் குப் புறப்படும்பொழுது வீராசாமி பிள்ளை தடுத்தார்.

"எனக்குத் தாலிப் பிச்சை போட்ட புண்ணியவான் வீட் டுக்குப் போகக் கூடாது என்கிறீர்களா? ஏதாவது நேர்ந்திருந் தால் என் கதி என்ன ஆகும்? என் குழந்தைகளின் கதி என்ன ஆகும்?" என்று அழுதாள்.

பிறகு, "நான் போய்த்தான் தீருவேன், உங்களுக்கு முன் நானே செத்துவிடுகிறேன், பாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே, மீனுட்சியுடன் போய்விட்டாள்.

வீராசாமி பிள்ளை, உடம்பு எரிச்சல் எடுக்க, வாய்திறவாமல் உட்கார்ந்து கிடந்தார்.

வழக்கம்போல் விடுமுறைக்கு மாதவன் வந்தான்; பாளை யத்தோடு நாலைந்து தினங்கள் அலைந்து திரிந்தான். இந்தத் தடவை அவ்விருவர்களின் முகத்திலும் உற்சாகம் இல்லாததை லோகநாயகியம்மாள் கவனித்தாள். ஆனுல் வருத்தப்பட்டாளே தவிர, அவள் அவர்களை ஒரு விசாரணையும் செய்யவில்லை. சில தினங்களுக்குப் பிறகு, தன் பிராண சிநேகிதன் முத்துசாமி யுடன் விடுமுறையைக் கழிக்க வாக்களித்தபடியால், அங்கே போக வேண்டுமென்று மாதவன், தன் பெற்ருேர்களிடம் விடை பெற்றுக்கொண்டு போய்விட்டான்.

ஜன வாக்கு, தெய்வ வாக்கு என்னும் பழமொழியின் உண்மை, நிச்சயம் ஆகிக்கொண்டே வந்தது. அந்த வருஷமும் மழை இல்லை. புல் முளைப்பதற்குப் போதுமான தூற்றல் விழுந்ததென்றே சொல்லவேண்டும். ஆனால், அச்சொற்ப மழைக்கும் ஏரி, கால் பங்கு நிரம்பிவிட்டது. ஒரு மாதத்துக்கு எஞ்ஜினை ஓட்டாமல் காலத்தைத் தள்ளலாமென்று வீராசாமி பிள்ளை, சந்தோஷப்பட்டுக்கொண்டார். ஏரியிலிருந்த நீரெல்லாம் அவரையே சேர்ந்ததல்லவா? தானியங்களின் விலை, உச்ச நிலையை அடைந்துவிட்டது. வீராசாமி பிள்ளை, பொன்னை அறுப்பு அறுத்தார் என்று ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அவர் கனவிலும் எதிர்பாராத தனத்தைச் சேர்த்துவிட்டார். ஆனால், ஏழை மக்கள், 'எட்டி பழுத்தால் என்ன? இடாதார் வாழ்ந்தால் என்ன?' என்று அவரைப்பற்றி இகழ்ச்சியாகவே பேசிக்கொண்டனர்.

காலத்தின் போக்கை யாரால் தடுக்க முடியும்? மற்றும் ஒன்றரை வருஷம் கழிந்துவிட்டது. மாதவனும் முத்துசாமியும் டாக்டர் பரீட்சையில் சிறப்புடன் தேறி, தொழிலை நடத்தும் முறையைக் கைவரச் செய்து, கற்றுக்கொண் டிருந்தனர். தங்களால் எவ்வித ரண சிகிச்சையையும் செய்ய முடியுமென்ற தைரியம் வந்துவிட்டது. முத்துசாமி, நகரத்திலேயே தொழிலைத் துவக்குவதாக ஏற்பாடு செய்துகொண்டான். மாதவன், கிராமத்தில், தான் செய்ய நினைத்த காரியங்களைச் செய்தே தீருவதாகச் சபதம் செய்தான். அவன் காத்திருந்ததெல்லாம் ஒரே ஒரு பட்டத்து மழைக்காகத்தான்.

ஜனங்களின் நம்பிக்கை வீண் போகவில்லை. / ஏழு வருஷத்துப் பஞ்சம் முடிவுக்கு வந்துவிட்டது. ஆடிப்பட்டத்திலேயே, அதனுடைய சின்னங்கள் புலப்பட்டன. பிறகு மழை, பெய்ய வேண்டிய தருணத்தில், சரமாரியாகப் பெய்து, தள்ளிவிட்டது! ஏரி, குளம், குட்டைகள் எங்கும் நிரம்பிவிட்டன. அவனவன், தன் சக்திக்குத் தக்கவாறு, நிலத்தை உழுது பயிரிட ஆரம்பித்தான்.

ஏரி, நிரம்பிக் கொந்தளித்துக்கொண்டிருந்தது. கையிலோ எஞ்ஜினும் இருந்தது. வீராசாமி பிள்ளையின் சாகுபடிக்கு என்ன தடை? கண்ணுயிரம் பிள்ளையுடைய நாற்பது ஏகராக்கள், தம்முடைய முப்பது ஏகராக்கள், இவ்வளவிலும் சேர்ந்தாற் போல் நெல்லைப் பயிரிட்டார். பயிர் செழித்துப் பச்சை கட்டி, காற்றில் வெண்சாமரம் வீசின. 'அக் காட்சியைக் கண்டாலே பசி தீரும்!' என்று ஜனங்கள் பேசிக்கொண்டனர்.

எவ்வளவு வேண்டாமென்று நினைத்தாலும் விளைச்சலின் வனப்பு, பாளையத்தின் கால்களை ஏரிப்பக்கம் இழுக்கத்தான் இழுத்தது.

திருடனுக்குத் தெரியும் திருட்டுப் புத்தி என்பதுபோல், தன் பாடத்தைத் தனக்கே எவனாவது படிப்பித்து விடுவானோ என்ற பயம், வீராசாமி பிள்ளைக்குப் பிடித்துக்கொண்டது. மதுரையைப்போல் ஒருவன் இல்லாமல் போய்விட்டானே என்று ஏங்கினார். இருந்தாலும், இரவு, பகல் பார்க்காமல் நினைத்த வேளையில் சுப்பனை இழுத்துக்கொண்டு, அவர், நிலத்தைச் சுற்றிச் சுற்றி வந்தார்.

"ஏண்டா சுப்பா, இந்தச் சேரிப் பயல்கள் மாட்டைவிட்டு மேய்த்துவிடுவார்களா?" என்று அவர் பயந்தபடியாகக் கேட்டார்.

"அவங்க ஏன் செய்யறுங்க, யசமான்?"

"இல்லையடா, அங்கே ரொம்பத் துணிச்சல்காரர்கள் சில பேர் இருக்கிறார்கள். வம்பு எதற்கு? ஏரிப் பக்கமே வரக் கூடாதின்னு, மாட்டுக்காரப் பயல்களை மிரட்டேன். அது உனக்குக் கையால் ஆகாது."

"ஏன் ஆவாது? நான் பாத்துக்கிறேன், யசமான். நீங்க கவலைப்படாதிங்க. விளைச்சலுலே மேய்க்கிற ஆள் இருக்காறு?" என்றான் சுப்பன்.

அன்றிரவு சுப்பன் தனக்கு வேண்டியவர்களை, ஏரிப் பக்கம், மாடுகளை ஓட்டிக்கொண்டு வர வேண்டாமென்று கேட்டுக்கொண்டான். அதற்கு எல்லோரும் ஆக்ஷேபித்தனர்.

"ஏன் அண்ணே, பெரிய பண்ணைக்காரர் நிலத்தைத்தான் கட்டிக்கிட்டான். பொறம்போக்கையுமா விலைக்கு வாங்கிட்டான்?" என்றான் மாடு மேய்ப்பவர்களில் ஒருவனான வலையபட்டியான் மகன்.

"அடே என்னாத்துக்கடா, வம்பு? என் பிழைப்பிலே மண்ணைப் போடாதீங்க. இப்போ மேயறதுக்குப் பில்லா இல்லை?" என்று சுப்பன் கேட்டுக்கொண்டான்.

மறுநாள், மாலை சுமார் நாலு மணிக்கு வீராசாமி பிள்ளை, தம் வயல்களைச் சுற்றிப் பார்வையிட்டுக்கொண்டு வந்த பொழுது, வலையபட்டியான் மகன், தன் மாடுகளையும் கூலிக்கு மேய்க்கும் சில மாடுகளையும், ஏரிக்கும் அவருடைய நிலத்துக்கும் இடையிலுள்ள புல்லாந் தரையில் மடக்கிப் போட்டிருந்ததைக் கண்டார். அவருக்குக் கோபம் வந்தது. "ஓட்டுடா, மாடுகளை!" என்று அவர் அவனை அதட்டினார்.

ஆனால், வலையபட்டியான் மகன், கேட்காதவன்போல் மேயும் மாடுகளைக் கவனித்தவாறு நின்றான். வீராசாமிபிள்ளைக்குக் கோபாவேசம் வந்துவிட்டது. "அடே கழுதை! ஓட்டென்று சொல்கிறேன், நிற்கிறாயா?" என்று கூவினார். அதையும் அவன் சட்டை செய்யவில்லை.

"அடே, அப்பாலே ஓட்டேண்டா!" என்றான் சுப்பன்.

"ஊம், உங்க நிலத்துலே மேஞ்சால், நீ கேளு" என்றான் அந்தப் பையன்.

வீராசாமிபிள்ளையால் கோபத்தை அடக்கமுடியவில்லை. விரைந்து சென்று, அவன் கன்னத்தில் பளீர் என்று ஓர் அறை விட்டார். வலி பொறுக்க மாட்டாமல் சேரியில் தன் நண்பர்களிடம் வெகு சகஜமாக வழங்கும் ஒரு திட்டு வார்த்தையைக் கோபத்தோடு சொன்னான். மறு நொடியில், பிள்ளை அவனைக் கீழே தள்ளிக் காலால் எட்டி உதைத்தார். ஒரு சிறு செடியின் காய்ந்த கட்டை, அவன் நாசித்துவாரத்தில் பலமாகக் குத்தி, அவன் முகத்தை ரத்தமயம் ஆக்கியது.

## 16

அன்று இரவு சற்று ஜாக்கிரதையாய் இருக்க வேண்டுமென்று வீராசாமிபிள்ளைக்குப் பட்டது. முரடர்கள் ஆத்திரத்தில் இயன்றவரையில் பயிரைப் பாழாக்க யத்தனிக்கலாமென்ற சந்தேகமும் பிறந்தது. ஆகையினாலே, அன்றிரவு அவரும் சுப்பனும் தூங்காமல் காவல் காக்க வேண்டுமென்று நிச்சயித்துக் கொண்டார்கள்.

சுப்பன் மாடுகளை ஓட்டிக்கொண்டு, ஊரில் நுழைந்ததும், அவனை ஒரு கும்பல் சூழ்ந்துகொண்டது. அடிக்காத குறைதான். நல்ல காலமாக வலையபட்டியான் வீட்டில் இல்லை.

"இப்போ என்னடா மிஞ்சிப் போச்சு. உதைக்கு உதை கொடுக்கவேண்டியதுதான்!" என்றான் மற்றொருவன்.

இப்பொழுது, அங்கே வந்த பாளையத்தை நியாயம் தீர்க்கும்படி எல்லோரும் கேட்டுக்கொண்டனர். "சின்னப் பண்ணைக்காரன் செஞ்சது நியாயமின்னு எவன்தான் சொல்லுவான்? ஆனால் ஆத்திரத்திலே, தடாபுடான்னிட்டு ஒண்ணைச் செஞ்சிட்டால், அப்புறம் அது நமக்கே வினையாகும். அட, அந்த ஆளுக்குப் பணம் இருக்குது. இந்தக் காலத்துலே எதுக்கும் பணம் தானே பேசுது? ஆனால், எங்க அய்யா சொல்றது வீணாய்ப் போகாது. கடைசியிலே, சத்தியந்தான் ஜெயிக்குமின்னு வச்சுக்க. நான் இப்போ அய்யாகிட்டேத்தான் போய்க்கிட்டு இருக்கேன். அவர் என்ன சொல்றாரோ, பார்க்கலாமே!" என்று பாளையம் கண்ணையிரம் பிள்ளையின் வீட்டுக்குப்போனான்.

கண்ணையிரம் பிள்ளைக்கு வீராசாமிபிள்ளையின் நடவடிக்கை அருவருப்பைக் கொடுத்தது. எனினும், ஒருவரும் முரட்டுத்தனமாக நடந்துகொள்ளாதபடி அவர் பாளையத்தைப் பார்த்துக்கொள்ளச் சொன்னார்.

"பயிரைப்பற்றி இப்படி யாராவது பயப்படுவார்களோ? அது என்ன, கதவை மூடிப் பூட்டி வைக்கும் சாமானா?" என்று அவர் சிரித்தார்.

"ஆனால் பயிர் கறு கறுன்னு ரொம்பச் செழுமையாய்த் தான் இருக்குதுங்க. அதைப் பார்க்கணுமின்னே, தினம் அந்த வழியாய்ப் போறேன்!" என்றான் பாளையம்.

"அப்பொழுது, நானும் பார்த்துச் சந்தோஷப்பட வேண்டியதுதான்னு சொல்லு."

"நீங்க கட்டாயமாய்ப் பாக்கணும், யசமான். நாளைக்கு நாமதானே அதைப் பயிரிடணும்?" என்று அவன் சொன்ன பொழுது, கண்ணுயிரம்பிள்ளை அவன் முகத்தை உற்றுப் பார்த்தார். நஞ்சை நிலம் கைவிட்டு விலகியதிலிருந்து, பாளையத்துக்கு அடிக்கடி இந்தப் பிரமை வந்துகொண்டிருந்தது என்பது பிள்ளையின் அபிப்பிராயம். அது பாளையத்துக்கு மாத்திரம் தெரியாதா? சோகம் படர்ந்த முகத்தோடு அவன் மௌனமாக நின்றான்.

அன்றிரவு, வீராசாமிபிள்ளையும் சுப்பனும் விளக்கும் கையுமாய் விளைச்சலைச் சுற்றிசுற்றி வந்தனர். கோழி கூவிய பிறகு தான் அங்கிருந்த கொட்டகையிலேயே படுத்து, மெய்ம்மறந்து உறங்கினர்.

**வி**டியும் தருணம். பனியோடு இருட்டுத் திரையும் லேசாக மூடிக்கொண்டிருந்தது. ஒரு கஜ தூரத்துக்கு அப்பால் இருந்தவற்றைத் தெளிவாகக் காண முடியாது. இவ் வேளையில், கைகால் அலம்ப ஏரிகரைக்கு வந்த கண்ணுயிரம் பிள்ளை, ஒரு நொச்சிச் செடிப் பக்கமாகச் சென்றார். மறு கணத்தில், எவனோ ஒருவன் முதுகில் உதைக்கவே, 'கடவுளே!' என்று உருண்டு, ஏரித் தண்ணீரில் விழுந்தார். அக்குரலைக் கேட்ட மாத்திரத்தில் உதைத்தவன், "ஐயோ, யசமான்!" என்று கதறிக்கொண்டு, ஏரியில் குதித்து, கண்ணுயிரம் பிள்ளையைத் தூக்கி வாரித் தோளில் போட்டுக்கொண்டு மெல்லக் கரை ஏறினான். பிறகு அவருடைய கால்களில் விழுந்து, "தெரியாத்தனமாய்ச் செஞ்சிட்டேன், யசமான். வீராசாமி பிள்ளையின்னு நினைச்சிட்டேனே? என் கால் புழுத்துத்தான் போகப் போவுது! ஐயோ! யசமான்! யசமான்!" என்று அழ ஆரம்

பித்துவிட்டான். ஆனால் கண்ணையிரம்பிள்ளைக்குக் குளிரால் நடுக்கம் எடுத்துக்கொண்டது. "இ ..இந்த வேலே வே...வேண்டாமென்று நான்—அ...அடித்துக்கொள்ள வில்லையா? நீ—யா—யாரடா?"

"வலையபட்டியான், யசமான்! வயிறு வீங்கிச் சாக இருந்த பிள்ளையைக் காப்பாத்தினீங்களே! பாவி!, நான் உங்களை உதைக்கிறதுக்கா?" என்று, அவன், முகத்தில் அடித்துக் கொண்டு அழுதான். பக்கத்துத் தோப்பில் சிலர், இலைச் சருகுகளைக் குவித்துத் தீமூட்டி, குளிர் காய்ந்துகொண் டிருந்ததைக் காணவே, "அதோ, குளிர் காயருங்க, வாங்க யசமான், போகலாம்" என்று அவரைக் குழந்தைபோல் சுமந்துகொண்டு போனன்.

தீயின் ஒளியில் அவர் தேகத்தில் கற்களால் உண்டான காயங்களைப் பார்த்தான்.

"அய்யய்யோ! மூலேக்கு மூலே அடிபட்டுடுச்சுங்களே!"

"அடே, வீராசாமியின் பயிரைப் பார்க்க வேண்டுமென்று வந்தேன். ஆனது ஆகிவிட்டது. பயிரைப் பார்த்துவிட்டுப் போகிறேனடா."

"வாணும், யசமான். பாக்கப் போகையிலேயே, இவ்வளவு துன்பம் வந்தால், பாத்துவிட்டால் அப்போ என்ன ஆகுமோ!" என்றன் அவன்.

"போடா, பைத்தியக்காரா! சரி, வா என்னேடு" என்று அவனை அழைத்துக்கொண்டு, கண்ணையிரம் பிள்ளை தம் வயலுக்குப் போனர். வழியில், வலையபட்டியான், மறுபடியும் அவருடைய கால்களைப் பிடித்துக்கொண்டான்.

"யசமான் இதைப்பத்திப் பாளைய மாமன்கிட்டே இப்போ சொல்லவாணுங்க! மாமன் என்னை அடிச்சிப் பிடுவாருங்கிற பயம் இல்லையிங்க. இப்போ அவருக்கு மனம் நொந்து போயிருக்குதுங்க. இதைக் கேட்டால் அவர் உயிரு துடிச்சுப் போவுமுங்க; நேத்துப் பையன் அடிபட்டு வந்தப்போ, நான் இல்லே. அவர் வந்து எவ்வளவு அன்பாப் பாத்துக்கிட்டார்! உங்களுக்

குத் தெரியாதுங்க" என்று வலையபட்டியான் குழந்தைபோல் விம்மத் தொடங்கிவிட்டான்.

**ஏ**ரிகரையில் குளிர் காய்ந்துகொண்டிருந்த வாலிபர்கள், வீராசாமி பிள்ளையால் கண்ணாயிரம் பிள்ளைக்கு ஏதோ தீங்கு நேர்ந்ததென்றும், அதிலிருந்து, அவரைச் சுமந்து வந்தவன் காப்பாற்றினானென்றும் நம்பினார்கள். இந்தப் பேச்சு, முதலில்சிறுவர்களிடத்திலேயே பரவியது. வீராசாமி பிள்ளையின் மகன் சீக்காய்க் கிடந்தானென்றும், அவனுக்குக் கண்ணாயிரம் பிள்ளை மருந்து கொடுக்க மறுத்துவிட்டாரென்றும், அதனால் வீராசாமி பிள்ளை, அவரை இம்சை செய்தார் என்றும் ஒரு போக்கிரிப் பையன் மற்றொரு வதந்தியைக் கிளப்பிவிட்டான். இதற்கு ஏற்றபடி, பாலனும் இரண்டு தினங்களாக விளையாட வர முடியாமல் வயிற்று வலியால் தவித்துக்கொண்டிருந்தான்.

இந்தக் கூத்தில் அன்று பிற்பகல் வண்டியில் மாதவன் தன் தோழன் முத்துசாமியுடன் ஊருக்கு வருவதாக எழுதியிருந்தான்.

முகத்திலிருந்த இரண்டு, மூன்று காயங்களுக்கு மருந்தைத் தடவிக்கொண்டு, கண்ணாயிரம்பிள்ளை, வந்த நோயாளிகளுக்கு வழக்கம்போல் மருந்துகளை வழங்கிக்கொண்டிருந்தார். கேட்டவர்களுக்கு, அவர் ஏரியில் கால் தவறி விழுந்ததால் சிறிது அடி பட்டுவிட்டதென்று தருமசங்கடத்தோடு பொய்யைச் சொல்லி வைத்தார்.

அப்பொழுது தெரு வழியே போய்க்கொண்டிருந்த அருணாசலம், கண்ணாயிரத்தைக் கண்டதும், வந்து திண்ணையில் உட்கார்ந்தார்.

"சங்கதி தெரியுமா, அண்ணா?" என்று அவர் கண்ணாயிரம் பிள்ளையைக் கேட்டார்.

"என்ன, அப்பா?"

"இரண்டு நாளாய் அந்தப் பையன் பாலன், வயிற்று வலியால் துடிக்கிறான். வீராசாமி, வெந்நீர், விளக்கெண்ணெய்

என்று சொந்த வைத்தியம் செய்கிறார். அது ஒன்றும் பலிக்க வில்லை.''

''அட, பாவமே! என்னிடத்தில் சொல்லக்கூடாதோ?''

''அவ்வளவு எளிதாய்ச் சொல்லிவிட்டால், அவன் பெயர் வீராசாமி ஆகுமா! புருஷனுக்கும் மனைவிக்கும் ஒரே சண்டை!''

''அட, பைத்தியக்காரா! சரி. நானே போகிறேனே'' என்று எழுந்தபோது ஒரு பையனைக் கையில் பிடித்துக் கொண்டபடி ஒரு பெண் பிள்ளையும், அவளுக்குப் பின் நான்கு ஸ்திரீகளும் ஒரு கிழவனும் அவரை நோக்கி வந்தார்கள்.

வந்தவள், கும்பிடு போட்டு, ''யசமான், இது என் மக னுங்க. நான் வலையபட்டியாரு பெண்ஜாதி. இந்தக் குழந் தையை நேத்துச் சின்னப் பண்ணைக்காரரு அடிச்சு, கீழே தள்ளி, காலாலே மிதிச்சு, மூஞ்சியெல்லாம் ரத்தம்! மூக்கு எப்படி வீங் கிக் கிடக்குது, பாருங்க யசமான்! கேள்வி முறையில்லையா? இந்த நாயத்தை நீங்கதான் தீக்கணுமுங்க'' என்று முறையிட்டாள்.

கண்ணுயிரம் பிள்ளை மோவாய்க்கட்டையைச் சொறிந்து கொண்டார்.

''நேற்று இதைப்பற்றிப் பாலையத்தண்டை பேசினேன். அம்மா நடந்தது நடந்து போய்விட்டது...''

''இப்படியே நடந்துக்கிட்டுதான் இருக்கும், யசமான். இப்போ அந்தப் புண்ணியவான் ஒரு வழி சொல்லியாவணு மிங்க. இல்லாட்டி நான் பொல்லாதவளாய் இருப்பேன். ராமா புரம் போய், போலீசிலே எழுதி வச்சிடறேன்.''

''அட, பைத்தியக்காரி! இதுக்கெல்லாமா, போலீஸும் கோர்ட்டும்? உனக்கு விஷயம் தெரியாது. நீ வாய்தாவுக்கு அலையறதுக்குள்ளே உன் தாவு தீர்ந்து போய்விடும். நமக்குள் ளேயே சரிப்படுத்திக்கொள்கிறதா?''

''நான் வாணுமின்னு சொல்றேன்? அவருக்கு அபராதத் தைப் போடுங்க!''

''வழி செய்யத்தான் வேண்டும். வீராசாமி செய்தது பிசகு தான்; நான் ஒப்புக்கொள்கிறேன். அவன் அபராதம் கொடுக்க

வேண்டியதுதான். கொஞ்சம் பொறு, நான் கட்டாயம் ஏற்பாடு செய்கிறேன்'' என்று கண்ணுயிரம்பிள்ளை சொல்வதைக் கேட்டுக்கொண்டு, சுப்பன் அங்கே வந்தான். "இதோ, இந்தப் புண்ணியவான், அவர் குழந்தையை அடிக்கையிலே வேடிக்கை பாத்துக்கிட்டு இருந்தாரு'' என்று வலையபட்டியான் மனைவி, அவன்மேல் எரிந்து விழுந்தாள்.

''எங்கடா வந்தாய்!''என்று கண்ணுயிரம் பிள்ளை கேட்டார்.

"யசமான், நீங்க இருக்கீங்களான்னு பாத்திட்டு வரச் சொன்னுரு.''

''இருக்காமல் எங்கே போவார்?'' என்ருர் அருணுசலம்.

"நாம் போய்ப் பார்க்கலாமே?" என்ருர் கண்ணுயிரம்.

"நீங்கள் உட்காருங்கள், அண்ணு! வரட்டுமே. சரி, இருக்கார்ன்னு சொல்லு, போ" என்று சுப்பனை அருணுசலம் துரத்திவிட்டார். அதன் பிறகு, நல்ல வார்த்தை சொல்லி, வலையபட்டியான் மனைவியையும் கண்ணுயிரம்பிள்ளை அனுப்பி வைத்தார்.

சுப்பன், வீராசாமியின் வீட்டுக்குப் போனதும் பாடம் ஒப்பித்தான்.

"கேட்டியா? எனக்கு அபராதம் போடுகிருணும்! அவன் வீட்டுக்கு நான் எப்படிப் போவேன்!" என்ருர் வீராசாமி பிள்ளை, தம் மனைவியைப் பார்த்து.

''நீங்கள் செய்த காரியத்துக்கு அபராதமும் போடவேண்டும்; இன்னென்றும் செய்யவேண்டும்! நம்ப குழந்தையின்ஞல், நம்ப மனம் எப்படி அடித்துக்கொள்கிறது! அப்படித்தானே அவனுக்கும் இருக்கும்! நமக்கு ரோஷம் வேறு!—போங்கள், அண்ணுவைக் கையோடு அழைத்து வாருங்கள்.''

வீராசாமி பிள்ளை தயங்கினுர்; பாலனைப் பார்த்தார். அவன் படும் கஷ்டத்தை அவரால் சகிக்க முடியவில்லை. தம் மனைவியின் மனம் இன்னும் பதின் மடங்கு அதிகமாகத் துக்கப்படுவதை அவர் உணரவில்லையா? புத்திர வாத்சல்யமும் மனைவியின் மனமும் அவருடைய அகம்பாவத்தை ஒடுக்கின. "பார்வதி, நீயே போய்விட்டு வந்துவிடேன்'' என்று அவர் கெஞ்சினுர்.

## 17

பார்வதி அம்மாள் கண்களைத் துடைத்துக்கொண்டு, கண்ணையிரம்பிள்ளையின் வீட்டுக்கு வந்தாள். அவள் வாய்ச் சொல் வருவதற்கு முந்தியே, "என்ன அம்மா, பாலனுக்கு இரண்டு நாளாக உடம்பு சரியாயில்லையாமே? இப்போதான் அருணாசலம் சொன்னான். தெரிந்தால் வந்திருக்கமாட்டேனா?" என்று விசாரித்தார் பிள்ளை.

"செய்த பாவம் யாரை விடும், அண்ணா? குழந்தை புழு வாய்த் துடிக்கிறான். அது என்ன வயிற்று வலியோ? கடவுளுக் குத்தான் தெரியும்! உங்களைத் தலையெடுத்துப் பார்க்கக்கூடக் கூச்சமாக இருக்கிறதே!"

"நீ ஒரு பைத்தியம்! மனிதனுக்கு மனிதன் என்ன செய்ய முடியும்? எல்லாம் ஈசன் செயல்" என்று சொல்லிப் புறப்பட்டார்.

கண்ணையிரம்பிள்ளை, பாலனைப் பரிசோதித்துப் பார்த்தார். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. மந்தம் இல்லை. ஆனால் அவனுக்கு வயிற்று வலி மாத்திரம் மிகக் கொடுமையாக இருந்தது என்பதை உணர்ந்தார். பாலு, தன் வயிற்றைத் தொடவே விடவில்லை. யோசித்து, யோசித்து அவர் அவனுடைய அடி வயிற்றைக் கவனித்தார். "ஹா ஹா!" என்று புலன் கிடைத்து விட்டதுபோல் சொல்லிக்கொண்டார். அவருடைய முகத்தில் கவலை படர்ந்தது.

வீராசாமிபிள்ளை, திருதிருவென்று விழித்தார். "இது என்ன நோய், அண்ணா?" என்று பார்வதி அம்மாள் சஞ்சலத்தோடு கேட்டாள்.

"நான் என்ன சொல்வேன்?" என்று சொல்லும்போதே, எக்கச்சக்கமான இடத்தில் அடிபட்டுச் செத்த ஒரு தச்சன் அவருடைய நினைவுக்கு வந்தான். இந்த வியாதிக்கு அவரிடமிருந்த மருந்து ஒன்றுதான். அது கெச்சக்காயிலிருந்து வடித்த தைலமும், அச்செடியின் வேரிலிருந்து தயாரித்த சூரணமும்

தான். இம் மாதிரியான ஒரு சந்தர்ப்பத்தில் அந்த மருந்து, வேலை செய்யாமல் போய்விட்டது. இப்பொழுதும் பலிக்குமோ பலிக்காதோ என்ற சந்தேகம் வந்துவிட்டது. வேறு வழியில்லாமல் ஆண்டவனைத் துதித்து, அவன்மேல் பாரத்தைப் போட்டு, சூரணத்தைத் தேனில் குழைத்து, உள்ளுக்குக் கொடுத்தார். பிறகு, தைலத்தை அடிவயிற்றிலிருந்து தடவ வேண்டிய இடம் வரையில் மேலாக ஊற்றி, தடவி விடப் பார்த்தார். ஆனால், பையன் இடம் கொடுக்கவில்லை. சித்திரவதை செய்யப்படுவதுபோல் கத்தினான். கடவுளைப் பஜித்தவாறு கண்ணுயிரம்பிள்ளை உட்கார்ந்திருந்தார். வீராசாமிபிள்ளைக்கும் பார்வதி அம்மாளுக்கும் திகில் எடுத்துக்கொண்டது. மீனாட்சி, அழ ஆரம்பித்துவிட்டாள்.

“அய்யய்யோ! அண்ணா! பாலுவை நீங்கள் எப்படியாவது காப்பாற்ற வேண்டும். இன்னொரு தடவை மருந்தைக் கொடுங்களேன்!” என்று வீராசாமிபிள்ளை கதற ஆரம்பித்துவிட்டார். “பார்வதி! இது பொல்லாத நோய் ஆச்சுதே!” என்று தன் மனைவியின் கைகளைப் பிடித்துக்கொண்டார். அவருடைய கர்வமும் ஆணவமும் காற்றாய்ப் பறந்துவிட்டன. வீடெல்லாம் ஒரே அழுகைச் சத்தம்.

“வீராசாமி, பயப்படாதே! கடவுளை வேண்டிக்கொள். அவரைச் சரணம் அடைந்தவர்களை ஒருநாளும் கைவிடமாட்டார்!” என்று கண்ணுயிரம்பிள்ளை தைரியம் ஊட்டினார்.

வீராசாமி பிள்ளையின் குடும்பத்தாருக்குக் கண்ணுயிரம் பிள்ளை, தேறுதல் சொல்லிக்கொண்டிருந்த அதே சமயத்தில் மாதவனும் முத்துசாமியும் ரயில்வண்டியிலிருந்து இறங்கினார்கள். ஆளுக்கு ஒரு பெரிய தோல் பையுடன், அவர்கள், தங்களுக்காகக் காத்திருந்த மாட்டுவண்டியில் ஏறப் போனபொழுது, காலையில் குளிர் காய்ந்துகொண்டிருந்த வாலிபர்களில் ஒருவன் விரைந்து வந்து, “மாது, இன்றைக்கு உங்கப்பா பிழைத்ததே அரிது! அந்த வீராசாமி யாரையோ விட்டு, அடிக்கச் சொன்னான்போல் இருக்குது. காலையிலே இன்னும்

இருட்டுக்கூடச் சரியாகக் கலையவில்லை. நாங்கள் மாந்தோப்பில் குளிர் காய்ந்துகொண் டிருந்தோம். அப்போ, தண்ணீர் சொட்டச் சொட்ட ஒரு ஹரிஜன், நல்லவன், பாவம்! தூக்கிக் கொண்டு வந்து, தீப்பக்கத்துலே வைத்து, உடம்புலே சூடு ஏறினப்புறம், வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனான். அப்படியே ஏரியிலே விழுந்துவிட்டாராம்'' என்றான்.

மாதவனுக்கு உடம்பெல்லாம் வேர்த்துவிட்டது. முகத்தைத் துடைத்துக்கொண்டு, ''நல்ல அடியா? எழுந்திருக்க முடியவில்லையா?'' என்று கேட்டான்.

''சே, சே! அதெல்லாம் ஒன்றுமில்லை. அவரே நடந்து போனார். தினம்போல மருந்து கொடுத்துக்கொண் டிருந்தார். ஆனால் உடம்பெல்லாம் சிலிர்த்து இருக்குது'' என்று அவன் சொன்னதும் மாதவனுக்கும் போன உயிர், திரும்பி வந்தது. ''நல்லது, நான் போய் வருகிறேன், அப்பா'' என்று வண்டியில் ஏறிக்கொண்டான்.

''அவன் ஒரு 'கட்-த்ரோட்' போல் இருக்குது, மாது. காலைக் கையை ஒடித்துப் போடு!'' என்றான் முத்துசாமி.

''இன்றைக்குச் செய்துவிடுகிறேன்! எல்லாம் எங்கப்பா வாலேதான் வருகிறது. மகாத்மா காந்திக்கு இவரே வாரிசு என்று எண்ணிக்கொண் டிருக்கிறார்!''

''அவரை ஒன்றும் சொல்லாதே, மாது! அவரைப்போல இவர் இல்லாவிட்டால், காந்தியின் தத்துவமே அடியோடு மறைந்துபோகும்.''

''ஆமாம்; ஏ, வண்டிக்காரா! வேகமாய் ஓட்டு. வீராசாமி பிள்ளை வீட்டு வாசலிலே நிறுத்திக்கொள். முத்து, இன்றைக்கு வந்தது வரட்டும். அவனுக்கு இரண்டு கொடுக்கத்தான் போகிறேன்.

''வீட்டிலேயா? மீனா இருப்பாளேடா!''

''உனக்கு விளையாட்டாக இருக்கிறது'' என்றான் மாதவன், புன்முறுவலை அடக்க முடியாமல். ''தாடி பற்றி எரிகிறபோது, சுருட்டுக்கு நெருப்புக் கேட்ட மாதிரிதான்'' என்றான்.

வீராசாமி பிள்ளையின் வீட்டு வாசலுக்கு வந்ததும், மாதவன் வண்டியிலிருந்து குதித்தான். வீட்டில் அழுகைக் குரல் பலமாக இருப்பதைக் கேட்டுப் பிரமித்தான்; உள்ளே நுழைந்ததும், "அத்தான்! அத்தான்! பாலுவைப் பார் அத்தான்!' என்று மீனு கதறினாள். மாதவன் அங்கிருந்த அலங்கோலத்தைக் கவனித்தான். தன் தகப்பனாரின் முகத்தில் மருந்து பூசியிருந்த இரண்டொரு இடங்களையும் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. பாலனுக்கு அவர் சிகிச்சை செய்துகொண்டிருந்தார் என்பதையும் உணர்ந்தான்.

"அப்பா, இந்தத் தருமராஜன் இன்று காலையில் ஆளை விட்டு அடிக்கச் சொன்னாரா?"

"அய்யோ! அய்யோ!" என்று வீராசாமிபிள்ளை வாயில் அடித்துக்கொண்டார்.

"நீங்கள் ஏரியில் விழுந்தது நிஜந்தானே? அதோ, நீங்கள் மூடி வைத்தாலும் காயம் தெரிகிறதே? என்ன, வாயைத் திறக்க மாட்டேன் என்கிறீர்களே! உங்களை ஒரு ஹரிஜன் காப்பாற்றியது, சுமந்து கொண்டு வந்து குளிர்காய வைத்தது, எல்லாச் சமாசாரமும் எனக்கு வந்துவிட்டது!"

"எல்லாம் உண்மைதான். என்னை வேண்டுமென்று யாரும் அடிக்கவில்லை. பாவம், வீராசாமிக்கு இந்த விஷயமே தெரியாது!" என்றார் கண்ணையிரம்.

"ஏன் அப்பா, மூடி வைக்கிறீர்கள்?"

"மாது! எனக்கும் கோபம் வரும். வீராசாமிக்கு இதைப் பற்றி ஒன்றுமே தெரியாது; உன்னிடம் நான் பொய் சொல்ல வேண்டுமோ?"

"ஐயோ, நான் ஒரு பாவத்தையும் அறியேனே! நேற்று இரவெல்லாம் நானும் சுப்பனும் பயிருக்குக் காவல் இருந்தோமே!" என்று வீராசாமி, பரிதாபமாகக் கைகளை விரித்தார்.

"மெய்தானுங்க, யசமான்" என்றான் சுப்பன்.

"குழந்தையைக் கவனிடா! வீராசாமி ஒன்றும் செய்யவில்லை என்று நான் சத்தியம் செய்யவேண்டுமா?" என்று

கண்ணுயிரம் பிள்ளை கோபத்தோடு சொன்னதும், "மன்னியுங்கள், அப்பா!" என்று மாதவன், தந்தையின் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக்கொண்டான்.

இந்தப் பேச்சுக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லாததுபோல், முத்துசாமி, பாலனைச் சோதித்துக்கொண்டே இருந்தான். பிறகு தன் அபிப்பிராயத்தை அவன் மாதவனிடம் சொல்லவே, மாதவன் பரபரப்புடன் பாலனைப் பல இடங்களில் தொட்டுப் பார்த்தான்.

"சரிதான், நீ செய்கிருயா, நான் செய்யட்டுமா?" என்முன் மாதவன். "நீயே செய், அவர்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்க வேண்டாமா?" என்முன் முத்துச்சாமி.

"சரி, அவர்கள் வேண்டாமென்முல், நிறுத்திவிடுகிறதா? மாமா, மாமி!" என்று மாதவன் அவர்கள் பக்கம் திரும்பினுன். "பாலுவுக்கு ஒரு சின்ன ஆபரேஷன் செய்தாக வேண்டும். எங்களால் முடியும். ஒரு கெடுதியும் வராது. செய்யாவிட்டால் ஆபத்தில் முடியலாம். அப்பாவின் மருந்து, இதற்குப் பலிக்காது. என்ன, அப்பா, நான் சொல்கிறது சரியா?"

"சரி. இல்லையென்று சொல்வேனு? வீராசாமி! யோசிக்காதே. பையன்கள் செய்யட்டும். இதனுடைய கொடுமை உனக்குத் தெரியாது" என்முர் கண்ணுயிரம் பிள்ளை.

"சரி, செய்துவிடு. குழந்தையை உன் கையில் ஒப்பித்துவிட்டேன்" என்று வீராசாமி பிள்ளை தயங்கியவாறு சொல்லிக்கொண்டே கண்ணைத் துடைத்துக்கொண்டார்.

"நல்ல வேளையாக இன்ஜெக்ஷன் மருந்தைக் கூடவே கொண்டு வந்தோம்" என்முன் மாதவன்.

"நாம்தான் நடமாடும் ஆஸ்பத்திரி ஆகிவிட்டோமே!" என்முன் முத்துசாமி.

"மீனு, வெந்நீர் கொதிக்கவைக்க வேண்டும்."

"கொதித்துக்கொண்டு இருக்கிறது, அத்தான்!"

"சரி, ஒரு பத்து நாளைக்கு நகராமல் இருக்க வேண்டும்; கட்டிலை அந்த ஜன்னல் ஓரமாகப் போடலாமே?"

"ஐயோ, வலிக்குமே, அத்தான்" என்று பாலன் அழுதான்.

"வலிக்கவே வலிக்காது; நீயே சொல்வாய், பார்" என்று பையனை ஒரே பலகையாயிருந்த கட்டிலில் படுக்க வைத்து, முதுகில் இன்ஜெக்ஷனை மாதவன் கொடுத்தான். பாலனுக்கு இருந்த வலி போய்விட்டது. பிறகு எல்லோரையும் அப்புறப்படுத்தி, சீக்கிரமாகவே இருவரும் தங்கள் வேலையை முடித்துவிட்டனர்.

இதற்குள் லோகநாயகியம்மாளும் அங்கே வந்துவிட்டாள். பார்வதி அம்மாளுக்கும் மீனாட்சிக்கும் அவள் தைரியம் சொல்லிக்கொண் டிருக்கும்பொழுது, மாதவனும் முத்துசாமியும் மலர்ந்த முகத்துடன் வெளியே வந்தனர்.

"இரவில் கொஞ்சம் வலி எடுக்கலாம். அப்பொழுது தூங்க மருந்து கொடுக்கிறேன். மாமி! நீங்கள் அவன் பக்கத்திலேயே இருங்கள். ஆனால் பேச்சுக் கொடுக்காதீர்கள். அம்மா, எங்களுக்கு ஏதாவது வைத்திருக்கிறாயா? நல்ல பசி" என்றான் மாதவன் புன்முறுவலுடன்.

"நான் காபி போட்டுத் தருகிறேன் அத்தான். போகாதே அத்தான்" என்றாள் மீனாட்சி.

"எங்களுக்குப் பசிக்கிறதே மீனா!"

"பலகாரமும் பண்ணித் தருகிறேன். இருக்கச் சொல், அத்தை" என்று அழாக் குறையாக, லோகநாயகியம்மாளிடம் மீனாட்சி சொன்னாள்.

"பலகாரம் செய்ய நேரமாகுமே அம்மா. குழந்தைகள், பசி என்கிறார்களே; சரி நீ காபி போடு, மீனா. நான் செய்த பலகாரங்களைக் கொண்டு வருகிறேன்" என்றாள் லோகநாயகியம்மாள்.

பிறகு அனைவரும் சிற்றுண்டியை வீராசாமி பிள்ளை வீட்டிலேயே வைத்துக்கொண்டனர். மாதவனுக்கும் முத்துசாமிக்கும் ஆப்பரேஷன் செய்தது ஒரு பெரிய காரியமாகத் தோன்றவில்லை. தாழ்ந்த குரலில் சிரிப்பும் விளையாட்டுமாக இருந்தார்

கள். பாலனுக்குத் தூக்கம் வரவே, பார்வதியம்மாளும் வந்து கலந்துகொண்டாள். வீராசாமி பிள்ளை, கண்ணுயிரம் பிள்ளை, அங்கே வந்திருந்த அருணுசலம் ஆகிய மூவரும் ஒரு புறமாக உட்கார்ந்திருந்தனர். கொடுத்த பலகாரத்தை மறுக்கப் பயந்துகொண்டு, வீராசாமிபிள்ளையும் தின்று வைத்தார். மீனுட்சி, ஆடி ஓடித் 'திரிவதையும், அவளுடைய முகத்தில் பிரகாசித்த ஒளியையும் வீராசாமி பிள்ளை கவனிக்காமல் இல்லை.

ஒரு வாரத்துக்குத் தினம் மாதவனும் முத்துசாமியும், பாலனை இரு தடவைகள் வந்து பார்த்து, சிகிச்சை செய்தனர். பாலனுக்கு முழுவதும் குணமாகிவிட்டது.

ஒரு நாள் வீராசாமிபிள்ளையும் பார்வதியம்மாளும் நிம்மதியாகப் பேசிக்கொண் டிருக்கும்பொழுது, "தினம் மாதுவும் முத்துசாமியும் எங்கே போகிருர்கள்? சாப்பாட்டு வேளை தவிர, வீட்டில் தங்குகிறதில்லையாமே?" என்ருள் பார்வதியம்மாள்.

"அவங்களுக்கு ஒரு காடு இருக்கிறதல்ல? அதை அழித்து, பயிரிடலாமென்று பார்க்கிருர்களாம். ஆனல், புஞ்சை தானியங்களைத்தான் போடலாம். இந்த வருஷம்போல் மழை பெய்தால் லாபம் கிடைக்கும்!"

"மழையை நம்பி, ஒரு வேலை செய்ய முடியுமா? மழை இல்லாததனுலேதான் அவருக்கு இவ்வளவு கஷ்டங்கள் வந்தன" என்ருள் பார்வதியம்மாள்.

"அவருக்கு வந்த கஷ்டங்கள் அவருடைய ஊதாரிச் செலவாலே! இந்தக் காலத்திலே நல்லதாவது பொல்லாதாவது! கடவுள், கடவுள் என்ருல் போதுமா? கடவுள் எல்லாருக்குந் தான் இருக்கிருர்" என்ருர் வீராசாமிபிள்ளை.

"உண்மைதான். நாளைக்குத் தனக்கு வேண்டுமே என்று அவர் யோசனை செய்தால் அல்லவா? என்ன சொன்னுலும், அவருடைய பெருந்தன்மை, பெருந்தன்மைதான்."

"பெருந்தன்மை காப்பாற்றுமா? மாதவன் சம்பாதிச்சாலொழிய அவருக்குப் பணம் வர வேறு வழி? ஆனுல்; அவன், வெகு கெட்டிக்காரன். அவன் கட்டாயம் சம்பாதிப்பான்.

புலிப்பாளையத்தார் சொல்கிறார். இந்த மாதிரிக் கேஸுக்கு 400, 500 வாங்கி விடுவார்களாமே!'' என்றார் வீராசாமிபிள்ளை.

''ஏன் வாங்க மாட்டார்கள்? உயிரைக் காப்பாத்துகிற தென்றால், சும்மாதானா? உங்களை அவனுடைய தகப்பனார் பிழைக்கவைத்தார். உங்கள் பிள்ளையை அவர் பிள்ளை காப் பாற்றி விட்டான். இவர்களுக்கு நாம் எவ்வளவு கடன் பட் டிருக்கிறோம்! அதை எந்த விதத்தில் தீர்த்துக்கொள்கிறது?'' என்றாள் பார்வதியம்மாள்.

''அதுதான் எனக்கும் தெரியவில்லை. துட்டுத் துக்காணி என்றால் கொடுக்க முடியாது...''

''ஆமாம்; உங்களுடைய துட்டுக்குத்தான் அவர்கள் காத் துக்கொண் டிருக்கிறார்கள்! இரண்டு வருஷம் போனால் இந்த ஊரையே அவன் விலைக்கு வாங்கிவிடுவான்.''

''அதையும் பார்க்கலாமே!'' என்றார் வீராசாமிபிள்ளை.

''சரி, போதும்.... மீனாவைக் கவனித்தீர்களா?''

''கவனித்துக்கொண்டுதான் இருக்கிறேன். ஆதியிலிருந்து அவள் ஏனோ அவன்மேல் உயிரை விடுகிறாள்!''

''அது ஒரு பிசகா? உங்களுக்கு இந்த எண்ணம் தகாது! குடும்பத்துக்கே உயிர்ப்பிச்சை போட்டவர்களை...'' என்று பார்வதியம்மாள் அழ ஆரம்பித்துவிட்டாள்.

''சரி, இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?'' என்றார் பெட்டிப் பாம்புபோல் அடங்கிவிட்ட வீராசாமிபிள்ளை.

''மீனாவை நான் மாதவனுக்குத்தான் கல்யாணம் செய்யப் போகிறேன்.''

''ஊம்; அப்படியானால், பாதிச் சொத்தை நான் அவன் பேரில் எழுதிவைக்க வேண்டியதுதான். இல்லாவிட்டால்.. ''

''எழுதி வையுங்களேன்! உங்கள் சொத்துக்கு அவன் காத்துக்கொண் டிருக்கிறதுபோல! நீங்கள் கொடுத்தாலும் வாங்கமாட்டான். வேண்டுமானால் பாருங்கள்...''

இப்பொழுது, ''மாமா!'' என்று அழைத்துக்கொண்டு, மாதவன் வாசற் கதவைத் தட்டவே, அசட்டு முகங்களுடன்

அவர்கள் பேச்சை நிறுத்தினர். பார்வதியம்மாள் கதவைத் திறக்கப் போனாள்.

## 18

கதவைத் திறந்து பார்வதியம்மாள், மாதவனை, அன்புடன் வரவேற்றாள். "இன்றைக்குத் தோட்டத்துக்குப் போகவில்லையா?"

'அங்கிருந்துதான் வருகிறேன், மாமி. வேலை நடந்து கொண்டிருக்கிறது. கடப்பாறையும் மண்வெட்டியும் இல்லாமல் சிலரால் வேலை செய்ய முடியவில்லை. மாமா, உங்களிடத்திலே இருக்கிறதையெல்லாம் கணக்கிட்டுக் கொடுங்கள். நான் இரண்டு நாளில் திருப்பித் தந்துவிடுகிறேன்."

"உனக்கு அப்படி எத்தனை வேணும்?"

"எத்தனை கொடுத்தாலும், வேலை இருக்கு!"

பிறகு வீராசாமி பிள்ளை, வேலைக்காரனை ஓர் அறைக்கு அழைத்துக்கொண்டு போய், அங்கே இருந்தவைகளைப் பொறுக்கி எடுத்துக்கொள்ளச் சொன்னார்.

சாமான்களை எடுத்துக்கொண்டு புறப்படும்பொழுது, "நாங்கள் என்ன செய்கிறோம் என்றுதான் அந்தப் பக்கம் வந்து பாருங்களேன், மாமா!" என்றான் மாதவன். "நான் கட்டாயம் வருகிறேன், அப்பா. இப்போதானே நிம்மதி உண்டாயிற்று? இரண்டு தினங்களாகக் கழனிப் பக்கங்கூடப் போகவில்லை. அதைப் பார்த்துக்கொண்டு அப்படியே, வருகிறேன்!" என்றார் பிள்ளை.

"உங்களுக்கு அடையாளம் தெரிய வேண்டுமே" என்றான் மாதவன் குறும்புச் சிரிப்போடு.

"சிரிக்கப் போகிறார்கள். எனக்கா அடையாளம் தெரியாது? நீ சுற்றிப் போவதற்குள், நான் குறுக்கு வழியில் வந்துவிடுவேன்" என்று அவர் சட்டையைப் போட்டுக்கொள்ளப் போனார்.

பயிர் முழுவதையும் ஒருமுறை பார்வையிட்டபின், வீராசாமிபிள்ளை, கண்ணையிரம்பிள்ளையின் மேய்ச்சல் காட்டுக்குப் புறப்பட்டார். குறுக்காகப் போனுல் அது இரண்டு மைல்களுக்கு உள்ளாகவே இருக்கும் என்பது அவருடைய அபிப்பிராயம். பாதி வழி நடந்தும், அவருக்கு இடம் பிடிபடவில்லை. 'ஒரு சமயம் வழி தவறி வந்துவிட்டோமோ?' என்று அவர் சந்தேகப்பட்டார். திரும்பிப் பார்த்தார். வந்த வழி சரியான வழிதான்.

ஒரு பனந்தோப்பு அடையாளம் உண்டு. ஆனுல் ஒரு மரத்தைக்கூடக் காணவில்லை! சிறிது காலமாக அவருக்குத் தூரப் பார்வை குன்றிக்கொண்டு வந்ததால், மற்றும் சிறிது முன்னே சென்று, கண்களில் சூரியவெளிச்சம் விழாமல், கையால் மறைத்துக்கொண்டு, நாலா பக்கங்களிலும் சுற்றிப் பார்த்தார். அரை மைல் தூரத்தில் ஏராளமான ஜனங்கள் வேலை செய்துகொண்டிருப்பதாகத் தெரிந்தது. அத்திசையை நோக்கி நடந்தார். நெருங்க நெருங்க என்ன காட்சி! ஆண்கள், பெண்கள், சிறுவர்கள் உட்பட, ஏராளமான ஜனங்கள், மூலைக்கு மூலை வேலை செய்துகொண்டிருந்தனர். சிலர் மண் வெட்டிக்கொண்டிருந்தனர். சிலர் உழுதுகொண்டிருந்தனர். சிலர், உழுது, சேருக்கிய நிலத்தில் தானியத்தைத் தெளித்துக்கொண்டிருந்தனர். மற்றும் சமீபமாகப் போகவே, வெட்டிய பனை மரங்களின் கட்டைகள் தென்பட்டன. வீராசாமி பிள்ளைக்கு விஷயம் இப்பொழுதுதான் சற்று விளங்கியது. ஆனுல், எவ்வளவு தொழிலாளர்கள்! கடைசியில், மற்ருெரு காட்சி அவரைச் சிலைபோல் நிற்க வைத்தது.

சுமார் ஆறடி அகலத்துக்கு ஒரு வாய்க்கால் ஓடி வந்துகொண்டிருந்தது! அதில் இறங்கினுர். முழங்கால் ஆழத்துக்கு நீர் விசையாய் ஓடிக்கொண்டிருந்தது! ஜலத்தைக் குடித்துப் பார்த்தார். இளநீரை ஒத்திருந்தது. காட்டு வாய்க்காலின் ஜலம் என்று தெரிந்துகொண்டார். வாய்க்காலைத் தாண்டி, நின்று பார்த்தார். ஒரு காலத்தில் காடு மேடாய்க் கிடந்த

மேய்ச்சல்காடு, ரஸ்தாவின் ஓரத்தில் சிறிது பாகம் தவிர, மீதி யெல்லாம் ஒரே சமமாகவும், ஒரு செடி கொடியின்றிச் சுத்த மாகவும், அங்கே ஓடிவரும் வாய்க்காலின் நீர், தானே பாயத் தக்க பள்ளத்திலும் அமைக்கப்பட்டிருந்தது. என்ன அச்சுக் கட்டுக்கள்! எவ்வளவு சிறு வரப்புகள்! எவ்வளவு வடிகால்கள்! வீராசாமி பிள்ளையால் தம் கண்களையே நம்ப முடியவில்லை! நந்தனூரின் வயல்களை ஆண்டவன் பயிரிட்டது, அவர் நினைவுக்கு வந்தது. இப்பொழுதுதான், 'நன்மை செய்தவனுக்குக் கடவுள் ஒரு நாளும் தீமையை அணுகவிட மாட்டார்!' என்ற பூரண நம்பிக்கை அவருக்கு வந்தது. பெரியவரான கண்ணுயிரம்பிள்ளை சொல்வது அவ்வளவும் சத்தியமான பேச்சு என்று நம்பினர். அடுத்த வருஷத்தில் நாயக்கர் கடன் தீர்ந்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை.

அவ்வளவு பனை மரங்களும் என்ன ஆயினவோ என்று அவர் வியந்துகொண்டிருக்கும்பொழுது அவரைக் கண்டு கொண்ட ஆண்டி, ஆனந்தத்தால் தன் பற்களையெல்லாம் காட்டிக்கொண்டு, ஓடிவந்து, கும்பிடு போட்டான்.

"பனைமரங்களெல்லாம் எங்கேடா?" என்று வீராசாமி பிள்ளை கேட்டார்.

"அதோ, கறுப்பா அடுக்கி வச்சிருக்குது பாருங்க, காட்டு வாய்க்கால் ஓரமாய், தெரியுதுங்களா?"

"ஊம், ஊம்!"

"அதையெல்லாம் துண்டு போட்டு, செங்கல் சூளைக்குப் போடணுமாம். ரோட்டு ஓரமா சின்ன அய்யா பத்துக் காணி நிலத்துலே குளம் வெட்டப் போறார் இல்லே? அந்த மண்ணுலே செங்கல்லைச் சுட்டு, அந்தப் பக்கம் பெரிய மேடு இல்லே. அதுலே, அம்பது அறுபது வீடு, ஒரு பள்ளிக்கூடம், ஒரு ஆஸ்பத்திரி என்ன என்னமோ கட்டப்போறாராம், யசமான்!"

"கட்டட்டும், கட்டட்டும். அவன் நல்ல அறிவாளிடா! அவனுக்குச் சாமி துணை இருக்கும்!" என்று பிள்ளை சொன்னது,

ஆண்டிக்குச் சிறிது ஆச்சரியமாக இருந்தது. "ஏண்டா, சேருக்கினது முப்பது காணி இருக்குமா?"

"அவ்வளவு தானுங்க; அந்தட்டம் உளுறது ஒரு இருவது காணி, இந்தட்டம் ஒரு இறவத்தஞ்சு காணி, எல்லாத்துலேயும் சேத்து, வையகுண்டான் விதைச்சுடப் போறமுங்க. மண்ணு, திடமான மண்ணுங்க. குப்பை செத்தை மக்கிப்போன இடமுங்க. ஒரு நூறு வண்டி நெல் ஆகாதுங்க, யசமான்?"

"தாராளமாய், ஆகும்டா! பலே, பலே. எனக்கு ரொம்பச் சந்தோஷமடா!" என்று அவர் சொன்னபோது, இதையெல்லாம் மாதவனோடு நாளைக்கு ஆளப்போவது, தன் குழந்தை மீனாட்சியும் அல்லவா என்ற எண்ணம் அவர் சந்தோஷத்தை மற்றும் அதிகரித்தது.

"எல்லாம் சின்ன அய்யாவினுடைய யோசனைதானுங்க. பெரிய அய்யாவுக்கு, வேலை துவக்குகிறவரையிலும், ஒண்ணுமே தெரியாதுங்க!" என்றான் ஆண்டி.

"உங்கள் சேரி முழுவதும் வேலை செய்கிறார்கள்போல் இருக்குதே!"

"ஆமாங்க! எல்லாம் இருநூறு பேர் தேருவாங்க!"

"இவர்களுக்கு என்ன கூலி?"

"ஒரு வாரத்துக்குக் கூலி இல்லைங்க! வாங்க மாட்டேன்னிட்டாங்க. அது அன்போடு செய்யிற வேலைங்க. யாரும் பொளுது, நேரம் பாக்கலீங்க! எங்கப்பனும் எங்க ஊர்க்காரரும் சேர்ந்து, பேசிக்கிட்டதுங்க. இந்த முப்பது காணியிலே கையை வைக்கலைங்க. இப்போ உளவு நடக்குதே, அந்த நாப்பத்தஞ்சு காணியிலே அரை அடி, முக்கால் அடி பள்ளம் எடுத்தோமுங்க."

"அடே, அதுக்கே ஒரு வாரம் போறுதேடா!"

"இல்லையிங்க, நாலு நாளுலே முடிச்சிட்டோம். மூச்சு விடாமே வேலை செஞ்சமுங்க. இருட்டோடு வருவோம். சோறு குடிக்கிற நேரம் போக அதே வேலை தானுங்க. அப்

புறம் இருட்டின பிறகுதான் போவோம். சில பேருக்குக் கை கொப்புளிச்சுக்கூடப் போச்சுங்க!''

"கேட்கக் கேட்க வேடிக்கையாக இருக்கிறதே'' என்றார் வீராசாமிபிள்ளை.

"அறுப்பு அறுக்கிற போதில்ல தெரியப்போவுது! பண்ணைக்காரரு எங்களுக்கு நெல்லை அளக்காமல் விடமாட்டாரு. ஆனால் எங்களுக்கு வாங்க இஷ்டமில்லை.''

"அடே, சந்தோஷமாய்க் கொடுப்பதை மறுக்கக் கூடாது!''

"எங்க விசுவாசத்தை எப்படிக் காட்டறது, யசமான்? அவரு அளந்தால், கொஞ்சமாவா அளப்பாரு! என்னடா ஆண்டி, உங்க சங்கதியைச் சொன்னியா?'' என்று அங்கே வந்த ஒரு கிழவன் ஆண்டியைக் கேட்டான்.

"இல்லை'' என்று, அவன் அசட்டுச் சிரிப்புடன் தலையை அசைத்தான்.

"இப்போ, ஆண்டி பண்ணைக்காரன் ஆயிட்டானுங்க. அந்த ஆலமரத்து மூலையிலே பத்துக் காணியைச் சின்ன அய்யா அவனுக்கு எழுதி வச்சிட்டாரு!''

"ஓ!'' வீராசாமிபிள்ளையால் ஆச்சரியத்தைத் தாங்க முடியவில்லை. "பொன் விளையும் நிலமாச்சுதே!'' என்றார். அவர் சந்தோஷப்பட்டதாக ஆண்டி எண்ணிக்கொண்டான். ஆனால், இவ்வளவு நல்ல பூமியை இனமாகத் தரலாமா என்ற எண்ணம், அவர் மனத்தை ஒரு கணம் பாதித்தது. மறு கணத்தில், பாளையத்தின் விசுவாசமும் பெருந்தன்மையும், அவனன்றி இவ்வளவு கட்டுப்பாடாக வேலை நடந்திருக்க முடியாதென்ற நம்பிக்கையும் அவர் மனத்தில் உண்டான அழுக்கைப் போக்கின. "பாளையத்துக்கு என்ன செய்தாலும் தகும், அப்பா!'' என்றார்.

"அவங்க இருக்கிற இடத்துக்குப் போகலாங்களா?'' என்று ஆண்டி, முன் நடந்தான். "சரி, போ'' என்று பிள்ளை

பின்தொடர்ந்தார். ஆனால் அடிக்கடி அவரால் திரும்பிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

வீராசாமிபிள்ளையைக் கண்டதும் எல்லோரும் எழுந்தனர். கண்ணுயிரம்பிள்ளை மணலில் சாய்ந்து உட்கார்ந்தவாறு, "வா, இப்படி உட்கார்" என்று சமிக்ஞை செய்தார்.

"ஏற்பாடுகள் எப்படி இருக்கின்றன, மாமா?" என்று கேட்டான் மாதவன்.

"அற்புதமாக இருக்கின்றன! விவசாயத்தைப்பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதென்று இருந்தேன். ஓ! அந்த அணையைப் பார்க்கவில்லையே!" என்று அவர் எழுந்தார். மாதவன் முதலானோர் கூடவே சென்றனர். சுமார் முப்பது அடி அகலம் இருந்த காட்டு வாய்க்காலின் குறுக்கே, நீரை அடைப்பதற்கு மதகு போல் பலகைகளால் அமைக்கப்பட்டிருப்பதைச் சோதித்தார்

"பலே, பலே! இதெல்லாம் உனக்கு எப்படித் தெரிந்தது!" என்றார் வீராசாமிபிள்ளை ஆனந்தத்தோடு, மாதவனைத் தட்டிக்கொடுத்தவாறே.

"மனிதன் தெரிந்துகொள்ள முடியாதது என்ன இருக்கிறது, மாமா?" என்றான் மாதவன் சிரித்துக்கொண்டு. "இந்தக் காட்டு வாய்க்காலை அநேகருக்கு உபயோகப்படும்படி செய்ய வேண்டும், மாமா!"

"செய், செய். என்னுங்க, நாம் வாழ்நாளெல்லாம் செய்ய முடியாததை, மாது ஒரு நொடியில் செய்து காட்டிவிட்டான்!" என்றார், வீராசாமிபிள்ளை கண்ணுயிரம்பிள்ளையைப் பார்த்து.

"அவன் ஒரு ஏது, அவ்வளவுதான், வீராசாமி! ஆண்டவனுடைய அருள் இல்லாமல் இவ்வுலகில் எது நடக்கும் என்கிறாய்?" என்றார் கண்ணுயிரம்பிள்ளை.

"மெய்தான், அப்பொழுது இந்தப் பண்ணைக்கு, 'அருள் பண்ணை' என்று பெயர் வைத்துவிடுங்கள்."

கண்ணுயிரம்பிள்ளை, வீராசாமிபிள்ளையை ஒரு கணம் உற்றுப் பார்த்தார். "வீராசாமி, இதை நீ சொல்வதால் என் மனம்

எவ்வளவு பூரிக்கிறது, தெரியுமா!" என்றார் ஆனந்த பரவசத்தோடு.

நான்கு மாதங்கள் ஓடின. 'அருள்பண்ணை'யில் அறுவடை ஆரம்பித்தது. எதிர்பார்த்ததற்கு அதிகமாக விளைந்து விட்டது.

ஒரு நாள் மாலை. கண்ணாயிரம்பிள்ளையும் வீராசாமிபிள்ளையும் குடும்ப சகிதமாக அங்கே வந்து, அனைத்தையும் கண்டு களித்துக்கொண் டிருந்தனர். இச்சமயத்தில் சில ஹரிஜனச் சிறுமிகள், ஆனந்தம் தாங்க மாட்டாமல் ஒரு களத்தில் கும்மியடிக்க ஆரம்பித்தனர். அதைச் சமீபத்திலிருந்து பார்க்க வேண்டுமென்று, மீனாட்சி, அத்தானை அழைத்துக்கொண்டு களத்துக்குப் போனாள். அவ்விருவரும் கும்மியைக் கண்டு ஆனந்தப்பட்டுக்கொண் டிருக்கையில், வீராசாமிபிள்ளையும் கண்ணாயிரம்பிள்ளையும் வேறு விஷயத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர்.

"அடுத்த மாதத்திலே முகூர்த்தத்தை நடத்திவிட வேண்டும். மீனாவுக்கு வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை" என்றார் வீராசாமிபிள்ளை.

"நடத்திவிடேன். நான் வேண்டாமென்று சொல்கிறேன்! பொறுப்பெல்லாம் உனக்குத்தான். நாங்கள் பிள்ளை வீட்டுக்காரர்கள் என்பதை மறந்துவிடாதே!" என்றார் கண்ணாயிரம்பிள்ளை மலர்ந்த முகத்தோடு.

"என்னால் எப்படி மறக்க முடியும்!" என்றார் வீராசாமிபிள்ளையும் சிரித்த முகத்தோடு.

முற்றும்



# அருள் பண்ணை

கிராமத்தில் இரண்டு பண்ணைக் காரர்கள்; ஒருவர் வள்ளல். மற்றவர் உலோபி. இருவரும் உறவினர். உலோபிக்கு ஒரு பெண் இருக்கிறாள். இவள் வள்ளலின் மகனுக்கு முறைப் பெண். காதலர் இருவரும் ஒருவரை ஒருவர் மணக்க உறுதி கொண்டுவிட்டனர்.

வள்ளல், தம் வள்ளன்மையாலும் மழைக் குறைவாலும் ஏழையாகிறார். இவரைப் பல வகைத் தொல்லைகளுக்கு உள்ளாக்குகிறார் உலோபி.

ஆனால் கிராம மக்களும் ஆண்டவனும் முன்னவர் கட்சி. பல இடையூறுகள்; சச்சரவுகள். ஆனாலும் வள்ளல் மனப் பண்பு மாறுவதே இல்லை. சாந்தமும் அன்புமே அங்கு நிலவுகின்றன.

முடிவில் மணத்தோடு மங்கலமாக முடிகிறது நாவல்.

# புதிய வெளியீடுகள்

**அன்னை பூமி - பி. எம். கண்ணன்** ரூ. 6 0

பணக்காரத் தந்தை ஒருவர், பணக்காரப் பெண் ஒருத்தியைக் காலேஜில் படிக்கும் தம் மகன் கழுத்தில் கட்ட முனைகிறார். ஆனால் நன்றாக வாழ்ந்து கெட்டுப்போன, தன் ஊரைச் சேர்ந்த, தான் சிறு வயசு முதல் பழகிய, ஓர் அழகிய குணவதியான பெண்ணை அவன் காதலிக்கிறான். இந்தப் பிரச்னையை ரசமாகப் பின்னி இனிமையாக முடிக்கிறார் ஆசிரியர்.

**அணையா விளக்கு - ஆர்வி** ரூ. 5 0

தமிழ் நாட்டு வாழ்க்கையைச் சித்திரிக்கும் இந்த நாவலில் அழகும் பண்பும் மிக்க, வேறு ஜாதிப் பெண் ஒருத்தியை அறிவும் துணிவும் கொண்ட வாலிபன் மணக்கிறான். இருள்போல் அறியாமை மண்டிய சமூகத்தில் எத்தனையோ பிரச்னைகள் முளைக்கின்றன. கத்தி முனையில் நடப்பதைப் போன்ற இந்தத் துணிகரமான கதையை ஆர்வி அழியாச் சிற்பம்போல அருமையாகவும் அற்புதமாகவும் படைத்திருக்கிறார்.

**கன்றின் குரல் - கி. சரஸ்வதி அம்மாள்** ரூ. 4 0

கிராமத்திலிருந்து நகரத்துக்குப் படிக்க வந்த இளைஞனையும் அவனிடம் பரிவும் அன்பும் கொண்ட மணமான பெண்ணையும் வைத்து, மனத் தத்துவ ரீதியான ஓர் ஒப்பற்ற நாவலை உருவாக்கியிருக்கிறார், ஆசிரியை. கிராம வாழ்க்கையின் எளிமையும் சுத்தமும், நகர வாழ்க்கையின் பகட்டும் படாடோபமும் சமவெளியில் பாயும் நதிக்கு இரு கரைகள்போல் அழகு செய்கின்றன.

**கலைமகள் காரியாலயம், சென்னை-4.**